# முன்னும் பின்னும்

தொகுப்பாசிரியர்

உவமைக்கவிஞர் **சுரதா**

**சேகர் பதிப்பகம்**

66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர்,

சென்னை — 600 078.

முதற்பதிப்பு : 23 . 11 . 2004

தாள் : 18.6 கி.கி., டெம்மி
பக்கங்கள் : 208
எழுத்து : 10 புள்ளி, 11 புள்ளி

**விலை : ரூ. 90.**

ஒளியச்சு : குரு கம்ப்யூட்டர்ஸ்
சென்னை - 600 024

அச்சகம் : ஜுபிட்டர் பிரிண்டர்ஸ்
சென்னை - 24

# புகுமுன்...

இதுவும் ஒரு கலைக் களஞ்சியம் ! கருத்துக்களின் களஞ்சியம்! கற்றோர் சிறப்பும் கல்விச் சிறப்பும், காலக்குறிப்பும் கலையுலகச் சிறப்பும் கூடிக் குவிந்துள்ள நூல் இது. கவிஞர் சுரதாவின் அமைதியான வாழ்வில் அயராமல் சேர்த்துவைத்த புதையல்! அவருக்குத் தமிழுலகம் மிகவும் கடமைப்பட்டுள்ளது. அவர் பணி அரிய தமிழ்ப் பணி

எண்ணற்ற பெரியோர்களது எண்ணங்களின் வண்ணங்களை வகைவகையாக வார்த்தளிக்கும் உவமைக் கவிஞரின் ஆர்வமும் ஆற்றலும் ஆய்வு நோக்கும் வேறு எவர்க்கு வரும்? எத்தனை பேர்க்கு வந்திருக்கிறது?

மனித மனத்தின் மட்டற்ற வளர்ச்சிக்கு, காலந்தோறும் கருத்துகள் கொண்ட கோலத்துக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது இத்தொகுப்பு.

நூல்கள் பலவற்றையும் எழுத்தாளர் பலரையும் மறைவில் இருந்து வெளிப்படுத்துகிற வரலாற்றுத் தொண்டு.

கடந்த நூற்றாண்டில் கருத்துவளம், சொல்லோட்டம் வளர்ந்துள்ள நிலையை உணர்த்தும் தொகுப்பு இது.

எழுத்தாளர்கட்கும், இளங்கவிஞர்கட்கும் இது ஒரு பாடநூல்; எல்லார்க்கும் இன்பந் தரும் பாடல்நூல்.

மொழி வளர்ச்சி நோக்கில் பயன் கருதி ஆர்வமுடன் தொகுத்தளித்துள்ள உவமைக் கவிஞர் அவர்களைத் தமிழகமே பாராட்டும். கவிஞருக்கு மனமார்ந்த நன்றி.

திரையுலகில் இலக்கியம் எப்படியெல்லாம் வேர்விட்டுச் செழித்திருக்கிறது என்பதை இத்தொகுப்பு கண்ணாடிபோல் காட்டுகிறது, பழைய சாதனைகளைப் பார்த்தாவது புதிய படைப்பில் கலையுலகம் மனம் திருப்பலாம்!

விளம்பர வெளிச்சத்தில் காணப்பட்ட கவிஞர்கள், எழுத்தாளர்கள் சிலரே ஆவர். வெளியில் பரவலாக அறியப்படாமல் மறைவாய்ப் போனோர், மறைக்கப்படுவோர் எனும் எழுத்தாளர் பலராவர். கால அலைகளில் கரைந்த கவிஞர்களை, கலைஞர்களைத் தேடி நம் கண்ணுக்கும் கருத்துக்கும் காட்சிப்படுத்தும் வரலாற்றுப் பெரும்பணியை உவமைக்கவிஞர் ஆற்றியுள்ளார். இதனை இத்தொகுப்பில் காணலாம்.

அறிவுப் பயிர்களின் வேர்களையும் அதன் வளர்ச்சி விழுதுகளையும் கண்டறிவதும் தொகுத்தளிப்பதும் எளிதான செயலன்று. பலநூல்களைத் தொடர்ந்து படிப்பதும் அதிலிருந்து தகுதியானவற்றைத் தரம் பார்த்துத் தேடித் தொகுப்பதும் அவற்றில் ஒன்றை ஒன்று சார்ந்தனவாய் இருப்பதைக் கண்டறிந்து அதன்

தொடர்பை வெளிப்படுத்துவதும் அரிய செயல். இது ஆர்வத்தின் வெள்ளோட்டம்; ஒப்பு நோக்கும் ஒப்பற்ற பணி.

காலந்தோறும் சிந்தனையாளர்கள் தத்தம் வாய்ப்புகளுக்கேற்ற சூழ்நிலையில் வெளிப்படுத்துகின்ற எண்ணத் துளிர்களை, கருத்து மலர்களைத் தேடித் தொகுத்துப் பார்க்கையில் மொழியின் கருத்து வளர்ச்சி விரிவாய்த் தோற்றமளிக்கிறது. நாட்டின் பல்வேறு பகுதிகளில் தோன்றி வாழ்ந்த எழுத்தாளர் பலரை நாம் அறிகின்றோம். அவர்கள் வாழ்ந்த காலத்தின் சிந்தனை வளத்தை அறிகின்றோம். கலைகள் வளர அவர்கள் அளித்த கருத்து வளம் தெரிகின்றது.

கவிதைகள், நாடகங்கள், பலதுறை நூல்கள் தோன்றியுள்ளன. அவற்றின் தொடர்ச்சியாகவும் காலவளர்ச்சிக் கேற்பவும் எழுத்தாளர் தம் படைப்புகள் மலர்ந்துள்ளதை நிரல்படத் தொகுத்தளிக்கும் கடுமையான பெரும்பணியில் ஈடுபட்ட கவிஞரின் ஆய்வுத் தொண்டு மொழி வளர்ச்சிக்குதவும் முதிர்ந்த பணியாகும்.

இந்நூலின் பயன்கள் பலப்பலவாகும்.

எழுத்தாளர்களையும் அவர்களின் நூல்களையும் தெரிந்து கொள்கிறோம். தமிழ்திரையுலகில் தொடக்கத்திலிருந்து வந்திருக்கிற படங்களைத் தெரிந்துகொள்கிறோம்.

பாடலாசிரியர்கள் பலரைப்பற்றிப் படித்தறிகிறோம். இசை அமைப்பாளர்களையும், பாடல்களைப் பாடியோரையும் தெரிந்து கொள்கிறோம். நூறாண்டுகளுக்கு மேற்பட்ட கால அளவில் எழுத்து நடைப் பாங்கு, மொழியை ஆளும் முறைமை, சொல் வழக்கு முதலியவற்றின் அவ்வக் காலப் பதிவுகளை உள்ளவாறே பார்த்து அறியலாம், மொழியை வளர்க்கும் சிந்தனையாளர்களும், படைப்பாளர்களும் மக்களிடம் கலையுலக வழியில் கருத்துகளைப் பரப்பி வந்துள்ள வரலாற்றை அறிகிறோம். இலக்கிய வரலாற்றுக்குரிய இப்பகுதியைக் கருத்தோடு கண்டளித்த கவிஞருக்குத் தமிழுலகில் நிலையான இடம் உண்டு.

சொல்லுருவம் பெற்ற கருத்துகள் நூல்களாகவும் இசைப் பாடல்களாகவும் திரையுலகம் வழியாக வளர்ந்து செம்மொழிக்குச் சிறப்பு சேர்க்கும் வரலாற்றைத் தரும் வாய்ப்பைப் பெற்றமைக்கு மகிழ்கின்றோம்.

வரலாற்றுணர்வுடைய கவிஞர் சுரதா அவர்களின் எண்பத்து நான்காம் ஆண்டு பிறந்த நாள் விழாவில் *(23.11.2004 செவ்வாய்க் கிழமை)* அவரது அயரா உழைப்பின் அறுவடையாக இந்நூலைப் பதிப்பித்து வெளியிடுவதில் பெருமை அடைகிறோம்.

அறிவுலக முன்னோடிகளை நினைவு கொள்ளும் நாளே அரிய நாளாம்! வளர்க அறிவுலகம்!

அன்பன்,

*வெள்ளையாம்பட்டு சுந்தரம்*

## டி.வி.நடராஜ ஆச்சாரி

கதிரேசன் துணை

எமது மகத்தான 2வது வாரம்

இலக்கிய நாடகம் புராண நாடகம்

**7 வயது மாஸ்டர் சங்கரன் - வித்யாபதி**

**9 வயது மாஸ்டர் ஆதம்சா - நாரதர்**

**புளியமாநகர் P.K.S. ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியாரால்**

**பழனி பழைய தாராபுரம் ரஸ்தா அபீபு ரஹிமான் சாயபு எலெக்ட்ரிக் தியேட்டரில்**

**18.9.44 திங்கட்கிழமை இரவு 10.30 மணிக்கு**

**சரஸ்வதி சபதம்**

என்னும் புதிய புராண நாடகம் நடைபெறும்.

டிக்கட் வரியுள்பட : சேர் 1-20 பெஞ்சு 0-9-0 தரை 0-4-6

பூரண உரிமை பெற்றது.

ஆசிரியர் – T. V. நடராஜ ஆச்சாரியார்.

தழைவிரிபொற் பூங்கமலத்
தண்முகமும் திங்களென்றால்
வளர்வதுவும் தேய்வதுவும்
மாசு துலங்கிடுமே!

***நூல் :மனமோகன வள்ளியம்மை பரதம் (1922), நூலாசிரியர் : முத்துவளபுரம் மதுரபாலகவி வீ.பி.எம்.ராமசிங்கம் என்.ஆர்.. பக்கம் : 158, பகுதி : சுப்பிரமணியர் வள்ளியம்மையின் அவயவத் தருமைகளை வர்ணித்தல்.***

சந்திரன் இவள் முகம் என்றால்
வரவர அதன் கலை தேயுமே
களங்கம் தோயுமே

*படம் : ராமாயணம் (1932), பாடலாசிரியர் : டி.வி.நடராஜ ஆச்சாரி*



நேற்றுவரு வாயென்று வழி பார்த்திருந்தேனே - விழி
பூத்துப்போகும் படியாய்க் காத்திருந்தேனே சாமி.

*நூல் : பெரிய பவழேந்திரி சபா (1906), பக்கம் : 30, நூலாசிரியர் : V.V. அப்பாள பிள்ளை.*

நேற்று வருவீரென்று நான் காத்திருந்தேன் வாசலிலே
வேற்றுமை நினைத்தால் மனதாற்றுவேனோ பூசலிலே

*படம் : குலேபகாவலி (1935), பாடலசிரியர் : டி.வி.நடராஜ ஆச்சாரி, பாடியவர் : டி.பி.ராஜலட்சுமி*



கன்னலன்றி வேம்புநுகர் காமத் துரோகிகள்போற்
பிள்ளையொரு தெய்வத்தைப் பேசோமே - எந்நாளும்
சாற்றுவதுங் காமகலை சாதிப்ப துங்கரணம்
போற்றுவதும் காமனடிப் போது.

பொருள் : இல்வாழ்க்கையில் மதுரமான கரும்பு போன்ற மடந்தையருடைய ஆலிங்கன முதலியவைகளா லுண்டாகும் இன்பத்தைவிட்டுக் கைப்பான வேம்பு போன்ற துறவறத்திற் றவஞ் செய்யப் புகுந்து வருந்துகின்ற காமத்துரோகிகள் போல நாம் மற்றொரு தெய்வத்தைத் துதி செய்யோம். எந்நாளும் நாம் படிப்பதும் மடந்தையரிடத்துக் கலவியிலே, துதிப்பதும் மன்மதனுடைய பாதகமலமே என்றவாறு.

*நூல் : கொக்கோகம்,நூலாசிரியர் : அதிவீரராம பாண்டியன், பாயிரம் பாடல் : 1, நூதனவுரை : கொற்றமங்கலம் இராமசாமிப் பிள்ளை.*

மன்மதனே தெய்வமென்று என்மனந்த னிலேயிந்த
மாதருக் கரசி வுண்மை நாட்டினாள் - எப்
போதுமேயி லாத மையல் மூட்டினாள் - அந்த
மங்கையோடு கலந்து போக
சுகம்பெறாமல் வருந்தி னாலினி
மாநிலத்தில் வாழ்க்கையும்பா ழாகுமே - உயிர்
தானிலைத் திராதகன்று போகுமே.

*படம் : லலிதாங்கி (1935), பாடலாசிரியர் : டி.வி.நடராஜ ஆச்சாரி, பாடியவர் :வி.ஏ.செல்லப்பா.*



முருகு சந்தனக் குழம்பு பூசுவார் விரகத்தீயை
மூட்டி மூட்டி விசிறி வீசுவார்
கருகு தேயுட லுருகு தேயென்பார் விரித்தபூவுங்
கரியு தேமுத்தம் பொரியு தேயென்பார்.

அருகி லிருந்து கதைகள் நடத்துவார் எடுத்து மாதர்
அணைத்து வாழைக் குருத்திற் கிடத்துவார்
பெருகு நன்னகர்க் குறும்ப லாவினார் வசந்த மோகினி
பெருநி லாவி னொடுக லாவினாள்.

*நூல் : திருக்குற்றாலக் குறவஞ்சி, நூலாசிரியர் : மேலகரம் திரிகூடராசப்பக்கவிராயர், பகுதி : வசந்த வல்லியைப் பாங்கிகள் உபசரித்தல், பக்கம் : 20, கண்ணிகள் : 1, 2*

தோழிகள் : காம்பரிந்த மல்லிகை சேர்
பூம்படுக்கையை விரித்தோம் அம்மா

சீமந்தனி : காந்துதடி தேகமெல்லாம்
சோர்ந்ததடி நீரிருப்பீர் சும்மா

தோழிகள் : வெட்டிவேர் விசிறிகொண்டு
வெப்பந்தீர வீசுவோமே மாதே

சீமந்தனி : மேளம் கீர்த்தி காற்றுவந்து
மேவினால் அசையுமோ ஆகாதே

தோழிகள் : பாவையுன் மேனி குளிராகவும்
பன்னீர் தெளித்தோம் மாதே.

சீமந்தினி : பன்னீர் வெந்நீர் ஆச்சுதடி
என்நிலைமை மாறிட லானேனே.

*படம் : சீமந்தனி (1936), பாடலாசிரியர் : டி.வி.நடராஜாசாரியார், பாடியவர்கள் : டி.பி.ராஜலட்சுமி, M.D.ராஜம், பார்வதி,பட்டு, ருக்மணி*



நன்மதி கதிரோ னென்றும்
நடக்கின்ற திசையை விட்டு
தென்வடல் சென்றிட் டாலும்
திங்களின் குலத்தில் வந்தோன்
சொன்மொழி யிரண்டா மென்று
சொற்பனத் திலுமெண் ணாதே
உன்மன திஷ்டம் போல
உதவுவே னுரைசெய் வாயே.

*நூல் : ஏகாதசி மகத்துவம் என்னும் உருக்குமாங்கதன் நாடகம் (1935), பக்கம் : 74,*
*நூலாசிரியர் : விருதுநகர் A.கந்தசாமிக் கவிராயர்*



மாதர்கள் திலக மேவான்
மதிரவி மாறி னாலும்
வாதெவர் புரிந்திட் டாலும்
வல்வினை தடுத்திட் டாலும்

காதல் மெய் மாறு மோதான்
கருதியே உறுதி கொள்வாய்
பூதல வேந்தர் சூழப்
புதுமணம் புரிகு வேனே.

*படம் : சீமந்தனி அல்லது சோம வார விரத மகிமை,(1936) பாடலாசிரியர் டி.வி.நடராஜாசாரியார்*



மதுவே சுக மிதுவே! தெய்வ மிதுவே!
மாறாத பேரின்பம் ஆறாகப் பெருகச் செய்யும் (மதுவே)
இதுவே நல்ல சொர்க்கம் வைகுண்டம்
எந்த நாளும் எனக்குச் சொந்தம்
இகத்திலும் பரத்திலும்
சுகத்தையே கொடுத்திடும் (மதுவே)

*படம் : தேவதாஸ் (1937), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர் : P.V.ராவ்.*

பார்த்தாலே போதையேறும் பனங்கள்ளு மொந்தையே
பக்கமாய் குந்தியே பருகலாம் முந்தியே
ஆத்தாடி அதுதான் சொர்க்கம் அடடா ரொம்ப நேர்த்திடா
அண்ணே இதுதான் கண் கண்ட தெய்வம்.
அளவாய்க் கொஞ்சம் ஊத்தடா
நேத்தெல்லாம் தம்மில்லாமல் நேரம் பாழாச்சடா
நெதைக்கும் இதைப்போல் கிடைச்சா குடிச்சு
நிகரில்லை நம் பேச்சுடா.

*படம் : குமார குலோத்துங்கன் (1939), பாடலாசிரியர் : நடராஜ ஆச்சாரி A.M.நடராஜ முதலியார், பாடியவர்கள் : V.M.மீனன், K. கோவிந்தசாமி.*



ஆசை வச்சேன் ஒங்க மேல
ஆளான மாசி மாசம்
பேச நல்ல ஆசை ஐயா
பிறருக்கிடம் வையாதையா!

*நூல் : தமிழ்நாட்டுப் பாடல்கள் (தொகுப்பு நூல் ), பகுதி : காதல், பாடல் : 17, பக்கம் : 166, தொகுப்பாசிரியர்: நா. வானமாமலை M.A.L.T,*

ஆசே வச்சே ஒ மேலே நா
ஆளான மாசி மாசம்
ஆளான மாசி மாசம்
ஐயோ செய்யாதே மோசம்.

*படம் : மதுரைவீரன் (1939), பாடலாசிரியர் : T.V.நடராஜ ஆசாரி, பாடியவர் : T.P. ராஜலட்சுமி*



*ராகம் - நாதநாமக்ரியை* *தாளம் - ரூபகம்*

தாயும் தகப்பனிரவல் – அன்று
தாலிகட்டிக் கொண்ட பெண்டிருமிரவல்
சேயும் பொருளும் இரவல் – இந்த
ஜகமெட்டு திக்கும் செங்கோலு மிரவல்
பெட்டியும் பேழையும் இரவல் – பிறர்
காணாமல் சேர்க்கும் பணமும் இரவல்
கட்டிய சோமன் இரவல் – நாளை
கட்டிக்கொண்டு போகும் பாடையு மிரவல்
சங்கர சங்கர சம்போ

*படம் : கிருஷ்ண பக்தி அல்லது பக்த ஜயதேவர் (1937).*



உண்ணும் உண விரவல்
உடுக்கும் உடை இரவல்
மின்னும் பல நகையும்
மேனியுமே இரவல்
எண்ணும் எண்ணம் இரவல்
எல்லாம் இரவல் சொன்னேன்
கண்ணு மிரவல் வேகும்
கட்டையு மிரவல்.

*படம் : கதம்பம் (1941), பாடலாசிரியர் : நடராஜ ஆச்சாரி, இசை : என்.எஸ்.பாலகிருஷ்ணன்.*

சாய்ந்து படுக்கின்ற தாழ்வார மிரவல்
தன்னைப் பெற்றதாயும் தந்தையு மிரவல்
சாய்ந்த மரக்காலின் கட்டிலுமிரவல்
கனகப்பொன் மணியிரவல்
கட்டிமணிப் பொட்டிரவல்
சாவுக்கு வந்த ஜனங்களு மிரவல்
தம்புரு வாத்தியம் தாளமு மிரவல்
மாமருவுங் கோடி வஸ்திர மிரவல்
மடமந்தைக் குடமிரவல்
மட்டைமுழங் கட்டையிரவல்

*நூல் : நாகை பி.அம்மைநாதப் பாவலர், பெரிய கீர்த்தனைத் திரட்டு (1939), பக்கம் : 11, 12, நூலாசிரியர் : சங்கீத சரப சிங்கார கவிஞர் நாகை பி. அம்மைநாதப் பாவலர்.*



*பல்லவி*

மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்கங்களென் கூட
வெளியினில் வாருங்கள் காணும்.

*நூல் : குணங்குடி மஸ்தான் பாடல்கள், பக்கம் : 537, நூலாசிரியர் : குணங்குடி மஸ்தான்.*

அஞ்சாத நெஞ்சம் படைத்த அதிவீரன்
தீவட்டிக்கள்ளன் - எனைப் போலுண்டோ
நான் பஞ்சா கொடுத்தால் முண்டாதட்டி முன்வர
எண்சாணுடம்புள்ள போர்தானுண்டோ

உண்டானால் வாருங்கள் - மீசையுள்ள
நல்ல ஆண்பிள்ளை சிங்கங்கள் யாரானாலும்

தண்டா எடுப்பேன் - தடி எடுப்பேன்
விடமாட்டேன் - அடிக்காமல் எதனாலும்

*படம் : பஞ்சாமிர்தம் (1942), பாடலாசிரியர் : டி.வி.நடராஜ ஆச்சாரி*



*ராகம் : அமீர் கால்யாணி* *தாளம் : ஆதி*

ஆறுதல் சினமே அன்றோ லக்ஷ்மணா
ஆத்திரப்படல் நன்றோ லக்ஷ்மணா
மீறிப் பேசுதல் தகாது வேண்டாம்
வெந்நீரிலே வீடு வேகுமோ தான்.

*படம் : பாதுகா பட்டாபிஷேகம் (1936), பாடலாசிரியர் : K.V.சந்தான கிருஷ்ண நாயுடு, பாடியவர் :மஹாராஜபுரம் M.R.கிருஷ்ணமூர்த்தி*

ஆறுதல் சினமே - அன்றோ! ஆத்திரப்படல் நன்றோ - லக்ஷ்மணா
தம்பி மீறிப்பேசுதல் தகாது - வேண்டாம்
வெந்நீரில் வீடு வேகுமோ, அப்பா வேண்டாம்!

*படம் : பஞ்சாமிர்தம் (1942), பாடலாசிரியர் : நடராஜ ஆச்சாரி*



மாதர்கள் திலக மே! வான்
மதிரவி மாறி னாலும்,
வாதெவர் புரிந்திட் டாலும்,
வல்வினை தடுத்திட் டாலும்,
காதல்மெய் மாறு மோதான்
கருதியே உறுதி கொள்வாய்;
பூதல வேந்தர் சூழப்
புதுமணம் புரிகுவேனே.

*படம் : சீமந்தினி (1936), பாடலாசிரியர் : டி.வி.நடராஜாச்சாரி.*



கன்னி உன் மீதினிலே காமுறும் போதினிலே
சொன்னதெல்லாம் கேட்கும்படி சொல்லுவேன்
சும்மா சும்மா கேலிக்காகக் கிள்ளுவேன்

*பாடலாசிரியர் : டி.வி.நடராஜ ஆச்சாரி, படம் : பிரபாவதி (1944)*

கண்ணான சாமியுன்னை எண்ணாத நேரமில்லை
கட்டியணைந்து முத்தந் தந்திடு, தந்திடு, தந்திடு - ஆட்கள்
காலியாய் போச்சிமெல்லே வந்திடு வந்திடு வந்திடு.
சாமி தொரையே யெந்தன் சர்க்கரையே கற்கண்டே
தாங்க முடியாதினி சத்தியம், சத்தியம், சத்தியம் - ஒன்னைத்
தவிர யாரையுமெண்ணேன் பத்தியம், பத்தியம், பத்தியம்.

*பாடலாசிரியர் : டி.வி.நடராஜா ஆச்சாரி, படம் : பீஷ்மா (1936)*



இரவும் பகலும் தறியை ஓட்டியே
ராணிக்குச் சேலைகள் நெய்கிறாய் தோழா
அந்தோ நெசவுக்காரா
ஜமீன்தாரிணிக்குப் பட்டாடையா?
ஏழை மக்களுக்குக் கந்தலுடையா?

*படம் : ஏழை உழவன் (1952), பாடலாசிரியர் : சி.ஏ. லட்சுமணதாஸ்*

சுந்தர மாதர் கைதனில் ராட்டு!
சுழல நலந்தரும் சொல்லிது கேட்டு!
பந்தகம் நீக்கிப் பரந்த இந்நாட்டுப்
பாக்கிய மேபெற பரவச மூட்டு.

*படம் : தர்மபத்தினி, பாடலாசிரியர் : சி.ஏ. இலட்சுமணதாஸ்.*



## 2. பாஸ்கர தாஸ்

பச்சைவளை மிச்சம்பதி னாறுலட்சந் தானே - விலை
பகர்வேன் மச்சமானே - மகா
உயர்வுளது தானே - இதைப்
பார்க்கப்பசி தீருங்கரஞ் சேர்க்கவேசெந் தேனே.
அணிவயிர மாயிரம்பொன் அன்னநடை மாதே -விலை
சொன்னது தப்பாதே - ஒளிர்
மின்னலு மொப்பாதே - இதை
அணிபவர்க்கே கலியாணம் ஆகிடுமிப் போதே.
தங்கவளைக் கங்கணங்கள் நங்கையுனக் கினமாய் - நானே
தருவேன் நல்ல குணமாய் - நீயும்
அணிவாய் மகிழ் மனமாய் - உன்றன்
தவளநகை இதழுமிரு தனந்தருவாய் சுகமாய்.

*நூல்: ஸ்ரீமுருகன் திருவிளையாடல் என்னும் வளையற்சிந்து (1896), நூலாசிரியர் : தஞ்சை கருத்தாட்டாங்குடி அஷ்டாவதானம் P.இராமசாமி பிள்ளை, பாடல்: 23. 24. 25*



வளையல் வாங்கலையோ அம்மம்மா
வளையல் வாங்கலையோ
ஒரு மாசில்லா சிந்து சுதேச வளையல்
வச்சிரம் பதித்த உச்சித வளையல்
மங்களம்சேர் தங்கவளையல்
சிறு பைங்கொடியாள் பூணும் வளையல் பொன் (வளை)
பலவித வளையல் மஞ்சநிறப்
பஞ்சவர்ண வளையல் - இந்தப்
பச்சை வளையல்பொன் லக்ஷம்விலைபெறும்
பருவப் பெண்களின் மனதைக் கவரும்
பார்த்துவிலை கேட்டு மகிழ்வீர்! கையில்
கீர்த்திபெற சேர்த்து அணிவீர்!

*படம் : வள்ளித் திருமணம் (1932), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர் : M.துரைசாமி.*



சுந்தரஞ்சேர் தாமரையைச் சடைப்பாசி சூடிவந்தால்
அழகாய்த் தோன்றும்
சந்திரற்குக் களங்கமிருந் திருந்துமதன் ஒளிகுறையாத்
தன்மை போல

இந்தமட மங்கைமர வுரியணிந்தும் எழின்மிகுந்து
விளங்கு கின்றாள்
சுந்தரநல் லுருவமதற் கழகுசெயா தெதுவுலகிற்
சொல்லுங் காலே.

*நூல்: சகுந்தலை அல்லது காணாமற் போன கணையாழி (1922), பக்கம்: 143, 144, நூலாசிரியர் : திவான் பஹதூர் ச. பவானந்தம் பிள்ளை*



*துஷ்யந்தன் – சகுந்தலையைப் பார்த்து :*

மரவுரியும் ஓர் அழகாகத் தோணுதே
மலர்ந்த வனத்திலிருந்த சகுந்தலை யிடையினில்
பிரியத்திற்குத் தகாததாயிருந்தாலும்
பேணுஞ்சந்திரனுக்கு களங்கமானாலும்
காயத்தில் ஒளிதர காணுதல் போலும்
கதித்திடை மடக்கொடி விரித்திடை யுடுத்திய (மரவுரியும்)

*படம் : சகுந்தலா (1934), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர் : பி.எஸ். வேலுநாயர்.*



நானே யினியுன்னை வேண்டுவ தில்லை
நளினமலர்த்
தேனே கபாடந் திறந்திடு வாய்திற
வாவிடிலோ
வானே றனைய இரவி குலாதிபன்
வாயில் வந்தால்
தானே திறக்குமுன் கையித ழாகிய
தாமரையே

*நூல் : தனிப்பாடல் திரட்டு (1923), பாடல் : 14, பக்கம் : 173, 174, பாடியவர் : ஒட்டக் கூத்தர்.*



*ராகம் - மோஹனம்* *தாளம்*

மானே மடமயிலே மாதரசே யின்னேநீ
தேனே கதவைத் திறவாயேல் - நானே
மறந்துன்னை வீணாயுன் வாசலிலே தானாய்
இறந்துவிட நேரு மினி.

*படம் : பாமா விஜயம் (1934), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர் : எம்.ஆர். கிருஷ்ணமூர்த்தி.*



கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்றன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதி லரிசிவரும் - குத்தி
உலையிட வூரடங்கும் ஓரகப்பை அன்னம்
இலையிலிட வெள்ளி எழும்.

*நூல்: தனிப்பாடல் திரட்டு (1923), பாடலாசிரியர் : கவிகாளமேகம், பாடல் :59, பக்கம் : 44*

*இராகம் : முகாரி* *தாளம் - அடதாளம்*

வானமிடிந்துதலையில் விழும்படி
வம்புவந்தாலுமென்னை -அந்தக்
கானமயில் முருகையன் திருவருள்
கைவிட மாட்டாதே.

*நூல் : குமரகுருதாச சுவாமிகள் பாடல் (1901) நூலாசிரியர் : குமரகுருதாச சுவாமிகள் என்னும் பாம்பன் சுவாமிகள், பக்கம் : 397*

மலையே கலங்கினாலும் உன் மனது கலங்கலாமா
தலையே போனாலும் சரி தைரியத்தை விடலாகுமா
சொந்த மருகனே - என்றன் தங்க மருகனே
பங்கமிலா சிங்க மருகனே

*படம் : திரௌபதி வஸ்திராஹரன் (1934), பாடலாசிரியர்: பாஸ்கரதாஸ், இசை : சங்கீத பூஷணம் எம்.டி.பார்த்தசாரதி*



அப்படியவள் சொல்ல லாச்சே - எங்க
ளடிமையாய்ப் போனபின் பேச்சே
தப்பிலிச் சிறுக்கியைத் தவிடாகக் கொழிக்கிறேன்
தடுத்துச் சொன்னால் வாயைப் பிடித்துக் கிழிக்கிறேன்.
புலியைப் பூனைகள்வந்து வெல்லுமா? -இவள்
பொங்கல்லாமினி இங்கே செல்லுமா?
வலியமயிர்பிடித்து நானே இழுக்கிறேன்
ஞாயமெடுத்துச் சொன்னால் நாக்கை யறுக்கிறேன்

*நூல் : ஸ்ரீமகாபாரத விலாசம் (சூது - துகிலுரிதல்), நூலாசிரியர் : இராமச்சந்திர கவிராயர், பக்கம் : 57, 58*

அப்படி அவள் சொல்ல லாச்சா - நமக்
கடிமையாய்ப் போனபின் பேச்சா பேச்சா
தப்பிலிச் சிறுக்கியைத் தவிடாய்க் கொழிக்கிறேன்
தடுத்துச் சொன்னால் வாயைப் பிடித்துக் கிழிக்கிறேன்.

புலியைப் பூனைகள் வந்து வெல்லுமா - இவள்
பேச்செல்லாம் இனிஇங்கே செல்லுமா செல்லுமா
நலிய மயிர்பிடித்து நானே இழுக்கிறேன்
நியாயமெடுத்துச் சொன்னால் நாக்கை அறுக்கிறேன்.

*படம் : திரௌபதி வஸ்திராபஹரன் (1934), பாடலாசிரியர் பாஸ்கரதாஸ், பாடியவர் : P.S.சுந்தரபாஷ்யம் நாயுடு, இசை சங்கீதபூஷணம் M.D.பார்த்தசாரதி.*



கண்டிடும் வாதத் திரண்டினில் பித்தம்
கதித்தொரு பங்குமே ஓடில்
கொண்டிடும் வாய்வு மிகுத்திடின் விம்மும்
குருதியும் பொருமியே வலிக்கும்
அண்டிடும் மாதர் புணர்ச்சியைக் கருதும்
அகமகிழ் சிந்தை பூரித்து
உண்டிடும் சாதம் சீரண மாகா(து)
உடல்கை கால்சந்து நொந்திடுமே.

*நூல் : கைகண்ட அனுபோக வைத்தியப் பெருங்குறள், பகுதி : நாடிப் படலம், நூலாசிரியர் : சதாவதானம் செழுமணவை சித்திரக்கவி தேவேந்திரநாத பண்டிதர்.*

வாதத்திலே பித்தம் பித்தத்திலே வாதம்
மாறிமாறிப் பின்னியே - சிலேத்துமத்தின்
கூறானதால் ஜன்னியே
இப்போ - வந்ததாலே ராணிமெத்த
சிந்தை நோக லான திப்பே
வச்சமுனி வாகடம் - குறித்தபடி
வைத்தியம் செய்தாலே கெடும்.

*படம் : சுபத்ரா பரிணயம் (1935), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ்*



ஏதோவென் மனதி லின்பம் பூணுது
எண்ணங்களித் தேதோ தோணுது
நாதன்வாசஞ்செயு மிடமெனக் காணுது
நன்றேவரு மென்றே எண்ணுது.

*நூல் : பெற்றான் சாம்பனார் (1915), பக்கம் :114, நூலாசிரியர் : ரஞ்சித மோகனகவி, பாடியவர் : தியாகராஜ தேசிகர்.*

ஏதேதோ என்மனது பாடாய்ப் படுத்துதடி
என்னருமை வண்ண மயிலே!
ஏக்கமிக வுண்டாகி நாக்குளறி யேநடுங்க
ஏற்பட்ட தென்னடி குயிலே.

*படம் : லலிதாங்கி (1935), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர் : T.P.ராஜலட்சுமி.*



ஆசைசேர் தந்தை தாயர்
அன்புகூர் மனைவி மக்கள்
நேசர்கள் பலரோ டின்னும்
நெருங்கிய சுற்றத் தார்மேல்
பாசமுற் றிருத்தல் இந்தப்
பாரினில் இயற்கை யாகும்.
தேசாபி மான மொன்றே
தெய்வீக உணர்ச்சி யண்ணே.

*நூல் : பிரதாபசந்திர விலாசம் (1877), அங்கம் : 1 (முதற்களம்), பக்கம் : 9, நூலாசிரியர்: ப. வ. இராமசாமி ராஜு, பி.ஏ., பாரிஸ்டர் – அட்- லா., எப்.ஆர்.எச்.எஸ்.(லண்டன்)., எம்.ஆர்.ஏ.எஸ்.(லண்டன்).*



*ராகம் : ஹி.பிஹாக்* தாளம் - ஏகம்

பல்லவி

தேசமே அபிமானம் - பணி செய்வதே
ப்ரதானம் - என்
தேசமே அபிமானம்

*படம் : ராஜாதேசிங்கு (1936), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர் : வி.எஸ்.மணி மற்றும் குழுவினர், இசை : சேலம் ஆர். பாலுசாமி.*



**கூஜாவிலிருந்து வெளியே வந்ததும் மது மிக உரக்கப் பேசுகிறது.**

- அமெரிக்க நாட்டுப் பழமொழி

நூல் : பழமொழி ஆயிரம் (1968), பக்கம் : 50, பழமொழி : 378, நூலாசிரியர் : J.A.சுலைமான், எம்.ஏ.,

ப்ராந்தி சீசாவுடன் க்ளாசும் பேசுதே!
ஜில்ஜில் சிங்காரக் குட்டி
வாடை வீசுதே! குபுக்குபுக்

*படம் : தேவதாஸ் (1937), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர் : எம்.ஆர்.ரங்கபாஷ்யம்.*

  

## சி.ஏ. லட்சுமணதாஸ்

முன்னாள்கை ராட்டினத்தில் மூதாதை நூற்றகதர்
இந்நாள் சகோதரர்கள் இடையணிந் திதம்ததும்ப
இன்னலைத் தவிரும் - நய
நன்னிலை யுயரும்.

*நூல் : பஜனாமிர்தக் கீர்த்தனம் (1931), பக்கம்: 67, நூலாசிரியர் : திருவாரூர் - விஜயபுரம் எஸ்.ஆறுமுக்கணேசர்.*

சுந்தர மாதர் கைதனில் ராட்டு
சுழல நலந்தருஞ் சொல்லிது கேட்டுப்
பந்தகம் நீக்கிப் பரந்தஇந் நாட்டுப்
பாக்கிய மேபெறப் பரவச மூட்டு.

*படம் : தர்ம பத்தினி (1935), பாடலாசிரியர் : சி.ஏ.இலட்சுமணதாஸ்.*



வன்னக் கிளிகாள்! வணக்கிளிகாள்! சாலேமின்
அன்னக் கிளகாளென் ஆயாசந் தீரீரோ!
காட்டுப் புறாவே! கருங்குயிலே! செம்மயிலே!
பாட்டுத் துரைக்குநான் பட்டதுயர் சொல்லீரோ!
மாடப் புறாவே! மணிப்புறா வே! நீங்கள்
தேடிப்போய் நாயகர்க்கென் செய்தியெல்லாம்
சொல்லீரோ!
உள்ளானே! வாஞ்சைமனத் துள்ளானேன் என்றெமது
வள்ளலுக்குச் சொல்லி மனத்துயரம் மாற்றீரோ!

*நூல் : ஆராணாதிந்தம் (1890), நூலாசிரியர் : வேதநாயக சாத்திரியார்.*

ஆஹா ! என் மனதுகந்த அன்னப் பறவைகாள்!
ஓஹோ! மகிழ்கொண்டாடும் உன்னத மயிலினங்காள்!
கூகூ என இசை கூவிடும் குயில்காள்
கொண்ட லாத்திகாள்! கொஞ்சிடும் கிள்ளைகாள்!
மாடப் புறாவினங்காள்! மகிழ்தரும் குருவிகாள்!
நாடி நீர் மகிழ்வோடு நல்லிரை கொள்வீரே!

*படம் : பூர்ண சந்திரன் (1935), பாடலாசிரியர் : சி.ஏ.லட்சுமணதாஸ், பாடியவர் : V.S.மணி.*



முன்னே கடிவாள மூன்றுபேர் தொட்டிழுக்கப்
பின்னே இருந்திரண்டு பேர்தள்ள - எந்நேரம்
வேதம்போம் வாயாள் விகடரா மன்குதிரை
மாதம்போங் காத வழி.

*நூல் : தனிப்பாடல் திரட்டு (1923),பாடல் : 69, பக்கம் : 49, ஆசிரியர் : காளமேகப் புலவர்.*

வானுலக வீதியெலாம் தூள்பறக்கவே
வருகுது பொய்க் குதிரை யொன்று களிசிறக்கவே
மாதமெலாம் ஓடுமொரு காதவழியே
மற்றுமதை தொட்டவர்மேல் போடும் பழியே.

*படம் : மாயா மச்சீந்திரா (1939), பாடலாசிரியர் : சி.ஏ.லட்சுமணதாஸ்.*



ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

காமத்திற்கு இன்பம் தருவது ஊடுதலே ஆகும். அவ்வூடுதல் தீர்ந்தபின் காதலனும் காதலியும் கூடித் தழுவப் பெற்றால் அஃது அக்காதலை நிறைவேற்றும் இன்பம் ஆகும்.**முயங்குதல் – கூடுதல்.**

*நூல் : திருக்குறள் (1330), உரையாசிரியர் : பேராசிரியர் மயிலை சிவமுத்து.*

*விமலா :* அவசரமேனோ?
*செல்வம் :* கணமொருயுகமே
*விமலா :* மயில் வாகனம் ஓடிவிடாதே ?
*செல்வம் :* தவப்பொழுது ஓடிவிடும் அன்பே
*செல்வம் :* கூடலின் ஊடலினி தென்பதுண்மை
*விமலா :* பிரியேனென் றுறுதி தாரும் ஸ்வாமி

*படம் : என்மகன் (1945), பாடலாசிரியர் : C.A. லட்சுமணதாஸ், பாடியவர்கள் : U.R. ஜீவரெத்தினம், N. கிருஷ்ணமூர்த்தி.*

***ராகம் : ஆனந்தபைரவி*** ***தாளம் – ஆதி***

கூடலின் ஊடலினி தென்பதுண்மை
பிரியேனேன் றுறுதி தாரும் ஸ்வாமி
கண்ணே கனவிலும் உனையன்றி
யாரையும் கருதேன் கவலை வேண்டாம்

*படம் : என் மகன் (1945), பாடலாசிரியர்: சி.ஏ. லெட்சுமணதாஸ் பாடியவர்கள் : என்.கிருஷ்ணமூர்த்தி, யூ.ஆர். ஜீவரெத்தினம்.*



எந்த நிலத்தை எவன்பயிர் செய் கின்றானோ
அந்த நிலமே அவனுடைய தாயிருக்க
மந்தபுத்தி யாலே மதித்துப் பணம்வகித்தோர்
தந்திரங்கள் கற்றுத் தவிக்கவிடும் பாதகரை

அந்தரத்தில் விட்டு கண்ணம்மா
அநியாயம் செய்வாயே.

*நூல் : இருள் விளக்க அழுகண்ணீர்ப் பாடல் (1925), பாடல் : 64, பக்கம் : 6, நூலாசிரியர் : கோவிந்தாசாரியார்.*

நமதே தானிப்பூமி - நமதே தானே
நமதே தானிப்பூமி - நமதே தானே
உழவருக்கே இப்பூமி - உண்மைதானே.

*படம் : ஏழை உழவன் (1952), பாடலாசிரியர் : லட்சுமணதாஸ், இசை: எச்.ஆர். பத்மனாப சாஸ்திரி.*



***ராகம் : நாகனாமக்கிரியை*** ***தாளம் : ஆதி***

கோவுக்கு உண விடு - கவிஞர்கள்
குறைதவிர்த்திடத் தேடு.
பாவிபோலடுத்தோரைப் பதைக்க நீவதையாதே
பண்புளோர் வரிலன்னம் பகராமற் புசியாதே.

*நூல் : சத்தியபாஷா அரிச்சந்திர விலாசம் (1902), நூலாசிரியர் : அப்பாவு பிள்ளை, பகுதி : அரிச்சந்திர படலம், பக்கம் : 171.*

நமது நாட்டிற்குகந்த பசுக்கூட்டமே
நாட்டினிலே மேய்த்துமே காப்பாற்றுவோமே
இவைக்கே சேவை செய்தால் – இதம் தருமாமே
சுவைசேர் நெய் பால் வெண்ணெய் – தினம் பெறலாமே.

*படம் : விஷ்ணு லீலா (193), பாடலாசிரியர் : சி.ஏ.லட்சுமணதாஸ்.*

காலத்தினால் இந்தக் கோலத்திலே
வரலானேன் அகதியும் நானே!
பாலை நிலம் போலே - உள்ள - வெறும்
பாத்திரம் பார்த்துப் பசி தணிப்பாயே! என்மனப்
பாங்கறி வாயே!

*பாடியவர் : T.R.மகாலிங்கம், படம் : லைலா மஜ்னு (1949), பாடலாசிரியர் : லட்சுமணதாஸ், M.V.ராஜம்மா நடித்தது.*



***பல்லவி***

கன்னத்திலே முத்தங்கொடுத்திடு – மெல்லக்
கதவைச் சாத்திகிண்டு படுத்திடு.

*படம் : தர்மபத்தினி (1935), பாடலாசிரியர் : C.A. லட்சுமணதாஸ்.*



பஞ்சம் வந்ததே கொடிய பஞ்சம் வந்ததே
கொஞ்சமான பஞ்சமல்ல - படுமோசப் பஞ்சமே.
சூன்யமாச்சு வானுலகம் - சுடிசுட வெய்யில் எரிக்கவே
அக்கினிகாத்து வீசவே - ஏரிகுளமும் வரளவே
லோகமெல்லாம் வாய்திறந்து - தாகம் தாகம் எனவே
தவித்துயிர் பரிதவிக்கவே - அய்யோ
தாது வருஷப் பஞ்சத்தையும் மித மிஞ்சினப் பஞ்சம்.

*படம் : ஏழை உழவன் (1952), பாடலாசிரியர் : சி.ஏ. லட்சுமணதாஸ்.*



மாணிக்க மாது
மயிலே! கொஞ்சும் மாணிக்க மாதே!
ஒயிலாக வாராய் மடிமீதே!

*படம் : தர்மபத்தினி (1935), பாடலாசிரியர் : சி.ஏ. இலட்சுமணதாஸ்.*



சுந்தரமாதர் கைதனில் ராட்டு
சுழல நலந்தருஞ் சொல்லிது கேட்டு
பந்தகம் நீக்கிப்பரந்தயிந் நாட்டு
பாக்கியமே பெறப்பரவச மூட்டு.

*படம் : தர்மபத்தினி (1935), பாடலாசிரியர் : சி.ஏ.லட்சுமணதாஸ், பாடியவர் : V.A. செல்லப்பா.*



உடுமலை - சரபகவி மாணவரும் சென்னை ஸ்ரீ பால வினோத நாடக சபாவின் உபாத்தியாய பரத சாஸ்திர சங்கீத சாஹித்திய சந்தவண்ணக் சரபம் நாடகாசிரியர்

## கவிராஜ் ச.சு.சங்கரலிங்கக் கவிராயர்

## முன்மொழி

லலிதம் - அழகு, (அழகைத்) தாங்கி - வகித்த, (தனக்கு நிகரற்ற அழகை வகித்தவள்) லலிதாங்கி என்னும் பெயர் பெற்ற இக் கதாநாயகியின் கதையானது ஓர் கற்பனைக் கதையாம். ஆயினும், இல்லறமே நல்லறம் என்னுமோர் கருத்தை இக்கதை தெளிவுறக் காட்டுகின்றது. துறவறப் பெருமையைத் துலக்கி இல்லறத்தி வீடுபட்டே துறவறம் பெறவேண்டும் என்று முடிவை இக்கதை தெற்றெனத் தெரிவிக்கின்றது. இதெங்ஙனமாயினும், கட்டுரைக் கற்பனா சக்தியமைந்த இந்நாடகம் ஆராலியற்றப் பெற்றதென்பது சந்தேகம்.

வெழுவாயிக்கதையை முதன்முதலாகவும், வெகு காலமாகவும், மிக்க விமரிசையாகவும், ஆலந்தூர் கம்பெனி யார்களே நடத்தின ரென்பதை நன்கறிவேன். அங்ஙனமாயின் அக் கம்பெனியின் உபாத்தியாயர் வித்வத் ஸ்ரீ சித்ரகவி சுப்பராய முதலியா ரவர்களே இக்கற்பனைக் கதையை எழுதி அறங்கேற்றுவித்திருக்கலாமென்பது என்மனத் துணிவு.

ஆலந்தூர் கம்பெனி அயன் ராஜபார்ட் M.V.T.முருகேச நாயகர் Mr.ராவண கோவிந்தசாமி நாயுடு ஷை அரங்கசாமி இயக்கார், திருப்புகழ் குப்புசாமி முதலியார் முதலியவர்களால் மிக்க விமரிசையுடன் நடத்தி வந்த இந்நாடகம் தற்காலத்தில் பாகவத கோஷ்டி நடிகர்களால், பரிமளிக்காதது நாடக வுலகிற்கே அபகீர்த்தியாகத் தெரிகிறது. சிற்சில நடிகர்கள் இக்கதையை நடத்திவரினுங் கதாசாரத்தைக் குறைவுபடுத்தியே நடித்துக் காட்டுகின்றனர்.

இக்குறைபாடின்றியும், தமிழ் நாடகாபி விருத்தியைக் கருதியும் எனது தலைமை ஸ்தானத்தில் நடந்து வந்த சென்னை "ஸ்ரீ பால விநோத நாடக சபா" பால்யர்களுக்கு இந்நாடகத்தை வழுவின்றி நடத்து மார்க்கத்தை எடுத்துரைத்து நடித்துக் காட்டி நற்பெயர் பெறச் செய்ததை நன்கறிந்த நாடக அபிமானிகள், இந்நாடகத்தை அச்சிட்டுத் தரவேண்டுமென்பதற் கிணங்கி, தற்காலம் இச்சரிதையை வெளியிடலானேன். இந்நூலுக்கேற்ற பழைய பாடல்கள் பல விருக்கினுந் தற்கால வர்னமெட்டுகளா லமைந்த பாடல்களையும் வசனக் கோவைகளையும் சேர்த்து நர்டக வழுவிலாது சகல நடிகருக்கும் ஏற்றவாறு இப்புஸ்கத்தை அச்சிட்டிருக்கிறேன்.

அன்றியும், இந்நூலின் சகல வுரிமைகளும் சென்னை மெஸர்ஸ் ஆ. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ் அவர்களுக்கே வுரியதாதலின் மற்றவர்கள் இப்புத்தகத்தையேனும், இதிலுள்ள பாடல்களையேனும் அச்சிட்டு வெளியிடில் புஸ்தக ரிஜிஸ்டர் சட்டப்படி சகல நஷ்டத்திற்காளாவார்க ளென்பதைத் தெரிவித்துக் கொள்வதுடன் நாடகாபிமானிகள் பலருந் தவறாது இந்நூலை அங்கீகரிக்கக் கோருகிறேன்.

**வேணும் சுபம்.**

**அன்பன்**

***20.9.1932*** **நாடகாசிரியன்.** ***கவிராஜ் ச.சு.சங்கரலிங்கன்***

**சென்னை**

நூல் : ஸ்திரி சாகஸ வெற்றி அல்லது லலிதாங்கி சரித்திரம் (1932), பக்கம் : 3, 4 .

பெண் கல்வி முன்னேற்ற முறையீடு

*(கொடிச்சிந்து)*

பிரம்மபுரி மகராணி - இந்தப்
பேருலகெங் கும்வணங்கும் கலியாணி
இந்தியச் செந் தமிழ்த்தேவி - கற்றோர்
எவர்க்கும் நலமுதவு சஞ்சீவி
சரஸ்வதி யெனும்தாயே - உந்தன்
சமுகத்தி லொருமுறை கேட்பாயே.
வல்லான்வ குத்தவுலகில் - வசிக்க
வந்துதித்த மானிட ஜீவகோடியில்
ஆண்பெண் ணென்னுமிரண்டில் - நாங்கள்
அன்னை வயிற் றினில்பத்து மாதமிருந்து

அன்பு பணிவு அடக்கம் என்றே
தேடிப்பார்த்தேன் தென்படவில்லை
குடிக்கும் நீரை விலைகள் பேசிக்
கொடுக்கும் கூட்டம் அங்கே
இருக்கும் காசைத் தண்ணீர் போலே
இறைக்கும் கூட்டம் இங்கே.

பெண்ணெனப்பிறந்து வளர்ந்தோம் - எம்முடன்
பிறந்த ஆடவர்க்கென்ன மமதையம்மா
சஞ்சலமென் கின்றபேயே -பெண்ணுருவாய்
தானுதித்த தென்னுமதி யீனம்விடுத்து
கல்வியெனுங் கருந்தனத்தை - நாங்கள்
கைப்பிடித் தொழுகநல மல்லவென்கின்றார்.
பாத்திரமே சாஸ்திரந்தான் - நாங்கள்
படிப்பதும் அடுப்பங்கரை பள்ளிதான்.

இதுவென்ன அநியாயம் - நீயும்
எம்போன்ற பெண்களின் பிறப்பல்லவோ
கல்விக்கதி காரியல்லவோ - உந்தன்
கல்வியைப் பெறுமுரிமை பெண்கட்கல்லவோ?
இப்படி யிருக்கநியாயம் - நாங்கள்
எப்படிப்ப டிக்கவொண்ணா தென்றுசொல்லுவார்?
உனக்கென்ன நயவஞ்சகம் - இந்த
உலகெலாம் புகழ்கலை மகள்நீயே
சகலர்க்கும் பொதுவாச்சே - இந்தச்
சங்கதியை எங்களருந் தாய்தந்தைக்குச்
சொல்லி எங்கள் துயர்தீர்ப்பாய் - செந்தமிழ்ச்
செல்வியே எங்களையுந்தன் பங்கில் சேர்ப்பாய்.

நாகரீகக் கலியுகமே - இந்த
நாளிலெ மக்குக்கல்வி வேணுமம்மா.
கற்றறியாப் பெண்கள்பாடு - படித்த
கணவன்கை தொட்டவுடன் வரும்கேடு!
சொல்லமுடி யாதுதாயே - இங்க்லீஷ்
துரைத்தன இந்தியாவில் பழுத்தவராம்
வைதீகக் கிழவர்களாம் - அவர்கள்
வாய்பேச்சி லேமயங்கும் தாய்தந்தைக்கு
பெண்கள்கட் டாயப்படிப்பு - வேண்டுமென்று
பிட்டிஷன் கொடுத்து சட்டங் கட்டவாயம்மா.
பிரம்மபுரி மகராணி.

*- ச.சு.சங்கரலிங்கக்கவிராயர்*

*நூல் : மாணவர் கீதமஞ்சரி (1926), பாடல் : 27, பக்கம் : 32, 33.*

தேவாதி தேவர்களும் காண முடியாத
திருடன் எனைப்போலுண்டா
பெரும்-முரடன் எனைப்போலுண்டா
உண்டா, உண்டா, ஆ ... ஆ ...

ஏரோப்ளான் போலாகாயம் ஏறிப்பறந்தேனே - பல
ஏறிப் பறந்தேனே
போரட்டத்தில் ஈடில்லையெனப்
புகழும் சிறந்தேனே
என் இழுவை மோட்டார் வேகம்
முன்னிழுக்காதே - என் சாமி
முன்னிழுக்காதே - அந்த
மன்னன் சாண்டோ ராமமூர்த்தி
மகிமை தப்பாதே - புவியில்
மகிமை தப்பாதே - புவியில்
மகிமை தப்பாதே!

*படம் : அதிரூப அமராவதி (1935), பாடலாசிரியர் : எஸ்.எஸ்.சங்கரலிங்க கவிராயர்*



கல்யாணம் வந்திருக்கு கண்மணி அமராவதி
கண்மணி அமராவதி
பெண்மணி மைத்துனாரதி (கல்)

பாக்கு கொடுத்தாச்சுதடி பந்தலது போட்டதடி
நோக்கும்விழி, எலக்டிரிக்லைட்டு
நூறு நாளா எரியுதடி (கல்)

நாதசுரம் பொன்னுச்சாமி தவுல்மீனாட்சிசுந்தரம்
கீதசுரம் கேட்குதடி கிருபாலினி கோஹர்ஜான்
நாட்டியமும் நடக்குதடி!

*படம் : அதிரூப அமராவதி (1935), பாடலாசிரியர் : எஸ்.எஸ்.சங்கரலிங்கக் கவிராயர்*

இந்தியத் தாய்மக்கள் எல்லோர்க்குமே க்ஷேமம்
தந்தாளும் ராட்டினமே - குதம்பாய்
தந்தாளும் ராட்டினமே

தமிழ்நாட் டபிவிருத்தி தனக்கே யவதரித்த
சமுதாய ராட்டினமே - குதம்பாய்
சமுதாய ராட்டினமே.
சேதார மின்றிநம் செல்வத்தைக் காப்பாற்றும்
ஆதாரம் ராட்டினமே குதம்பாய்
ஆதாரம் ராட்டினமே.

*நூல் : மாணவர் கீதமஞ்சரி (1926), பக்கம் : 42, நூலாசிரியர் : சங்கரலிங்கக் கவிராயர்.*



தருமமதை விடவேறு சிலாக்கிய மில்லை
சாந்தமதை விடவுலகில் பக்தியில்லை
குருவைவிட சீடனுக்கு தெய்வமில்லை
கோபமிலா மானிடர்க்குப் பாபமில்லை
அருமறையை யுணர்ந்தவர்க்கு ஆபத்தில்லை
அழகிலா வேசியருக் காசையில்லை
பெருமைதருங் கல்விதனிற் பெரிதுமில்லை
பேசவென்றார் பெண்கல்வி விசேடமாமே.

*நூல் : மாணவர் கீதமஞ்சரி, பாடல் : 27, பக்கம் : 29, நூலாசிரியர் : சங்கரலிங்கக் கவிராயர்.*



வாலிப காலத்தைப் பாழாக்க லாகுமோ
பாங்கியே சுந்த ராங்கியே
பாரக்குஜ மிரண்டும் பூரித்தெழுந்து விம்மி
சீறுதே என்னை மீறுதே.

சேயைப் போன்ற மதி தீயைப்போல வந்து
காயுதே உடல் தீயுதே; செழுந்
தேனும்பாலும் சீனிப் பாகுமே கசந்
திருக்குதே துன்பம் பெருக்குதே

வாலவயது வந்துங் காலம் வீணாகுதே
மங்கையே இள நங்கையே இந்த
வாலிப காலத்தைப் பாழாக்க லாகுமோ
பாங்கியே சுந்த ராங்கியே

தென்றலான புலி வந்துநின்று இடந்
தேடுதே, மிக ஜாடுதே! எந்தன்
செங்கை தங்கிநின்ற சங்கினங்கள் கழன்
றோடுதே மனம் நாடுதே.

*நூல் : லலிதாங்கி சரித்திரம் (1932), பக்கம் : 10, நூலாசிரியர் : சங்கரலிங்கக் கவிராயர்.*



காந்தர்வம் சேர்ந்த கலியாணமே
கண்டோம் நமக்கின்றே விவாகமே

*படம் : அதிரூப அமராவதி (1935), பாடல் : 25, பாடலாசிரியர் : S.S. சங்கரலிங்க கவிராயர்.*

*பாடியவர்கள் : T.N.சிவக்கொழுந்து, T.S.வேலாம்பாள், இசை : ரங்கசாமி நாயகர்.*



சல்லாபமான தென்றல் தையலென்மேல் தாவுதே
சங்கரலிங்கன் தமிழ்ச் சங்கீதக்குயில் கூவுதே
வில்லார் மன்மதபாணம் வேகமாகப் பாயுதே
விண்மதி எழுந்துகாம வெப்பந்தந்து காயுதே.

விரகதாபமிதுவோ மானே – அந்த
விவரமதனைத்தெரி யேனே - நல்ல
சரஸமதனரதி நானே - வந்த
சஞ்சல மெவ்விதஞ் சகிப் பேனே.

*நூல் : குலேபகாவலி சரித்திரம் (1932), பக்கம் : 37, நூலாசிரியர் : ச.சு.சங்கரலிங்கக்கவிராயர்.*

பாவிமன் மதபாணம் ஆவிதுடி துடிக்க
வாட்டுதே ஆவல் மூட்டுதே – வர்ன
பாரக்குஜமிரண்டும் பூரித்தெழுந்துவிம்மி
சீறுதே என்னை மீறுதே.

*நூல் : லலிதாங்கி சரித்திரம் (1932), பக்கம் : 10, நூலாசிரியர்: சங்கரலிங்கக் கவிராயர்.*

ஆசைக்கோ ரளவே இல்லை
　　ஆதலால் அச்சம் வேண்டாம்
நேசத்தை மறவேன் காம
　　லீலையே எவர்க்கும் நன்றாம்.

*நூல் : பீஷ்மர் பிரதிக்னை (1933), பக்கம் : 15, நூலாசிரியர்: ச.சு.சங்கரலிங்கக் கவிராயர்.*

இது ஒரு பெரும் ரகசியம் – நான்
எடுத்துச் சொல்லுவேன் அதிசயம்
ததி இது உங்கள் பரிச்சயம்
தன்னை வேண்டினேன் நிச்சயம்
சமாச்சாரம் அவசியம்.

*படம் : அதிருப அமராவதி (1935), பாடல் : 20, பாடலாசிரியர் : எஸ்.எஸ்.சங்கரலிங்க கவிராயர், இசை : ரங்கசாமி நாயகர் - குழுவினர்.*



எனக்கே வெட்கமாகி விட்டது...
கானா நான்...

இரண்யவேளையில் ... மந்தகாச இருட்டில்...
உனக்குச் சந்திப்பாய்... எனக்கு தரிசனமாய் – அந்த
தரிசன சந்திப்பு நிகழ்ந்தே விடுகிறது...
இதோ, பரிபூரண வெளிச்சம்
பந்தாய் உன்முக ரூபத்தில்
தலைகவிழ்ந்து கொண்டேன்...
அச்சம் மடம் நாணம்
முதன்முதலாய் அரங்கேறின...
நான் பெண்ணென்பது
எனக்கே மெள்ளப் புரியலானது...
அடடா இப்போதுதான்
எனக்கு விழிப்புக்காலமோ?
சிறகு முளைத்த என் பெண்மையினால்
நான் முதன்முதலாய்ப் பார்த்தது
உன் செவ்வந்திப் பூமுகம்தான்...

அன்னம் பழித்தநடை ஆலம் பழித்தவிழி
　　அமுதம் பழித்த மொழியாள்
பென்னம் பெருத்தமுலை கன்னங் கறுத்தகுழல்
　　சின்னஞ் சிறுத்த இடையாள்

என்னெஞ் சுருக்கவவள் தன்னெஞ்சு கற்றகலை
என்னென் றுரைப்ப தினிநான்
சின்னஞ் சிறுக்கியவள் வில்லங்கம் இட்டபடி
தெய்வங் களுக்கு பயமே.

*நூல்: விவேக சிந்தாமணி, பக்கம் : 48, பாடல் : 76*



கன்னங் கறுத்த குழல்
சின்னஞ் சிறுத்தயிடை
அன்னம் பழித்தநடை
சொன்னம் பழித்தஉடை
உருவம் – நல்ல பருவம் - ஆஹா!

*படம் : மேனகா (1935), பாடலாசிரியர் : புதுக்கம்பன் பூமிபாலதாஸ்.*



ஆசை மீறுதே யென்னைக்கூடி மகிழ்ந்
தணைந்து சுரதசுகந் தாடி
வாசமுள்ளமதன் வாட்டுறானடி
மார்பிலேக்கணை பூட்டுறானடி
நேசமாகக் கண் காட்டுறானடி
நினைக்கும்படிமையல் மூட்டுறானடி.

*நூல் : மணமோகன வள்ளியம்மை பரதம் (1922), பக்கம் : 184, நூலாசிரியர் : முத்துலாபுரம் மதுரபாலகவி வி.பி.எம்.ராமசிங்கம்.*

எதிர்ப்பத அவஸ்தைக்கு பழைய நிகண்டில்
வார்த்தை யாசிக்கிறேன்....
வான சாஸ்திரம் படித்தநீ எப்பொழுது
சாமுத்ரிகா லட்சணம் கற்று வைத்தாய்
...........
சரியாகப் பார்க்காமல்
என் அங்கமச்ச அடையாளங்கள்
உனக்கெப்படி பரிச்சயமானது....?
வியப்புக் குறியின் கோடாக நான்....
கீழே போடும் புள்ளியாக நீ....!
இருவரும் தொட்டுக் கொள்ளவில்லை...
ஆனாலும் உன்னில்நான் எழுந்து நிற்கிறேன்...
வியப்புக் குறியின் கோடாக நான்
கீழே போடும் புள்ளியாக நீ....

### *அமராவதி பாட்டு*

### *(தேடித்தேடி வந்தேனடி மெட்டு)*

ஆத்தோரம் அரளித் தோட்டம் – இந்த
அமராவதி வாழுங் கூட்டம்.
தேடிப் பார்த்தேன் அதிரூபனை
என்று பார்ப்பபேனோ கண்ணால் தானே
ஏத்தம் போட்டிறைத்தே னானே
உம்மை எங்குமே காண்கி லேனே
எங்கள் - தாத்தா சங்கரலிங்கம்
பாட்டைப்பாடி - தானே உன்னைத் தேடுகிறேனே.

*படம் : அதிரூப அமராவதி (1935), பாடலாசிரியர் : எஸ்.எஸ்.சங்கரலிங்க கவிராயர், பாடியவர் : மிஸ். டி.எஸ். வேலாம்பாள், இசைக்குழு : ஆர்மோனியம் - ரங்கசாமி நாயகர், சாரங்கி - அப்துல் சத்தார், தபேலா : கோவிந்தசாமி.*

*இராகம் - சங்கராபரணம்* *தாளம் - ரூபகம்*

புவியினின்பம்
பொருந்தும் துன்பம்
புண்ணிய மிகுந்திடு தேகம்
கண்ய மிதன்சுக போகம்
பொங்கும் பக்தி யோக சாரம்
மங்காக் கீர்த்தி யாமிந் நேரம்
அற்புத சக்தி நிலைத்திட
பெற்புலர் சித்த மளித்திட
அடலுறு பவிவினை யதிலமர்ந்
திடமுடல் வதைமட சிதைத்திடு (புவி)
மனமடக்கியே வாழ்ந்திடு பாக்யம்
மறுமை தன்னில் விளைந்திடு பாக்யம்
மாண்புறுவேத மாணிக்க வாக்கியம்
மண்டலந் தன்னிலே கொண்டிருஞ் சிலாக்கியம்.
(புவி)

*படம் : விஸ்வாமித்திரா (1936), பாடலாசிரியர் : கே.எம். வேதமாணிக்கம்*



ஓராமாதம் என் உடலது தளர்ந்து
ஈராமாதம் என் இடையது நொந்து
என் இருஸ்தனம் பூரித்து
மூன்றாம் மாதம் என் முகமெல்லாம் வெளுத்து

முலைநுனி கருத்து
பச்சைநரம்போடி என்பால்முகம் சுரந்து
நான்காமாதம் நசுக்கிய மசக்கை
ஐந்தாம்மாதம் எனது அழகுசீமந்தம் செய்தார்
ஆறாமாதம் என் அடிவயர் கனத்து
என் அங்கமே தங்கமாகி
ஏழாமாதம் உன் மாமன்மார்வந்து
முத்துக்கால் பந்தலிட்டு

முகமலர்ந்து எனக்கு அழகு சீமந்தம் செய்ய
கட்டித் தயிரும் கலந்து, பிசைந்து
சம்பா அரிசி சமைத்து வடிக்க
வன்னல் வகையுடன் வரிசையும் கொணர்ந்தார்
என்நா வுக்கு இனியதைப் புசித்தேன்
எட்டாம்மாதம் என்நெற்றிப் பொட்டுமே தளர்ந்து
இப்பட்டணம் அறியஎன் பாங்கிமார் வந்து
எனக்கென்று பட்டுப் பாவாடை உடுத்தினார்;
ஒன்பதாம் மாதம் ஓடியே என்வயிற்றில்
ஒரு பக்கமாய் தாங்குநான் ஓலைபோல் சென்று களைத்தேன்
பத்தா மாதம் பரமனுடைய அருளால் என்
நெற்றி வேர்வை நிலத்தில் விழுக
மெத்த வேதனையால்
முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்து
அந்திபக லாச்சிவனை ஆதரித்து
என் தொந்திசரிய சரியச் சுமந்து
என் அருமைமகனே என் ஆசைமகனே
நீஜனித்த பத்தாமாதம் என் பனிக்குடம் உடைந்து
ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்துபெற்று
கனகமுலைப்பால் தந்து வளர்த்த பாவியாள்
இக்கானில் பெரும்பாம்பிற்கு இரையாக்கி னேண்டா.

*படம் : விஸ்வாமித்திரா (1936), பாடலாசிரியர் : கே.எம். வேதமாணிக்கம், பாடியவர் : மிஸ் இராஜசுந்தரி*



*தொகையறா*

பிறப்பினில் தாழ்வில்லை எனப்பல ஆண்டுகள்
பெருந்தொண்டு புவிமிஞ்சுதே

திறத்துடன் அறிவாள ரானநம் பெரியோர்கள்
தெளித்தபொன் மொழிகொஞ்சுதே.

*பாட்டு*

வீண்சம்பர தாயம் விடுவதே ஞாயம்
மேலான நீதியை விண்டால் சகாயம்
ஆண்பெண் ணினாலே அவனியில் மாந்தர்
ஆகத்தீண் டாமைக்கு ஆதார மேதோ?

*தொகையறா*

அணுகுதல்பாவம் ஆதிதிராவிடச் சோதரர் கல்வி
அறிவதும் பாவமென்றோம்
புனுகுதரும் பூனையெனும் மிருகத்திற்குள் ளேதொரு
பெருமையும் இல்லையென்றோம்.

*நூல் : சமூக சீர்திருத்த கீதம் (1932), நூலாசிரியர் : நாகை. பி. அம்மை நாதப்பாவலர்.*

தீண்டக்கூடாதோ? உங்களைத் தொடக்கூடாதோ?
தொட்டால் ஒட்டிக் கொள்ளுமோ?
சைவம் கெட்டுப் போகுமோ?
பறையன் பறையனென்று பரிகாசம் பண்ணுரிங்கோ
பறையனைக் கண்டவுடன் உள்ளே ஓடி மறையுரிங்கோ
தீண்டக் கூடாதோ - உங்களைத் தொடக் கூடாதோ?
பட்டணமும் போகுறீங்கோ பலபேறே தொட்டுக்கிறீங்க

வீட்டுக்குள்ளே நுழைந்தாக்கா வீராப்பு பேசுறீங்க
அழிந்து போகாதோ - ஜாதி ஒழிந்து போகாதோ!
பறையன் பறையனென்று பரிகாசம் பண்ணுறீங்க
குறையென்ன செய்துவிட்டோம் கூறிடுங்க ளிப்போது?
நாங்கள் என்னசாமி பண்ணோம்?
நாங்கள் ஏதுசாமி சொன்னோம்?

*படம் : விசுவாமித்திரா(1936), பாடலாசிரியர் : டி.எம். வேதமாணிக்கம்.*



# திண்டுக்கல் சுப்பையா பிள்ளை

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்ப திழுக்கு. *திருக்குறள் (467)*

செய்யத் தக்க செயலையும், முடிப்பதற்குரிய கொடுத்தல், இன்சொல் சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தல் எனப்பட்ட நால்வகை வழிகளை ஆராய்ந்து தொடங்க வேண்டும். தொடங்கி வைத்த பின்பு ஆராய்ந்து கொள்ளலாம் என்பது குற்றமாம்.

*வள்ளுவர் தெள்ளுரை - பண்டித வித்துவான் ச. சாம்பசிவன், தமிழ் விரிவுரையாளர், செந்தமிழ்க் கல்லூரி, மதுரை.*

எண்ணித் துணிக கரும மென்பார் - துணிந்தபின்
எண்ணுவ திழுக்கு நண்பா (எண்ணித்)
வீணே - பெண்பாவம் வேண்டாம் பிடி
வாதம் செய்யாதே – நீ, நீதியில் லாததில் (எண்ணித்)

*படம் : லீலாவதி- சுலோசனா (1936), பாடலாசிரியர் : திண்டுக்கல் சுப்பையா பிள்ளை.*



இரண்டு விஷயங்கள் ; பகுத்தறிவுக்கு முரணானவை. அவை, வருவாயை மிஞ்சிய செலவும், சாவு வருவதற்கு முன் தற்கொலை செய்து கொள்ளுதலுமாம்.

**மகான் ஷைகு சாசுதி**

*நூல் : மகான் ஷைகு சாசுதி, பக்கம் : 173, நூலாசிரியர் : ஆர்.பி.எம்.கனி. பி.ஏ., பி.எல்.,*

தற்கொலை பாபமே தானறியீரோ
தாமுணர்ந்து அதனைத் தான்துணிவாரோ?
அற்பர் செயலல்லவோ ஆகையால் நண்பா
அன்புடன் என்சொல்லை ஆட்கொள்ளும் இன்பாய்.

*படம் : லீலாவதி சுலோசனா (1936), பாடலாசிரியர் : திண்டுக்கல் சுப்பையா பிள்ளை.*



***மந்திரிக் கழகு வரு(ம்) பொருள் உரைத்தல்.***

*நூல் : வெற்றி வேற்கை (1931), பாடல் : 8, நூலாசிரியர் : அதிவீரராம பாண்டியன்*

***ராகம் - ஷண்முகப்ரியா*** ***தாளம் - ரூபகம்***

அமைச்சரே நீர் அறைகுவீரே
அறிவு மிகுந்து வரும்பொரு ளுரைசெயு மெனதிரு (அமை)

*படம் : லீலாவதி சுலோசனா (1936), பாடலாசிரியர் : திண்டுக்கல் சுப்பையா பிள்ளை*



நானே தொட்டதுண்டு கண்மணியே - அத
னாலே புண்ணானேன் மெய் மாமணியே

நற்குண மிகுந்த நளின வித்தார நயசரசி
திக்குரவி மதிதிசை மாறினாலும்
தினையளவும் பிரியேனடியிது சத்தியமே.



தூண்டியின் மீனிது போலே - துள்ளி
துடிக்குதே யென்மனதிக்காலே
பட்டு - மாண்டிடத்தானோ - உந்தன்
மானத்தைக் கப்ப லேற்றினாய் நீ பெண்மானோ?

*படம் : லீலாவதி சுலோசனா (1936), பாடலாசிரியர் : திண்டுக்கல் சுப்பையா பிள்ளை.*



கையிலே பிடிப்பது ஜெபமாலை
கஷ்கத்தில் வைப்பது வோகன்னக்கோலை
அங்கமெல் லாங்கரு மேகவியாதி
அதனைமறைக்க மெய்யில் அணிவோம் விபூதி.

*நூல் : சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள் (1878), பக்கம் : 124, பாடல் : 147*
*நூலாசிரியர் : மாயூரம் (மாஜி) முன்சீப் ச. வேதநாயகம்பிள்ளை*

பட்டை நாமப் பக்தன்?
மேனி முழுவதும் வெண்பட்டை நாமம்
விலுக்கண் பார்வை தன்னிலே காமம்
தோளில் சுமப்பது துளசி மணிமாலை
துணிந்து செய்வது பசுக்கொலை வேலை.

*படம் : சிந்தாமணி (1937)*

பூமியே நாடக சாலை - இதில்
சாமி தந்தாரே சகலர்க்கும் வேலை.

*நூல் : பெண்மதி மாலை (1869), பாடல் : 8 பக்கம் : 9, நூலாசிரியர் : மாயூரம் முன்சீப் ச. வேதநாயகம் பிள்ளை.*

**பல்லவி**

நாடகமே உலகம்! நாளை
நடப்பதை யாரறிவார் – ஒரு
நாடகமே உலகம்.

*படம் : சிந்தாமணி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : சிறுகளத்தூர் சர்மா*



ஒலித்துப்பின்னசுரர் வந்தெதிர்க்கும்பொழுது பூதர்
ஓங்கக் கதைகளைக்கொண் டறைந்தாரே - கடும்
புலிக்குப்பயந்தவனென் - மேற்படுங்களெனவிண்
புகைமண்டலத்திலவர் மறைந்தாரே.

*நூல் : ஸ்காந்த புராணம் கீர்த்தனை (1914), பாடல் : 36, பக்கம் : 257, பகுதி : யுத்த காண்டம் (தருமகோபன்வதம்),நூலாசிரியர் : கவிகுஞ்சர பாரதி.*



என்னை யாரென் றெண்ணினாய் – என்
மீசையைப்பார் ஜாக்கிரதை
புலிக்குப் பயந்த பயல்களெல்லாம்
வந்தென் மேலே விழுங்கடா.

*படம் : அம்பிகாபதி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : என்.எஸ். கிருஷ்ணன் மற்றும் குழுவினர்*



ஜாதிமதப்பிரிவு தானேது ஞானிகட்குச்
சமரசப் பெருந் தருமந் தெரிந்து
தமர்வசப்படுங் கருமம் புரிந்து
சத்தியத்திற் சித்தியடைவார் – தன்னையறியும்
தத்துவத்தின் விர்த்தியிதேபார்

*நூல் : காந்திமாலிகை (1923), நூலாசிரியர் : கம்பம் ஜனப் மி. பீர்முகம்மது சாகிப்.*



***ராகம் – கமாஸ்*** ***தாளம் –ஆதி***

ஜாதிமத முயர்வு தாழ்வெனுந் தீது
ஸமரஸ ஞான மஹான்களுக் கேது
ஆதிபரம் பொருட்கு வேற்றுமை யேது
அவனடியார்க்கும் அது கிடை யாது

*படம் : சிந்தாமணி அல்லது பில்வமங்கன் (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : சிருகளத்தூர் சாமா.*



கையாத தீங்கனியோ? கயக்காத விழுதோ?
கரையாத கற்கண்டோ? கறியாத கரும்போ?
கொய்யாத நறுமலரோ? கோவாத மணியோ?
குளியாத பெருமுத்தோ? குலையாத வொளியோ?
மெய்யான பெருவாழ்வோ? விலையறியாப் பெண்ணோ?
விடங்காத தீபிகையோ? விந்தைமர கதமோ?
தீயாத வெண்சுடரோ? தியங்கலில் வாரிஜமோ?
தெவிட்டாத செந்தேனோ? தேவர்புகழ் திருவோ?

*நூல் : போஜ சரித்திரம் (1916), பக்கம் : 260, நூலாசிரியர் : சென்னை ஹைகோர்ட் வக்கீல் டி.எஸ். நாராயண சாஸ்திரியார்,பி.ஏ., பி.எல்.,*

*ராகம் :தோடி - விருத்தம்*

மறையாத மின்னலிதோ - வரையாத ஓவியமோ
குறையாத வெண்மதியோ - குவியாத பங்கஜமோ
சிறையாத வெள்ளமிதோ- சுவையாத தெள்ளமுதோ
மறையோன் படைத்ததுவோ - வழவோ எதன்கனவோ.

*படம் : ரத்னாவளி(1935), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : மஹாராஜபுரம் கிருஷ்ணமூர்த்தி.*



தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே - ஒரு
தந்திரநீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே
நாதர்முடி மேலிருந்த வெண்ணிலாவே - அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே.

*நூல் : திருவருட்பா இரண்டாவது திருமுறை, பக்கம் : 299, தலைப்பு : வெண்ணிலா, பாடல் : 1,2, நூலாசிரியர் : இராமலிங்க அடிகள்*

*ராகம் - குந்தளவராளி* *தாளம் - மிச்ரசாப்பு*

சஞ்சலந்தீர்ந் தின்பமுற வெண்புறாவே - ஒரு
தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்புறாவே
நாதனங்கை வீற்றிருந்த வெண்புறாவே-அந்த
நாதன்வர வேண்டுகின்றேன் வெண்புறாவே.

*படம் : நவீன சாரங்கதரா (1936), பாடலாசிரியர் :பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*



பச்சைமா மலைபோல் மேனி
    பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரர் ஏறே
    ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான்போய்
    இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
    அரங்கமா நகரு ளானே. - ஆழ்வார்



சந்திர சூரியர் போம்கதி மாறினும்
வீழினும் நமக்கென்ன
இந்த இன்பமே சொந்தம தானால்
வானுலகும் வேண்டாம்.

*படம் : அம்பிகாபதி (1936), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்.*

*இராகம் - அசாவேரி* *தாளம் - ஆதி*

கருங்கல்லுக் குள்ளிருக்குந் தேரைக்குங் கருப்பைக்குள்
காணுமுட்டைக்குமென் மேலே - தனு
கரணபுவன போ - கத்தினோ டெச்செயிலுங்
கலந்துவந்ததா ராலே

*நூல் : பாரத நாடகம் , பகுதி : வீஷ்ட்டும பர்வம்,பக்கம் : 430.*

கருப்பைக் குள்ளா முட்டைக்குங் கல்லுக்குள்ளாந் தேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கும் மெய்யனென்ப தறிவிக்கும்
பரப்பிரம்ம ரூபன் கிருட்டினனே...

*நூல் : ஸ்ரீ பாகவத தசமஸ்கந்த கீர்த்தனை (1877), பக்கம் : 456, நூலாசிரியர்: திருவிடைமருதூர் அநந்தபாரதி சுவாமிகள்.*

*திபதை - இராகம் - பூபாளம்* *அடதாள சாபு (கண்ணி)*

கருப்பைக்குட் சீவனைக் கல்லுக்குட் டேரையைக்
காத்ததுநீ மெய்யனே.....முழுக்
கன்னெஞ்சர் சண்டை தடுத்தெம்மைக் காக்கக்
கடன்காணோ மெய்யனே.

*நூல் : அருணாசல கீர்த்தனை (1856),பகுதி : திருமலைச் சருக்கம், பக்கம் : 73, நூலாசிரியர்: காஞ்சி மாநகரம் வீரணப்புலவர்.*

**இராகம் - ஜோன்புரி** **தாளம் - ஆதி**

பல்லவி

ஸத்ய குணபோதன் - சரணமிருக்க
சித்தமும் வீணே கலங்குவ தேனோ (ஸத்ய)

அநுபல்லவி

கல்லினுள் தேரைக்கும் கருப்பை யுயிர்க்கும்
புல்லுணவே தந்து போற்றும் நம்நாதன் (ஸத்ய)

*படம் : அசோக்குமார் (1941), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்.*



வலதுகண் துடிக்குது வலதுதோள் துடிக்குது சாமியே – என்று
பலவித மாகவே பல்லிகள் சொல்லிச்சென் மாமியே.

*நூல் : வாணவுர நாடகம் (1890), பக்கம் : 350,நூலாசிரியர் : ரவிவாடி கம்மவார் குலோத்துங்க அப்பண நாயக்கர்*

எந்தனிடது தோளும் கண்ணும் துடிப்பதென்ன?
இன்பம் வருவதென்று சொல் சொல் கிளியே!

*படம் : சகுந்தலை (1940), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன் பாடியவர் : எம்.எஸ். சுப்புலட்சுமி*



சொல்லுவதென்னடி மெல்லியேகேள் – வெகு
தூரமென்னூரதுகாசி தான் - என்றன்
பேரும் பிராமண சந்நியாசி தான் - இந்த
எல்லையில் யாத்திரை நல்லதீர்த்தமாடி
இங்குவந்தேனடி பெண்ணே

*நூல் : சித்திராங்கதை விலாசம் (1877) ஆனி மாதம்,பக் : 48, நூலாசிரியர் : பரசுராமக் கவிராயர், குண்டையார் தண்டலம்.*

*இராகம் - குறிஞ்சி* *தாளம் - ஆதி*

நானோர் பரதேசி - கால்கள்
நடக்க முடியவில்லை ஊர்காசி
ஏனோ எனையேசிப் பழிப்பார்
யாவருமே பலபல பேசி.

*படம் :திருநீலகண்டர் (1939), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : சிறுகளத்தூர் சாமா*



அணியக் கூடாதா? கதர் அணியக்கூடாதா? - நல்ல
புத்தி வல்லையா? உங்கள் சித்தம் கல்லையோ!

ஆதியிலே நம்பெரியோர் அணிந்துவந்த தெந்தத்துணி?
தீதிலாத கதரென்னும் திவ்யஆடை அன்றோ?அன்றோ?

நாகரீக காலமென்று நாணயமாய் வாய்பேசுறீர்
நாகரீக காலமேகி நானூறு வருஷமாச்சே!

நம்முடைய பெரியோர்கள் நுண்ணிதான எலிமயிரால்
செம்மையான கம்பளங்கள் சொகுசுடனே நெய்துவந்தார்.
நல்லதொரு மோதிரத்துள் நயமான முழத்துணியைச்
செல்லும்வகை யன்றியேதான் நம்பெரியோர் அடைத்துவைத்தார்.
சிறுகக்கட்டிப் பெருகவாழு என்றுமல்லோ ஔவை சொன்னாள்
பெருகக்கட்டி மல்லுடுத்திப் பேதைகளாய்த் திரியலாமா?

இந்தியா தேசமக்கள் இலவம்பஞ்சு போல்தவிக்கச்
சுந்தர கதரைவிட்டுச் சோரத்துணி வாங்கலாமா?
கலியுகக் கடவுளான காந்திமகான் மொழியைவிட்டு
மெலியாமல் வெட்கமின்றி மினுக்கிக்குலுக்கி
உடுக்கலாமா?

*நூல் : சுதேச நாதம் (1925), பக்கம் : 35, 36, பாடல் : 29, நூலாசிரியர் : கோவை - குழந்தைதாஸ்.*

பரதேச ஆடை மோகம் கொண்டு மடமை பெருகியே
அன்னையின் கால்களில் - விலங்குதன்னைப்
பூட்டினோமே - கலங்கும் வறுமை நாட்டினோம்
கதராடை அணிவோமே விடுதலையைப் பெறுவோமே
பேசும் தெய்வம் - காந்தி முனிவரே

*படம் : தியாக பூமி (1939), பாடல் : பாபநாசம் சிவன், பாடியவர் : பாபநாசம் சிவன் குழுவினருடன். இசை : பாபநாசம் சிவன்.*



உனைக்கண்டு மயங்காத பேர்களுண்டோ - வடி
வழகிலும் குணமதிலும் நிகரில் (உனைக்)

தீரத்திலே உயர் கம்பீரத்திலே - கொடை
உதாரத் திலே நடை ஒய்யாரத்திலே
தானத்திலே சொல் நிதானத்திலே - கலை
ஞானத்திலே ஸரஸ கானத்திலே (உனைக்)

*படம் : அசோக்குமார் (1941), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*



பாருக்குள்ளே நல்ல நாடு - எங்கள் பாரத நாடு (பாரு)

***சரணங்கள்***

ஞானத்தி லேபர மோனத்திலே - உயர்
மானத்தி லேஅன்ன தானத்திலே

கானத்தி லேஅமு தாக நிறைந்த
கவிதையி லேஉயர் நாடு. (பாரு)
தீரத்தி லேபடை வீரத்திலே - நெஞ்சில்
ஈரத்தி லேஉப காரத்திலே
சாரத்தி லேமிகு சாத்திரங் கண்டு
தருவதி லேஉயர் நாடு. (பாரு)

*நூல் : பாரதி பாடல்கள் (1922) தேசிய கீதங்கள், பகுதி : பாரத நாடு, பாடல் - 4, நூலாசிரியர் : சி. சுப்பிரமணிய பாரதியார்.*



தூங்கையிலே நீயும் விடுகின்ற மூச்சு
சுழிமாறிமேல் நோக்கிப் போனாலும் போச்சு
பாங்கான சுடுகாடே நிலவர மாச்சு
பக்தன் காமாக்ஷிசொல் நிசமான பேச்சு.

*நூல் : விநோத பரமாநந்த கீர்த்தனை (1922), பாடல் : 15 , பக்கம் : 15. நூலாசிரியர் : உத்தம பாளையம் நாடகாசியர் கே.பி. காமாட்சிபிள்ளை.*

உள்ளே போன மூச்சு வெளியே வந்தால் போச்சு
எல்லாவித ஜீவருக்கும் இக்கதியே ஆச்சு.

*படம் : தேச முன்னேற்றம் (1938), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்.*

தீண்டாமை நோயைக் கொன்றிடுவீர்
தீரமுடன் விழித்து நின்றிடுவீர்

*நூல் : சுதேச நாமம் (1925), பக்கம்: 11, பாடல் : 7 நூலாசிரியர் : கோவை குழந்தைதாஸ்.*

இனிமேல் ஒன்றாய் நாமும் வாழுவோமே
வாழுவோமே, நாமும் வாழுவோமே (இனி)

எங்கும் அபிமானம் ஓங்கும் தொழில் ஊக்கம்
மங்காத நீதியும் பொங்கியும் ஓட (இனி)
பதந்தம் எல்லாம் போக்கியே பழமையாய் (புதுமையாய்)
இந்தியாவில் தீண்டாமை இல்லை என்றே (இனி)

*படம் : தேச முன்னேற்றம் (1938), பாடல் : பாபநாசம் சிவன்.*



புனலுதவு கிணறுகுளம் மக்கள்யா வர்க்குமே
பொதுவாய் இருக்க வேண்டும்
பொலிகடவு ளாலயங் களில்யாவ ருஞ்சென்று
போற்றுமா றமைய வேண்டும்
பூசாரி தரகரில் லாமலே கடவுளைப்
போற்றினால் போற்ற வேண்டும்.

*நூல் : சுயமரியாதைப் பாடல்கள் (1929), பக்கம் : 5,6, பாடலாசிரியர் : சுயமரியாதைப் பாவலர் திரு. வெங்கடசாமி ரெட்டியார்.*

என்ன கோரம் இறைவனுறையும்
புனிதக் கோயிலோ இது (என்ன)

கூச்சமில்லை அர்ச்சனைக்கும் கூலியோ?
கொள்ளையோ எச்சிலுமிழச் சந்தையோ?
சிவசிவ! (என்ன)

*படம் : தாயுமானவர் (1938), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.எம். தண்டபாணி தேசிகர், இசையமைப்பாளர் : ஜி. பஞ்சல நரசிம்ம ராவ்.*



சந்திரபிம்பமோடி - கிளியே!
ஸரஸ ஸரோருஹமோ?
சிந்மயவின்பமோடி - கிளியே
சீர்பெறுமுன் வதனம்!

*நூல் : போஜ சரித்திரம் (1916) (மூன்றாம் பதிப்பு), பக்கம் : 245, நூலாசிரியர்: டி.எஸ். நாராயண சாஸ்திரியார் பி.ஏ., பி.எல்., (சென்னை ஹைகோர்ட் வக்கீல்)*

**ராகம் - சிந்துபைரவி** **தாளம் - திஸ்ரம்**

வதனமே சந்திர பிம்பமோ
மலர்ந்த ஸரோஜமோ (வதனமே)
மாரனம் போ நீள்விழியோ மதுர கானமோ
மின்னு மோகனத்துடி யிடையாள் அன்னமோ
மடப்பிடி நடையாள்
புன்னகைத்தவழ் பூங்கொடியாள் - புவன
சுந்தரியாள் (வதனமே)

*படம் : சிவகவி (1943), பாடியவர் : தியாகராஜபாகவதர்.*



அகட விகட போதனை

1. கள் குடிக்காதவன் கங்காளி
2. கஞ்சா குடியாதவன் காதகன்
3. கூத்தி வீடு போகாதவன் கோமாளி
4. கோலி விளையாடாதவன் கோட்டுமா
5. வேசி வீட்டுக்குப் போகாதவன் வெறியன்
6. தாம்பூலம் தரியாதவன் தறிதலை
7. சுருட்டு பிடியாதவன் சோம்பேறி
8. காகிதமாடாதவன் கழுதைப் பிறப்பு
9. சூதாடாதவனுக்கு சுவர்க்கமில்லை
10. விகட விதனைப் படியாத வீடு விடியாது
விகடக் குட்டி

*இதழ் : மஹா விகட தூதன் – மூன்றாம் பாகம் – புத்தகம், ஆண்டு : 1888 பிப்ரவரி 11 சனிக்கிழமை.*

எத்தனை கள்ளுக் குடத்தைக் குடித்தாலும்
ஏப்பம் விட்டிடுவோம்
கள்ளைக் கடலாய்ப் படைக்காத முட்டாளின்
கழுத்தை வெட்டிடுவோம்

*படம் : சந்திரஸேனா (1935), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்*

தென்னமரக் கள்ளு தேடியே கொள்ளு
தெவிட்டாதுள்ளே தள்ளு திரமதையே விள்ளு
எங்கிருப்பேன் நான் எங்கிருப்பேன்
அண்டாக்கள் உள்ளேபோக அண்டங்களெல்லாம்
ரெண்டாகத் தெரியுதடா இங்கே.

*படம் : விஷ்ணு லீலா (1938), பாடலாசிரியர் : சி.ஏ. லட்சுமண தாஸ்.*

கோப்பைகளை நீ நிரப்பு! குடித்து விட்ட
கோப்பைகளைத் தூக்கியெறி! காற்றில் நீந்திப்
பூப்பிளக்கும் வண்டுக்குத் தேவை என்ன?
பூவுக்குத் தெரிந்தகலை தானே?

*நூல் : உலக நாதன் கவிதைகள் (1967), நூலாசிரியர் : மு. உலகநாதன், பக்கம் : 50, 8.8.1960 - இல் 'நவ இந்தியா' இதழில் வெளிவந்த கவிதை.*



***இராக மாலிகைக் கீர்த்தனம்*** ***தாளம் - ஆதி***

*பல்லவி*

எவர் "வசந்தா" னீர் சென்றீரோ
ஏது மறியோம் (எவ)

அநுபல்லவி

எவர் வசந்தானீர் சென்று இருக்கின்றீரோ வின்று
இன்னுமறியோ மொன்று மிதுவோ வுமக்கு நன்று (எவ)

*சரணங்கள்*

1. உமக் "கேதார" மாகிய உத்தமி சிவ காமி
உளமதிலுமை யெண்ணி வுணங்கலாமோ சாமி
எமக்குமையன்றிகதி யெதுவிப்பெரும் பூமி
இனியிருந்திடுமோகொண் டேகுமேவளை நேமி (எவ)

2. "ஆரபி" மானித்துமை யடிபணிந்தழைத் தாரோ
அபிமானித்தவர்க்காக வையனேநீர்போ னீரோ

ஊரையுமூரிலுள்ள யாரைமொழித் தீரோ
உமதுகுழந்தைகள்மே லுள்ள ஆசைவிட் டீரோ (எவ)

3. இந்த "நாட்டை" விட வெந்த நாடுமேம் பாடு
என்றெண்ணி நீர்நடந்தீ ரிதனுக்காகுமோ யீடு
எந்தையான வும்மை யிழந்துமுயி ரோடு
இனியிருப்போமோ வந்தோ என்செய்வோந்துன் போடு (எவ)

4. பறந்"தோடிப்" போகவே பார்த்திருந்தீரோ காலம்
பரதவித்து நாங்கள் படுமிந்தவலங் கோலம்
மறைந்திருந்து பார்ப்பீரோ மாயமேயிந்த ஜாலம்
வகையொன்றுந் தெரிகிலோ மாதேவனே வோலம் (எவ)

5. "சீராக" வேயெங்கட்குச் செப்பிப்போகலா காதா
சிற்றம்பலவா யிந்தச் சிறுவர்களோடு வாதா
பாரோர்புகழுமெங்கள் பரமதாண்டவப் பாதா
பத்தர்களெண்ணமதைச் சித்திசெய்திடும் நாதா (எவ)

6. குஞ்சிதக் "கானடா" தாடினகோ மானே
கோபமெங்கண்மீதுண்டோ கூறாமற்சென்ற தேனே
வஞ்சகத்தையிந்த மறையவர்மீது தானே
வைத்ததுநீரேனோ மன்றுளாடுமென் கோனே (எவ)

7. "சுருட்டு" சாமரமேளந் தூரியங்கண்முன் னேக
தோரணவீதிகளிற் றுலங்கிசுந்தர மாக
திரட்டும் பத்தர்களோடு சிறப்பாய்போவது போக
தேவாதிதேவஜக தீசாநீர்தனி யாக (எவ)

8. உம்மையே "சகாநா"ங்கள் உறுதியாகவே யெண்ணி
உமது திருவடியையுன்னி மனனம் பண்ணி
இம்மையில்நாங்களுற்ற விடாரதினாலே குண்ணி
இன்பம்பெற்றிலோமந்தோ ஏழைதுன்பத்தில் நண்ணி (எவ)

9. "மோகனஞ்" செய்தெம் மங்கை மோகிக்கநீருங் கண்டு
மோகித்துஅவளது மோகப்பித்தினைக் கொண்டு
த்யாகராஜன் பணியுந் தேவாயெங்களை விண்டு
சென்றீரே யிதனைப்போல் ஜெகத்திலெங்கினி வுண்டு (எவ)

*நூல் : பெற்றான் சாம்பனார் சரித்திரக் கீர்த்தனம் , பக்கம் : 95, 96,*
*நூலாசிரியர் : ரஞ்சித மோகனகவி பாகவதர் தியாகராஜ தேசிகர்.*

*சிவகவி :* வஸந்தருது மன மோஹனமே
மலர்ந்த மலர்களின் மணங்கமழ் தென்றல் (வஸ)

*அமிர்தவல்லி :* மல்லிகை பூங்கொடி குந்தலவராளி
மொய்த்த மலர்நகை குலுங்க விளங்கும் (மல்)

*சிவகவி :* நகைப் பைத்தியம் எதுகுலாம் போதிலும்
நனவிலும் கனவிலும் இதே சிந்தையா (நகை)

*அமிர்த வல்லி :* சுருட்டிக் கொணர்ந்து கொடுத்தலுத்தார் போலவே
சொல்லுக்குப் பஞ்சமில்லை கொஞ்சும் குயிலினிசை

*இருவரும் :* வஸந்த ருது,

*படம் : சிவகவி (1943), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர்கள் : எம்.கே.தியாகராஜ பாகவதர், எஸ்.ஜெயலட்சுமி, இசை : ஜி. ராமனாதன்*



மருமண்டு மதுவுண்டு கிளைவண்டு மகிழ்கொண்டு
மதுர ராகங்கள் பாட

*நூல் : நக்ஷத்திரமாலை (1904), பாடல் : 28, பக்கம் : 8, நூலாசிரியர் : வடக்காண்மரைநாடு வெங்கட நாராயண ஐயங்கார்.*

வண்டு மொண்டு தேனுண்டு பாடுமென்
குண்டு மல்லிகைச் செண்டு கொண்டெறிந்து
ஆடுவோம் வாருங்கள் பாங்கியரே
ஆனந்தமாக உல்லாஸமுடன்

*படம் : சாவித்திரி (1941), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : சாந்தா ஆப்தே*



மதுவையுண்டு மதங்கொண்டு வண்டுகள் கூடும் - ஹரி
வாசிக்கும் புல்லாங்குழற்குச் சரியாகப் பாடும்.

*நூல் : ஸ்ரீ பாகவத தசமஸ்கந்த கீர்த்தனை (1877), பக்கம் : 330, நூலாசிரியர் : திருவிடைமருதூர் அநந்தபாரதி சுவாமிகள்.*

***இராகம் - குந்தளவராளி*** ***தாளம் - ஆதி***

பல்லவி

மனமேநீ ஈசனாமத்தை வாழ்த்துவாய் - தினம்
வாழ்த்துவாய் (மனமே)

அனுபல்லவி

அனவரதமும்நீ அரும்பதம்பாடிக்
கனசுகமேவிடக் கலந்துகொண் டாடி (மனமே)

சரணம்

வம்பு வார்த்தைகளே பெரும்பாவம்
வாய்க்குச் சேதமெல்லாம் என்னலாபம்
எம்பிரான்திரு மகிமைப் பிரதாபம்
எடுத்துப்பேசுவது சத்காலக்ஷேபம் (மகிமை)

*நூல் : சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள் (1878) பாடல் :140, பக்கம் : 117, நூலாசிரியர் : மாயூரம் மாஜி முன்சீப் ச. வேதநாயகம் பிள்ளை*



**இராகம் - குந்தளவராளி** **தாளம் - ஆதி**

பல்லவி

மனமே நீ ஈசன் நாமத்தை
வாழ்த்துவாய் தினம் வாழ்த்துவாய்

அனுபல்லவி

கனவெனும் வாழ்வில் கலங்கி வாடாதே
காதலை மாதரைப் புகழ்ந்து பாடாதே

*படம் : அசோக் குமார் (1941), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*



**இராகம் - நாதநாமக்கிரியை** **தாளம் - ரூபகம்**

பல்லவி

என்ன நன்மையோ - தனகனக சம்பத்திருப்பதனால்

அனுபல்லவி

மன்னுஞ்சுதேசாபி மானிகளுக்கன்றி
மற்றவர்க்கிருந்தாற் சற்றும் பயனில்லை (என்ன)

சரணங்கள்

நம்முடைய நாட்டின் நரபாலரெல்லோரும்
நாட்டை மறந்து தம் வீட்டிலிருந்து
கெண்டை விழியாரைக் கூடிக்குலாவிச்செங்
கோலையிழந்தன ராலினிச் சொல்லவோ (என்ன)

சிற்றுளியொன்றே சிலையைத் துளைத்தல் போல
　　சீர்பெறுந்தேசாபி மானியொருவனே
மற்றவர் தம்முடை மனந்திருப்பித்தன்
　　மார்க்கத்திற்கேற்கவே சேர்க்குந் திறமுள்ளோன் (என்ன)

*நூல் : பிரதாபசந்திர விலாசம்(1877),பக்கம் : 10, 11, அங்கம் : 1, களம் : 1, நூலாசிரியர்: ப.வ. இராமசாமிராஜு பி.ஏ., பாரிஸ்டர் - அட்-லா., எப்.ஆர்.எச்.எஸ். (லண்டன்)., எம்.ஆர்.ஏ.எஸ்.(லண்டன்)*

சொல்லு காந்தி தாத்தாவுக்கு ஜேஜேஜே
நம்ப நாடு நம்சொந்த மில்லையா - இதில்
நமக்கு உரிமை கொஞ்சம் இல்லையா
நம் எல்லோர்க்கும் தேசபக்தி வேண்டும்
தாய் நாட்டிற்கே செய்வோமே தொண்டு தோழர்காள்.

*படம் : தியாகபூமி (1939), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர்: கே.எஸ். லலிதா, இசையமைப்பாளர் : பாபநாசம் சிவன் - மோதிபாபு.*



குழலினும் யாழினுங் குழைந்த செவ்வியாய்
மழலையஞ் சிறுவர்சொல் மருந்தி லின்பமாம்.

*நூல் : தீர்த்தகிரி புராணம் (1870) பிப்ரவரி - 6, பகுதி : 11 (கந்த தீர்த்தச் சருக்கம்), பாடல் : 27, பக்கம் : 103, நூலாசிரியர் : சைவ எல்லப்ப நாவலர்.*

குயிலிசை குழலோசை
உன் கொஞ்சு மொழிக்கிணையாமோ?
கொண்ட மனச் சஞ்சலங்கள்
பஞ்சாய்ப் பறந்திடுமே

*படம் : அவள் யார் (1959), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : பி. லீலா, இசை : எஸ். ராஜேஸ்வரராவ்*



*ராமன் மனைவி :*

உள்ளநாள் உள்ளமட்டும் உந்தனுக்குக் கழுத்தை நீட்டி
　　ஒண்ணாலும் ஒண்ணுமில்லை ஒருசுகமுங் கண்டதில்லை
போடா நீயும் ஆண்பிள்ளையோ
　　ரோஸமில்லையோ மூடா

*ராமன் :*

ஜவுளிக் கடையில் சேலை விக்கிது
　　ஷராய் கடையில் நகையும் விக்கிது
எவ்வளவோ வாங்கி வாறேன்
　　எட்டே நாளில் கண்ணால் பாரேன்

மாதே - என்னை மானம் போக
ஈனமாய் வையாதே.

*படம் : பாமா விஜயம் (1934), பாடலாசிரியர் : கே.வி. சந்தானகிருஷ்ண நாயுடு, இசை : சென்னை ரங்கசாமி நாயகர் குழுவினர்.*



*மனைவி :* கொல்லைக் காட்டு நரியைப் போல
பல்லைக் காட்டி வீண வீச்சு
வெல்லக்கட்டி போல பேச்சுஒரு சேலை வுண்டா
என்னாச்சு?

*புருஷன் :* சேலை ரெண்டு வாங்கித் தாரேன்
செடைக்கொச்சு வாங்கித்தாரேன்
காலையும் புடிச்சுடறேன்
கோவிச்சுக்க வேணாந்தாயி

*படம் : தாயுமானவர் (1938), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர்கள் : பி.ஜி. வெங்கடேசன், பி.எஸ். ஞானம், இசை : ஜி. பாஞ்சல நரசிம்ம ராவ்.*



யார் போய்ச் சொல்லுவார்
யார் போய்ச் சொல்லுவார் - இதுவேளை
எனை வேண்டி அரசனுக்கு
யார் போய்ச் சொல்லுவார்.

மாமுனி தனக்கென்று வழங்கிய கடனுக்குக்
காமினி மாதையும் விற்றான் மயான முற்றான் - என்று
யார் போய்ச் சொல்லுவார்

*படம் : ஹரிச்சந்திரா (1935), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்.*

தொண்டரைத் தூற்றாதே!
கண்டவிலை மாதரைக் கண்கொண்டு பாராதே
கல்லாத மூடர்பால் கலந்துநீ சேராதே
தொண்டர்களைக் குறித்துத் தூஷித்துப் பேசாதே
சொல்லுறுதி யுண்டானால் துன்பங்கள் வாராதே.

*படம் : சிந்தாமணி (1937)*

எல்லா வுயிரும் உன்றன் மக்கள்தானே
இங்கிவர்க்குள் ஏனோ தாழ்வுமுயர்வும் பிறவியிலுண்டோ
ஸன்னிதானம் தன்னிலுமுன் அடியவர்களை
எளியவரென்று இழிவு செய்வதும் முறையோ தேவ தேவா.

*படம் : ஸேவா ஸதனம் (1938), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன் - பாபநாசம் ராஜகோபாலய்யர், பாடியவர் : எம்.எஸ்.சுப்புலட்சுமி, இசை : மோதிபாபு.*



உள்ளது போதுமென்ற சாந்தம் வேண்டும்
உத்தமருடன் மெய்யுறவு வேண்டும்
உண்மை வேண்டும் நெஞ்சில் தண்மை வேண்டும்
உயர்ந்த மெய்ஞ்ஞான அருள் திண்மை வேண்டும்

*படம் : தேச முன்னேற்றம் (1938), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : மாதிரிமங்கலம் நடேசய்யர்.*



*பிச்சைக்காரன் :* இனிமேல் ஒன்றாய் நாமும் வாழுவோமே
வாழுவோமே நாமும் வாழுவோமே (இனி)
எங்கும் அபிமானம் ஓங்கும் தொழில் ஊக்கம்
மங்காத நீதியும் பொங்கியும் ஓட
பந்தம் எல்லாம் போக்கியே பழமையாம் (புதுமையாம்)
(இனி)
இந்தியாவில் தீண்டாமை இல்லை என்றே (இனி)

*படம் : தேச முன்னேற்றம் (1938), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்.*



பந்த மகன்று நம்திருநாடு உய்ந்திட வேண்டாமோ
அதிர்ந்தொலித்தல் கேளாய் - சங்கம்
ஆர்த்திடு முரசம் கேள் - எங்கும்
ஆர்த்திடு முரசம் கேள்.
அடிமை வாழ்வில் ஆசையேனோ
விடுதலை பெற எழுவாய்.

*படம் : தியாகபூமி (1939)*

வேதாந் தச் சோம்பேறி!
வினையறியாச் சோம்பேறியல்லவோ
வேதாந்தங் குடைவான்
மனைவியைக் காக்க வழியறியாதவன்
சன்யாசம் கொள்வான்

*படம் : ஸ்ரீ சங்கராச்சாரியார் (1939)*

நம் நாடு நமக்கே சொந்தம்!
சொல்லு காந்தி தாத்தாவுக்கு ஜே ஜே ஜே!
நம்ப நாடு நம் சொந்த மில்லையா - இதில்
நமக்கும் உரிமை கொஞ்சம் இல்லையா
நம் எல்லோர்க்கும் தேச பக்தி வேண்டும்
தாய் நாட்டிற்கே செய்வோமே தொண்டு தோழர்காள்.

படம் : *தியாக பூமி(1939)*

*மனைவியும் அவமதிப்பாள்!*

உழைத்துப் பொருள் திரட்டும் வரை நம்மை மதிப்பார்,
உடல் தளர்ந்தால் மனைவியும் அவமதிப்பாள்.

படம் : *ஸ்ரீ சங்கராச்சாரியார் (1939)*

வேசித்தொழில் வீழ வேண்டும்
மாசின்றிக் குலமாதர் மனங்குளிரக்
கணவருடன் வாழ வேண்டின்
காசினியில் மானமுடல் காசுக்கு
விற்றுயிரைக் காக்கும் அற்ப
வேசியர்கள் இழிகுலமும் இழிதொழிலும்
வேரறவே வீழ வேண்டும்.
ஈசனருட் படைப்பிலொரு ஜாதி இதற்கில்லை
உளதென் றுரைப்பார் வஞ்சர்.

படம் : *மணிமேகலை (1940)*



ஏழைகளைக் கசக்கிப் பிழிந்து
சிங்காசனம் ஏறிச் சுகபோகம் அனுபவிக்கும்
கோழை வாழ்விலும் கொள்ளையடிப்பதொரு
கொடுமையோ? பகைவனைப் பழிக்குப்பழி வாங்குவேன்.

*பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், படம் : குண்டலகேசி (1946)*



போன நாளை நினைக்காதே!
போனநாளை நினைத்துள்ளம் வருந்தாதே!
பொழுது விடிந்தால் சிந்தை கலங்காதே!

படம் : *கடகம் (1947)*



உலகினில் எங்கேனும் உங்களைப் போலவே
தன்னலம் பேணாத் தியாகிகள்யார் மாமரங்களே?
ஆருயிர்க் கெல்லாம் நிழல்தருவீரே - உமை
யாரடித்தாலும் தீங்கனிதான் தருவீரே.

*பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், படம் : கடகம் (1947)*

விதியென்று மதியில்லா மனிதர் புலம்புவார்
மதியுள்ளோர் மலைகடல் கண்டும் மனங்கலங்குவரோ
எட்டாத சுவர்க்கத்தை எண்ணிக் கண்மூடி
பட்டினி கிடந்து சாவார் - சுத்தமட்டிகளே அவராவார்.

*படம் : மாயமாலை (1951)*

பிறப்பாலும் ஜாதிமத வகுப்பாலும்
மொழியாலும் உயர்வு தாழ்வு பேசி
உழக்கிலே கிழக்கு மேற்கென்று
வழக்காடுவது நியாயமா?

*படம் : அமரகவி (1952)*

இம்மை மறுமைக்குதவும் கல்விப்பொருள்
எல்லோர்க்கும் எளிதாக வேண்டும்
இன்சொல் நாவும் இரங்கும் நெஞ்சும்
எந்நாளும் ஒற்றுமையும் நிலவ வேண்டும்

*பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், படம் : அமர கவி (1952)*

சோம்பலில்லாதே, நாமே புவிமீதே
மெய்ப் பாடுபட்டாலே, அது சோடை போகாதே

*படம் : அமர கவி (1952), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், இசை : ஜி. ராமனாதன்*



மாயா ப்ரபஞ்சம் - தீய பொய் வஞ்சம்
வலிய இழுத்துச் செல்லும் நெஞ்சம்
தீயோர் சங்கம் விடுத்து ஸத்சங்கம்
சேர்வது அறிவினுத் தங்கம்

*படம் : குசேலா (1936), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்.*



*இராகம் - சிம்மேந்திரமத்திமம்* *தாளம் - ஆதி*

பிரமன் நாவில் கொண்டான்
பெருமாள் மார்பில் கொண்டான்

அரன்மெய்ப் பாதி கொண்டான்
பேச வாயுண்டோ?

*படம் : அம்பிகாபதி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*



தீண்டக் கூடாதோ - ஸாமி - தொடக் கூடாதோ
ஒட்டிக் கொள்ளுமோ - சைவம் - பட்டுப் போகுமோ?
உடலுக்குள் உயிர் ஒளிந்திருக்குது
உமக்கும் எமக்கும் ஒன்றுதானே
பிறக்கு முன்னுமில்லை - சுட்டு - எரித்த பின்னுமில்லை
இடைநடுவிலே தீண்டாமை
எப்படி வந்து புகுந்து கொண்டது?
வீட்டுக் குள்ளற நாயைக்கூட சீராட்டி வளர்க்கிறீங்க
நாட்டுக் குள்ளற வரக்கூடாதுன்னு
எங்களை விரட்டியடிக்கிறீங்க

*படம் : ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியார் (1939), பாடலாசிரியர் :பாபநாசம் சிவன், நடிப்பு : வி.என். சுந்தரம், பிரேமாவதி*



தென்றல் வீசிடும் இன்ப மாலை
ஜீவ ராசிகள் மகிழும் சோலை

*படம் : மீரா (1957), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர்கள் : எம்.எஸ். சுப்புலட்சுமி, சித்தூர் வி. நாகையா, இசை : எஸ்.வி. வெங்கட்ராமன்.*

**இராகம் - மாண்டு** **தாளம் - ஆதி**

சந்திர சூரியர் போம்கதி மாறினும்
வீழினும் நமக்கென்ன
இந்த இன்பமே சொந்தமானால்
வானுலகும் வேண்டாம்

*படம் : அம்பிகாபதி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர்கள் : எம்.கே. தியாகராஜ பாகவதர், எம்.ஆர். சந்தானலட்சுமி*

ஆதவன் உதித்தான் விரைவினில் விழித்தே
எழுங்கள் மாந்தர்களே.

*படம் : அம்பிகாபதி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : பி. ஜி. வாசுதேவன், இசை : கே.வி.நாயுடு, டி.கே. ஜானகிராம், கே.சி. ராஜமய்யர்.*





பொன்னுடன் ஒண்பொருள் பூமி
பெண்டிர் புத்திரரும்புகழ் இத்தரை வாழ்வு
அன்னை பிதாவின்றி ஏது - மரம்
ஆயின் விதையின்றிக் காய்கனி ஏது?

*பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், படம் : ஹரிதாஸ் (1944)*

மாநில வாழ்வு பெரும் ஆனந்தம்
வானுலகோர் அறியார் என் கண்ணே (மாநில)

கானமுடன் எழில் மான்விழி மாதே - அபி
மானமும் அன்பும் கலந்திருந்தால் - இந்த (மாநில)

*படம் : அசோக் குமார் (1941), பாடலாசிரியர் :பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*

தன்னுயிர்போ லெதையும் எண்ணுங்களேன்
தியாபரன் அருகில் நண்ணுங்களேன்
எந்நேரமும் பஜனை பண்ணுங்களேன்
எனது நண்பர்காள் இன்பம் உண்ணுங்களேன்.

*பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், படம் : தாயுமானவர் (1938).*

ஆணுக்குள்ளே அழகன் - அவனியில்
அர்ஜுனன் நீயா - இல்லையா?
வில்லுக் குகந்தவன் விஜயனென் றுன்னைச் சொல்லுவார்
பார்த்ததுபோல் உன்னைப் பாராதவரும்
பார்த்தனென்று சொல்லுவார்.

*படம் : பங்கஜ வல்லி (1946),பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்.*

சத்திய நெறியால் தருமபூ பதியார்
தாமரை மலரடி வணங்கி
பத்தியாய் அல்லி எழுதிய ஓலை
பாலனாம் புலந்திர னுக்கு
மெத்தவும் ஜுரமாய் ஜன்னியும் பிறந்து
மிகுதியும் தோஷித் ததனால்
இத்தினம் தந்தை கண்ணில் விழிக்க
ஏங்கினான் இசைவது முறையே.

*படம் : பவளக்கொடி சரித்திரம் (1934), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்*

குளிர்ஜமுனா நதியே - காளிந்தியே
குயில் பாடும் இருகரைசேர் (குளிர்)
தளிர்மிகு மாவும் வளர்பூங் காவும்
தழைந்தமெல் காற்றும் நிழலின்ப ஊற்றும்

களிமயி லாட்டம் புள்ளிமான் கூட்டம்
காதுக்கினிய உந்தன் பாட்டும் கலந்த இன்பக் (குளிர்)

*படம் : பவளக்கொடி சரித்திரம் (1934), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்*

உலக வாழ்வு சதமா? - இதற்
குடலை விலைக்கு விற்று ஜீவனஞ் செய்யலாமா?

*படம் : சிந்தாமணி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன்*

பல்லவி

மாய ப்ரபஞ்சத்தில் ஆனந்தம் வேறில்லை
வஞ்சமில்லாத மெய்க் காதலலா தில்லை,

*படம் : சிந்தாமணி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர்கள் : எம்.கே. தியாகராஜ பாகவதர், கே. அஸ்வத்தம்மா*



என்ன கோரம்? இறைவனுறையும் புனிதக் கோயிலிலே - இது
என்ன கோரம்?
வன்னவுடை ஆபரணம் மின்னவே மயக்கும் - குல
மாதர்விலை மாதரைப் பகுத்தறியக் கூடவில்லை
என்ன கோரம்?
கூச்சமில்லை! அர்ச்சனைக்கும் கூலியோ? சாந்த மெங்கே?
கொள்ளையோ? எச்சிலுமிழச் சந்தையோ? சிவசிவ
என்ன கோரம்?

*படம் : தாயுமானவர் (1938), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், எம்.எம். தண்டபாணி தேசிகர், எம்.எஸ். தேவசேனா நடித்தது.*



நட்ட கல்லைத் தெய்வ மென்பார்
கெட்டிக்காரர் பொய்யடா
சுட்ட கல்லைப் பேச்சி யெனில்
சுவர்களின் பேர் என்னடா?
வேண்டியதைச் சாமி தந்தால்
வேலை செய்ய வேணுமோடா
தூண்டி யின்றி மீன் கிளம்பி
தொண்டைக்குள்ளே தோணுமோடா?

*படம் : பக்த சேதா (1940), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், (பாபநாசம் சிவன், ஜி. சுப்புலட்சுமி நடித்தது)*



*இராகம் - பந்துவராளி* *தாளம் - ரூபகம்*

பின்னலிட்ட குழலாள்
இவள் பின்னழகைக் கண்டால்
வன்னரதி மங்கையும்
தலைவணங்கி மறைவாளே.

*படம் : நவீன சாரங்கதரா (1936), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன் பாடியவர் : எஸ்.எஸ். மணிபாகவதர்.*

தொல்லுலகில் நரரும் எல்லாவுயிரும் சாந்த
சுகவாழ்வு வாழவேண்டும் - வேறென்ன வேண்டும்.

*படம் : நவீன சாரங்கதாரா (1936), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*



ஓடக்காரர்கள்

காட்டு வெள்ளம் கரைபுரண்டு
பெருகினாலும் கலங்க மாட்டோம்.
பாட்டி லக்கரை சேருவோமே
ஏலேலோ சல்மோஹன ரங்கா!
நாட்டிலுள்ள வேற்றுமையைக்
காட்டும் சீமைத் தொண்டமானும்
தோட்டியும் அங்கொன்றுதானே
ஏலேலோ சல்மோஹன ரங்கா!

*படம் : குசேலா (1936), பாடலாசிரியர் பாபநாசம் சிவன்*

சிறைச்சாலை இதென்ன செய்யும்
சரீராபிமானம் இலா ஞான தீரரைச்
சிறைச்சாலை என்ன செய்யும்?

*பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், படம் : மணிமேகலை (1940)*

புஜமிரண்டும் மூங்கில் தளர்நடை யஞ்சி
புருவம் இடையுடலும் வளையுமே கெஞ்சி
ரஸிகத் தண்மையால் கைதேர்ந்தவள் வஞ்சி
ராகத்தில் சிறந்தது நாட்டைக் குறிஞ்சி

*படம் : சிவகவி (1943), பாடலாசிரியர் பாபநாசம் சிவன்*

புளியமரம் நீ எனக்கு
புல்லுருவி நான் உனக்கு
ஒளிபொருந்தும் சூரியலோகம்
உடனே போவோம் வாடி பெண்ணே.

படம் : கச்ச தேவயாணி (1941), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், (கொத்தமங்கலம் சீனு, டி.ஆர். ராஜகுமாரி நடித்தது).



வீரநாதக்கோனார் - பிறப்பிடம் - சிறுவாலை (மதுரை மாவட்டம்) ஜி. கோவிந்தராஜலு நாயுடு - உயரம் 5.11''

1. சதி அனுசூயா (1936)
2. கந்தலீலா (1937) முதலிய படங்களுக்கு இசையமைத்தவர்

தேவ நாராயணன், குருஷேத்திரம், நாகதேவதை, வேங்கை நாட்டு வீரன் முதலிய படங்களுக்குப் பாடல்கள் இயற்றியவர்.



காலையிலே எழுந்திருந்து
கஞ்சி தண்ணி இல்லாமெ
கஷ்டப் படுகிறேனே கடவுளே

படம் : சகுந்தலை (எம்.எஸ். சுப்புலட்சுமி நடித்தது), பாடலாசிரியர்: எம்.ஆர். சாமிநாதன். மதுரை பத்ம நாபனின் தந்தை வி. கண்ணுசாமி. இவரின் தாய்மாமன் - எம்.ஆர். சந்தானம்

பிச்சைக்கு - பாஸ்கரன்
பெருமைக்கு - வேல்சாமி
இச்சைச்கு - முத்துசாமி
இணையிலாச் சங்கரதாஸ்



## நகரம் முத்துசாமிக் கவிராயர்

இவர், சங்கரன் கோவிலை அடுத்துள்ள நகரம் எனும் ஊரில் பிறந்தவர். அல்லி அரசாணை மாலை, பவளக்கொடி, வள்ளி முதலிய நூல்களை இயற்றிப் புகழேந்திப் புலவர் பெயரில் வெளியிட்டவர்.

சில குறிப்புகள் :

டி.எஸ். துரைராஜ் அவரின் சொந்தப் பெயர் சுப்பிரமணியம்.

நடிகர் டி.எஸ். துரைராஜின் தந்தை பெயர் ராஜா நாயுடு

நடிகர் டி.எஸ். துரைராஜ் பிறப்பிடம் தஞ்சை.

டி.பி. ராஜலட்சுமி நடித்த வள்ளி படித்திற்கு மகாராஜ வாத்தியார் பாடல்கள் எழுதினார்.

ஆசை வச்சேன் உன்மேலே நான்
ஆளான மாசி மாசம் - மகாராஜ வாத்தியார்

மறையவன் நாவிலவள்
உறைவது நிஜமானால்
மலஜலம் கழிப்பது
எங்கே எங்கே? - தஞ்சை சுந்தரப் புலவர்

(டி.எஸ். துரைராஜின் மாமனார்)

ஷண்முக தாஸ் (மதுரை); மிகச் சிறந்த பாடலாசிரியர்; நாகை ராஜாராம் பாகவதர்; இவர், புகழ்பெற்ற கதாகாலக்ஷேபக் கலைஞர், தேசிய பாகவதர் என்றும் அழைப்பார்கள். இவரைப் பற்றிபாரதியார் எழுதியுள்ளார். தகவல் ஜி. கோவிந்தராஜலு நாயுடு (6.11.77).கவரப்பட்டு நாயக்கர், மல்லாந்தோப்பு - மாங்கிணறு, அருப்புக் கோட்டை பக்கம்.

## பாவேந்தர் பாரதிதாசன்

நாரே நாக்கர் என்ற வர்ணமெட்டு

பல்லவி

சோலைச் சிங்காரம் சொல்லவெகு கெம்பீரம் (சோலை)

அனுபல்லவி

சேலுலாவும் பொய்கையோரம் சேருமாலை நன்னேரம்(சோலை)

சரணங்கள்

நல்லலரி மல்லிகைப்பூ முல்லையுடன் சாதியே
செல்வமருக் கொழுந்துஞ் செவந்திப்பூவுஞ் சோதியே (சோலை)

காட்சி யிருவாட்சிமலர் தாட்சியில்லா மந்தாரை
மாட்சிமைக் கனிரசங்கள் வடிந்தன செந்தாரை (சோலை)

பிச்சியுஞ் சாமந்தியும் பிணிக்கும் வெட்டி வேருமே
செச்சை நந்தி யாவட்டையுஞ் செண்பகமுஞ் சேருமே (சோலை)

வண்டினம் புரண்டுமது உண்டுபாடுங் காந்தாரம்
கொண்டசெவிக் கானந்தங் குயில்குருவி சஞ்சாரம் (சோலை)

தென்றலும் மகரந்தத்தை நன்றுகொண்டு பூசுமே
மன்றல்முத்து சாமிக்கவி வண்ணம் போன்ற வாசமே (சோலை)

*நூல் : பக்திரஸ கீர்த்தனங்கள் (1922), பாடல் : 57, பக்கம் : 65, 66*
*நூலாசிரியர் : உடுமலை முத்துசாமிக் கவிராயர்*

வாசத் தென்றல் வீசுதே, பூங்காவனக்கிளி பேசுதே
விலாச மலர்த்தடாகமே - வெண்தாமரை வியூகமே
கூசாதே மங்கைபோல் வெண்முல்லை
முத்துநகை கொள்ளுதிங்கே
கோகிலம் பண்பாட வண்டெலாம் சுருதிசெய்ய
தோகை மயில் ஆடல் விந்தை
மாசூர பாடல் விருக்ஷங்கள் தூவிடு
மலர்க்குலம் கண்கவருதே
மானோடு சிங்காரமான பக்ஷிஜாலம் யாவும்
தேனான காதலின்பம் தேடும் காக்ஷி புகல்வதோ!

*படம் : பாலாமணி (1937), பாடலாசிரியர் : பாரதிதாசன்.*



மனமே பணமெனு மகிமையிலாது
மாநில மீதினில் வாழ்வது தீது
தினமே யிதனனு பவமறியாது
செலவுசெய் தால்ஜனப் பெருமை தராது.

*நூல் : மாணவர் கீதமஞ்சரி (1926), பாடல் : 21, பக்கம் : 23, நூலாசிரியர் : சங்கரலிங்கக் கவிராயர்.*

பணமே உனதொரு மகிமையே மகிமை
பாரினில் கோரிய காரியம் நடைபெறும்
பணமே உனையே படையாதவர்க்கேது
பகர்தரு மதிப்பே கிடையாது.

*படம் : பாலாமணி அல்லது பக்காத் திருடன் (1937), பாடலாசிரியர் : பாரதிதாசன்.*



சாதகங்களும் பொய்யே சகுனங்களும் பொய்யே
சற்றேனு மெய்யாமோ - மகளே மருமகளே - நமது
சோதிடத்திற்றானே சொல்லுநன் னிமித்தங்கள்
சுத்தப் பொய்களல்லோ - மகளே மருமகளே

*நூல் : பிரம்ஹ சமாஜ நாடகம் (1871), பக்கம் : 128, நூலாசிரியர் : சைதாபுரம் காசி விசுவநாத முதலியார்.*

நாமிருவர் சம்மதித்தால் எந்த நாய்தான் நம்மைத் தடுக்கும்
சாமிக்கும் வேலை இல்லை
சடங்குகள் காசைப் பிடுங்கிடவும் முடியாது

சாதி மதம் பல சாத்திரம் கோத்திரம்
ஜோதிடம் எதையும் நம்பாதே

அந்தச் சேதி எல்லாம் பழைய போதை
பாதகம் வருமென்று பஞ்சாங்கம் பார்க்காதே.

*படம் : பெற்ற மனம் (1960), பாடலாசிரியர் : பாரதிதாசன், பாடியவர் : சந்திரபாபு, இசை : எஸ். ராஜேஸ்வரராவ்.*

பூஜிதமே புரிந்தோம் புகழ் பெறவே
பூரண ஞான விலாச முந்துறவே
தேசியவீர சுதந்திரம் வரவே
திகழ்மதியே புகழ் நிதியே கொடுத்தருள்
இசை யமுது மிசை பரவும் தேவியே

*படம் : பாலாமணி (1937), பாடலாசிரியர் : பாரதிதாசன்.*

இரவும் பகலும் ரதியுன் னுருவம்
பரிவுடனே வந்தெனையே மருவும்
பாவை நீயே வருவாய்
எனைமேவி இன்பம் தருவாய்; விரைவாய்

*படம் : பாலாமணி (1937), பாடலாசிரியர் : பாரதிதாசன்.*



கண்டதும் காதல் கொண்டேனே அவன்மீதில்
உண்டியும் வேம்பே ஆனதிப் போதில்
தண்டமிழ்ப் பாட்டும் தணலோ என் காதில்

*படம் : பாலாமணி (1937), பாடலாசிரியர் : பாரதிதாசன், வேதாந்த அய்யங்கார் பாட்டு*

பேசுதே உயர்திரு வாசகம் நேராய்
பீர்பிராந்தி ஒயின் புட்டிகள் ஜோராய்

ஆஸி முதலிய கிளாவர் துருப்புடன்
ஆடுதன் ஜாக்கியைப் போடெனக் குஷியாய்!

*படம் : பாலாமணி(1937), பாடலாசிரியர் : பாரதிதாசன்.*

பூலோகமெல்லாம் அவள் ரூபம்
புதிதாகிய சோபித தீபம்
முகமா நிலவா காணேனே
முழங்காததென் மணிமொழி தானே மானே
கதை சிந்துகிறாள் என்னை மாய்க்க
மதுரித மலராம் - மதனது கணைதான்
வதை புரிந்திடுதே - மனது நைந்திடுதே
சமயமும் வருமோ தழுவிக் கொளவே

*படம் : காளமேகம் (1940), பாடலாசிரியர்: பாரதிதாசன், பாடியவர் : டி.என். ராஜரத்தினம், இசை : ஆர்.என். சின்னையா.*



## மாயவரம் தியாகராச தேசிகர்

மங்கையர்கள் யோனிமிசை வைத்திருக்கும் ஆசைதனைப்
பங்குசெய்து நூற்றிலொரு பங்கெடுத்துக் - கங்கைமதி
வேணியரன் பாதார விந்தத்தில் வைத்தக்கால்
காணலாம் காணாக் கதி.

*நூல்: தனிப்பாடல் திரட்டு (1884), பக்கம் : 139 ,பாடல் : 53.*



*இராகம் - முகாரி* *தாளம் - ஆதி*

மங்கையென் மீதினில் வைத்திட்ட பாசம்
மாற்றியீ சனிடம் வைத்திடில் லேசம்
அங்கவன் றன்னருளால் பத வாசம்
அடையலா மென்றேதோ சொன்னேன் பரியாசம்

*படம் : பக்த துளசிதாஸ் (1937), பாடல் : மாயவரம் தியாகராஜ தேசிகர், பாயடிவர் : மிஸ் கே.எஸ். சபிதாதேவி.*



நாளுக்கு நாளாக வேலையில்லாத்திண்
டாட்டம் மிகுந்திட லாச்சே
ஆளுக் கொருவேளை கூழுக்கில்லாமலும்
அலைந்து திரிந்திட லாச்சே

*பரமக்குடி எம். பாலசாமி, இதழ் : குடியரசு, 23.04.1933.*

கூலியாள் வேலை செய்யத் தேவையுண்டோ (ஐயா)
காலையிலிருந்து மாலைவரைக்கும்
கூலிகொடுத்தால் வேலைகள் செய்வேன்.
வேலையில்லாத் திண்டாட்டத்தினாலே
வேளியே வந்தேன் நான் தெரு மேலே

கூலிகொடுத்தால் வேலைகள் செய்வேன்
கூலியுமுன்னே வேலையும் பின்னே.

*படம் : மாணிக்க வாசகர் (1939), பாடலாசிரியர் : மாயவரம் கே. தியாகராஜ தேசிகர் பாடியவர் : நாராயணசிங்*



கன்னத்திலே முத்தங் கொடுத்திடு - மெள்ளக்
கதவைச் சாத்திக்கிண்டு படுத்திடு

*படம் : தர்ம பத்தினி (1935), பாடலாசிரியர் : சி.ஏ. லட்சுமணதாஸ்.*

சீக்கிரம் கதவைச் சாத்தி தாளைப் போட்டிடு
சேரப்பாளையப் போட்டுமே விளக்கை ஊதிடு

*படம் : மாணிக்க வாசகர் (1939), பாடல் : மாயவரம் கே. தியாகராஜ தேசிகர், பாடியவர்கள் : என்.எஸ். கிருஷ்ணன், பி.எஸ். ஞானம், இசையமைப்பாளர் : ஜி. ராஜகோபால் நாயுடு குழுவினர்.*



## மாயவரம் கே. தியாகராஜ தேசிகர்

*இவர் தருமபுர ஆதின வித்வான். 1943ல் (மே)காலமான இவர், தருமபுர ஆதின வித்துவான் 'சித்தானந்த ரத்னாகரம்' திரு. கந்தசாமி தேசிகர் அவர்களின் குமாரர். சங்கீத ஆசிரியர், கவிஞர், நாடக ஆசிரியர், இவர் பல படங்களுக்குப் பாடல்கள் எழுதியுள்ளார்.*

*சினிமா உலகம் : 1943 மே 25, தியாகராஜ தேசிகர், பட்டமங்கத்தாரு, கூறைநாடு, மாயவரம், தஞ்சை மாவட்டம்.*

*தருமபுர ஆதின வித்வான் மாயவரம் ஸ்ரீ கே.தியாகராஜ தேசிகர் காலமான விவரம் கேட்டு வருத்தப்படுகிறோம். காலஞ்சென்ற தருமபுர ஆதின வித்வான் சித்தாந்த ரத்னாகரம் ஸ்ரீஸ்ரீ கந்தசாமி தேசிகர் அவர்களின் குமாரர், சங்கீத ஆசிரியர், கவிஞர், நாடக ஆசிரியர், பல படங்களுக்குப் பாடல்கள் எழுதியுள்ளார். (ஆண்டு 1943)*

### சினிமா நோட்டீஸ்

*தஞ்சாவூர் ஜில்லாவில், நாகப்பட்டிணம் முதலிய இடங்களில் சினிமா நோட்டீஸ்கள், துண்டு பிரசுரங்கள் முதலியன வாழைச்சாரில் அச்சடிக்கப்பட்டு விநியோகம் செய்தனர். காகிதத்தில் தரும் பஞ்சுகளுமே இம்முயற்சிக்குத் தூண்டுகோல் (1943).*

### மாயவரம் கே.தியாகராஜ தேசிகர் (மே - 1943)

*'சிந்தாந்த ரத்னாகரம்' கந்தசாமி தேசிகரின் குமாரராகிய இவர், தருமபுர ஆதின வித்வானாக இருந்தவர். இசை ஆசிரியராகவும், நாடக ஆசிரியராகவும், சிறந்த கவிஞராகவும் விளங்குபவர். இவர் பல திரைப்படங்களுக்குப் பாடல்கள் எழுதியிருக்கிறார்- 1939-ல் வெளிவந்த மாணிக்க விநாயகர் என்னும் படத்திற்கு இவர் எழுதிய பாடல்கள் மக்களால் மிகவும் பாராட்டப் பெற்றன. 'மாமரத்திலே பூ மணக்குதடி' என்னும் பாடலும். 'பாடும் சிதம்பரமாம்' என்னும் பக்திப் பாடலும்*

*சிறந்த பாடல்களாகும். இவர் 1943அம் ஆண்டு மேத் திங்களில் காலமானார்.*

*மாயவர் தியாகராஜ தேசிகரின் பாடல் :*

நாட்டைக் குறிஞ்சி என்பார் - நாங்கள் வாழும்
நாட்டைக் குறிஞ்சி என்பார்
நாட்டுப் பெருமைதனைக் கேட்டுப் புவியுள்ளவர்
நாட்டமோடு தங்கள் நாட்டுக்காகப் - பொதி
மாட்டிலேற்றிச் செல்லும் (நாட்டை)

*(வள்ளித்திருமணம் காலஷேபம்)*

## டி.வி. சாமி

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று *திருக்குறள் (100)*

*ராகம் - சங்கராபரணம்* *தாளம் - மிச்ரம்*

தனியிளம் பருவத்தைத்தானே கழிக்கலாமோ
கனியிருப்பக் காயைத்தின்று ஒழிக்கலாமோ?



*படம் : மைனர் ராஜாமணி (1937), பாடலாசிரியர் : டி.வி. சாமி*

பின்னலைப் பின்னின் றிழுப்பான் - தலை
பின்னே திரும்புமுன் னேசென்று மறைவான்
வன்னப் புதுச்சேலை தனிலே - புழுதி
வாரிச் சொரிந்தே வருத்திக் குலைப்பான்

*நூல் : பாரதியார் கவிதைகள், பகுதி : கண்ணன் - என் விளையாட்டுப் பிள்ளை, பாடல் : 4, பக்கம் : 253*

*ராகம் - இந்துஸ்தான் காபி* *தாளம் - ஆதி*

விளையாடிட வீதியில் போவான்
விளையாடிடும் பெண்களைப் பிடிப்பான்
விளையாட்டெனப் பின்னலை யிழுப்பான்
விரைவாக முன்னோடி யொளிப்பான்

*படம் : பாக்ய லீலா (1938), பாடலாசிரியர் : டி.வி. சாமி, பாடியவர் : பேபி ருக்மணி, இசையமைப்பாளர் : எ.சி. விஸ்வாஸ்.*



கும்மியடியுங்கள் கும்மியடியுங்கள்
கொஞ்சும் கிளிமொழிக் கோதையர்காள்!

ஏழையாய்ப் பெண்களடிமைத் தனத்தில்
இருக்கும் வரையிலும் இத்தலத்தில்
கேழைத்தனம் விலகாதிவ் வசனத்தில்
கொஞ்சமும் சந்தேக மில்லையென்று – தயை
மிஞ்சப் பெரியோர் சமூகம் சென்று (கும்மி)

*நூல் : ஹிந்துஸ்தான் ஹரிபஜனைக் கீர்த்தனை (1914), பாடல் : 82, பக்கம் : 68; நூலாசிரியர் :கும்பகோணம் என்.வீராசாமி.*

*ராகம் - செஞ்சுருட்டி* *தாளம் - ஆதி*

சுதந்திரமே யினியே துயரேது
பூதல மீதினில் சகலரும் இன்று
பேதமில் லாமலே வாழ்வது நன்று
மாதருக் கென்றும் சுதந்திர மீந்து
மேன்மையாய் காதலில் வாழ்ந்திடில் இன்று

*படம் : பாக்ய லீலா (1938) (சுதந்), பாடலாசிரியர் : டி.வி.சாமி, பாடியவர் : பி.எஸ். சீனிவாசராவ், பி.ஏ., இசை : எ.சி. விஸ்வாஸ்.*

*ஒற்றுமையின் உன்னதம்*

இந்தியர்கள் ஒன்றாய் இணைய நினையுங்கால்
சொந்தகுலத் தோர்களையும் தூரத் தொலைத்தலென்ன!
பாஷையி னற்சண்டை பட்டத்திற் காச்சண்டை
ரோஷத்தி னாற்சண்டை யோசித்தால் தீங்கலவோ?
உட்சண்டை மாற்றி உயர்நெறியை மேவுதற்குக்
கட்புலனும் உட்புலனும் கைதருவ தெந்நாளோ!
எல்லோரும் ஒன்றாகி ஏக மனதுடனே
சொல்லால் செயலால் துணைபுரிமின் புத்திரர்காள்!

*நூல் : விஸ்வதர்மோபதேச வீரகண்டாமணி, பகுதி : ஒற்றுமையின் உன்னதம், பக்கம் : 46, 47, நூலாசிரியர் : பி. கல்யாண சுந்தராசாரி.*

ஒத்துமைதான் வேணுமையா – ஆமாமோ
உறுதி ரொம்ப வேணுமையா – ஆமாமோ
பாரத மக்களுக்குள்ளே – ஆமாமோ
பலவித வித்யாசம் ஏனோ – ஆமாமோ
காரியம் ஜெயிக்க ஒரே
கட்டுப்பாடு வேணுமையா (ஒத்துமை)

*படம் : லக்கி ஸ்டார் (அல்லது), பாக்யதாரா (1940).*

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள் – வெள்ளை

அரியா சனத்தில் அரசரோ டென்னைச்
சரியா சனத்துவைத்த தாய்.

*நூல் : விநோதரசமஞ்சரி, பகுதி : காளமேகப்புலவர் சரித்திரம், பக்கம் : 334, நூலாசிரியர் : அட்டாவதானம் வீராசாமி செட்டியார், பாடியவர் : கவி காளமேகம்.*

*இராகம் - சாமா* *தாளம் - ஆதி*

மானஸ பூஜிதையே அம்மையென் (மானஸ)
வான குஞ்சரி வனஜகு மாரி
ஞான ஸம்ஸாரி நம்பினேன் ஆதரி (மானஸ)
அரியாச னத்தமரும் அரசரோ டெந்தனைச்
சரியாச - னத்தில்வைத்துத் தரமெலாந் தந்தனை (மானஸ)

*படம் : கம்பர் (1938), பாடலாசியர் : டி.கே.சுந்தர வாத்தியார், பாடியவர் : எஸ்.வி. சுப்பையா பாகவதர்.*



நீரிற் குமிழி யிளமை; நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் - நீரில்
எழுத்தாகும் யாக்கை; நமரங்காள்! என்னே?
வழுத்தாத தெம்பிரான் மன்னு.

*நூல்: நீதிநெறி விளக்கம், பாடல் : 1, நூலாசிரியர் : குமரகுருபர சுவாமிகள்.*

நீர்க்குமிழி இளமை நீர்மேல் எழுத்து வாழ்க்கை
பார்த்துண்மை வுணராரோ - மனிதர்
பரமன்தாள் பணியாரோ?

*படம் : பாண்டுரங்கன் (1939), பாடலாசிரியர் :டி.கே.சுந்தர வாத்தியார், பாடியவர் : வித்வான் கே.ஏ. ஸ்ரீனிவாசன்.*



தொட்டாலும் கைமணக்கும் சொன்னாலும் வாய்மணக்கும்
துய்ய சேற்றில்
நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினுறு
நளினந் தானே.

*நூல் : தனிப்பாடல் திரட்டு, பாடல் : 65, பக்கம் : 417 பாடலாசிரியர்: பலபட்டடைச் சொக்கநாதப் புலவர்.*

இருக்கட்டும் எப்படியும் கண்ணிவச்சுப் பிடிச்சுடுவேன். அவளைத்
தொட்டாலும் கைசிலிர்க்கும் சொன்னாலும் வாய் இனிக்கும்
எட்டியெட்டிப் பார்த்தமுண்ணா எட்டாமப் போயிடுமோ?

*படம் : சபாபதி (1941), பாடலாசிரியர் : டி.கே. சுந்தர வாத்தியார், இசை : ஸரஸ்வதி ஸ்டோர்ஸ் ஆர்கெஸ்ட்ரா குழு.*



பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். (திருக்குறள் 112)

*ராகம் - காபி* *தாளம் - ஆதி*

காதலே அமுதாவைப் போலொரு
பூவையை காண்பதரிதே
மதன மோகனாங்கி அவள்
பவள வாயூரல் தேனாகும்

*படம் : ஸ்ரீ லஷ்மி விஜயம் (1947), பாடலாசிரியர் : சுந்தர வாத்தியார், பாடியவர் : பி.எஸ். கோவிந்தன், மாதுரி. இசை : ஜி. ராமநாதன்*



குழல் இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர். குறள் – (66)

*ராகம் - ஆபோரி* *தாளம் - ஆதி*

அமுதமாய் மகவு தானில்லை யெனில்
வாழ்வினிலே சுகமேது சொலாய்
யாழும் குழலிசையும் நாடுமோ
மதலைகள் வாய்மொழி யாடிடும் போது

*படம் : ஸ்ரீலஷ்மி விஜயம் (1947), பாடலாசிரியர் : சுந்தர வாத்தியார், பாடியவர் : எம்.எம்.ராதாபாய், இசை : ஜி. ராமநாதன்.*



குறவன் குறத்தி ஆஹா பாரதப் ப்யாரா - மெட்டு

ஆயோ பாசி, மணி ஊசி வாங்கிப்
பாருமவ ராசி
காசுக்கு நாலு துட்டுக்கு எட்டு
காடைக் கௌதாரி முட்டே
குள்ளநரிக் கொம்பு ஜவ்வாது கொட்டே
கள்ளக் கருமருந்து பட்டே
எல்லாம் உண்டம்மே எங்ககிட்டே
ஏதும் இல்லையம்மே திருட்டே

*படம் : ஆனந்த ஆஸ்ரமம் (1939), பாடலாசிரியர் : டி.பி. வேலாயுதசாமி பாவலர், பாடியவர் : கே.எஸ். ஆதிலட்சுமி.*



ஊசி மணிப்பாசி! பாசி
பச்செப் பாசி, பவளப் பாசி!
ஆறு காசிக்கு நாலொண்ணு ஓசி

*படம் : பிழைக்கும் வழி (1948), பாடலாசிரியர் : டி . கே . சு ந் த ர வாத்தியார், பாடியவர் : ஏ.பி. கோமளா, இசை : ஜி. அஸ்வத்தாமா.*



பாம்பிற் கொருதலை காட்டி ஒருதலை
தேம்படு தெண்கயத்து மீன்காட்டும் - ஆங்கி
மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்
விலங்கன்ன வெள்ளறிவி னார்.

நூல்: *நாலடியார், காமத்துப்பால், 98 - ஆம் அதிகாரம், பாடல் - 375*

பாம்பினுக்கு ஒரு புறங்காட்டி ஒருபுறம் இனிமையாகிய தெண்ணீர்க் கயத்து மீனுக்குக் காட்டும் விலாங்கு மீனொத்த செய்கையையுடைய பொதுமகளிர் தோளைத் தோய்பவர் விலங்கினையொத்த அறிவிலாதார் என்பது.

*பொழிப்புரை - மஹாவித்வான் கோமளபுரம் - இராசகோபாலப் பிள்ளை.*

நூல் : *நாலடி நானூறு மூலமும் உரையும் (1903), பக்கம் : 335*

விலாங்கு மீனதுதான் மீனுக்கு வால் காட்டுது
விரையும் பாம்புக்கெல்லாம் ஏன் தலையை நீட்டுது
என்னதான் நன்றி செய்தும் ஏய்க்கும் பணக்காரர்கள்
தன்னலம் தான் கருதும் தன்மையிது தானம்மா.

*படம் : விஜய குமாரி (1950), பாடலாசிரியர்: சுந்தர வாத்தியார், இசை : சி.எஸ். ஜெயராமன்.*



***இராகம் - ஆரபி*** ***தாளம் - ஆதி***

கல்வியைப் போலொரு செல்வம் உளதோ
காணவேணும் புவியோரே - ஓதும் (கல்வி)

பரணி முதலாய் தூது காதலுடன் அந்தமாதி
திருவாயிரமணிமாலை புராண குறவர்வஞ்சி
கலம்பகமும் யென்று வந்து பண்படும் ப்ரபல
கல்வியைப் போலொரு செல்வம் உளதோ?

*படம் : தமிழறியும் பெருமாள் (1942), பாடலாசிரியர் : உடுமலை நாராயணகவி, பாடியவர் : வி.ஏ. செல்லப்பா.*

கல்வியைப் போலொரு - செல்வமுண்டோ
கதிபெற - வழிதரும் - புகழுறும் பிரபல (கல்வி)

பல்லுயிர்க் கெல்லாம் பயன்படத் தூண்டும்
பகைவரை வெல்லும் பழமையைச் சொல்லும் (கல்வி)

*டம் : கலாவதி (1951), பாடலாசிரியர் : டி.கே. சுந்தர வாத்தியார்.*



**இராகம் - சஹானா** **தாளம் - ரூபகம்**

புத்தி இது மகளே - உனக்குநற் - புத்தி இது மகளே (புத்தி)
மாதா பிதாக்களை மகிழ்ந்துநீ தாங்கு
மண்ணில் நல்லபிள்ளை யென்றுபேர் வாங்கு
தீதுகள் உனக்குச் செய்தோர்க்குமே தீங்கு
செய்யாம லிருப்பது திருவுளப் பாங்கு (புத்தி)

உயிர்ப்போனாலும் நீ ஒருபொய் சொல்லாதே
உன்வீடு கடந்தயல் வீடு செல்லாதே
பயில்மறு புருஷர்கள் பார்க்க நில்லாதே
பாவத்தைக் கனவிலும் நினைத்தல் பொல்லாதே (புத்தி)

மாமி நாத்திகளை மதித்துற வாடு
மகளுந்தாயும் போலே மகிழ்ந்துநீ கூடு
சாமியாகுங் கணவன் தயவைநீ தேடு
தலையணை மந்திரம் ஓதுதல் கேடு.
விடியுமுன் எழுந்துநீ வேலையை நாடு
வீட்டைக்கண் ணாடிபோல் விளக்கிக் கையாடு
உடலும் ஆடையும் அழுக்கொழிய நீராடு
உடல் பெருக்கத் தீனி உண்பதுகேடு (புத்தி)

*நூல் : சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள் (1878), நூலாசிரியர் : மாயூரம் மாஜிமுன்சீப், ச. வேதநாயகம் பிள்ளை, பக்கம் : 195, 196, கீர்த்தனை : 178, பகுதி : தகப்பன் மகளுக்குப் புத்தி கூறல்.*

புருஷன் வீட்டில் வாழப்போகும் பெண்ணே, தங்கச்சி கண்ணே - சில
புத்திமதிகள் சொல்லுறேன் கேளு முன்னே, தங்கச்சி முன்னே
புத்திமதிகள் சொல்லுறேன் கேளு முன்னே.

மாமனாரை மாமியாளை மதிக்கணும் - உன்னை
மாலையிட்ட கணவனையே துதிக்கணும்

சாமக்கோழி கூவயிலே முழிக்கணும் - குளிச்சி
சாணம் தெளிச்சி கோலம் போட்டு
சமையல் வேலை துவக்கணும்.

கண்ணால் பேசும் பயக முன்னே நில்லாதே - நீ
காணாததைக் கண்டேனுன்னு சொல்லாதே - இந்த
அண்ணேன் சொல்லும் அமுதவார்த்தை தள்ளாதே - நம்ம
அப்பன் பாட்டன் பேரைக் கெடுத்துக் கொள்ளாதே.

*படம் : பானை பிடித்தவள் பாக்கியசாலி (1958), பாடலாசிரியர் டி.கே. சுந்தரவாத்தியார், இசையமைப்பாளர் : ராஜேஸ்வர ராவ்.*



**இராகமாலிகை** **தாளம் - ஆதி**

கம்பர் (பைரவி)

ஞான சந்திரப்ரபை ரவி போலெளிரச் சந்நி
தானங்களானந்தங் கொண்டேன் (ஞான)

தானவன் வேதங்களைச் சாகரத் தேயொளிக்க
மீனுருக் கொண்டதனை மீட்கவந் தாய்களிக்க (ஞான)

(தோடி)

வானவர் முன்வந் தோடி மந்தரகி ரிசுமந்த
கூனமு துகுடைய கூர்மாவ தாரம் கொண்டாய்

**(வசந்தா)**

பந்தெனச் சூரன்கொண்டிப் பாருல கைவசந்தான்
பந்தனஞ் செய்தானென்று பறித்தவ ராகுரூபா

**(கானடா)**

ஒடுங்கா னடாதசெய லுறுத்துமி ரண்யன்தனை
நடுங்கிம டியச்செய்த நரசிம்ம வதாரனே

**(தன்யாசி)**

மூவடி தான்யாசித்து மூவுல களந்தொரு
சேவடி யால்மா பலிசிரமிதித் தவாமனா

**(சுருட்டி)**

அரச குலத்தினர்கள் அதிகரிப் பைச்சுருட்டி
முரச றைந்திடநின்று முனிந்தப ரசுராமா

*(ஸ்ரீரஞ்சனி)*

ஸ்ரீரஞ்ச னியாம்சீதை சிறைதவிர்த் தேராவணன்
வீரஞ்ச லிக்கப்பண்டு வேகபாணப்ரயோக ராமா

*(சாரங்கா)*

சாரங்க வீரர்கள் தானஞ்சும் பலராமா
பாருங்க ருணைக்கண்ணாற் பாபரஹித நாமா

*(பூபாளம்)*

கோபியர் லோல கோகுல பால
பூ பாளப்ரியா பூமகள் நேயா

*(ஸ்ரீராகம்)*

சீராக வந்து கலிதீரும் ஸ்ரீ ரங்கதனனும்
பேரா வைகுந்தா ஸ்ரீமந்நாராய ணமுகுந்தா (ஞான)

*படம் : கம்பர் (1938), பாடலாசிரியர் : டி.கே. சுந்தரம், மதுரை, பாடியவர் எஸ்.வி. சுப்பையா பாகவதர்.*



## வேல்சாமி கவி

*இராகம்* - தோடி *தாளம் - சாப்பு*

(சிங்காரி ஒய்யாரி – என்ற மெட்டு)

தெய்வீக சிங்காரி இந்து
தேசமெச்சிடும் மக ராஜலக்ஷிமியவள் (தெய்)

வளர் சேலைப் பழித்த விழியாளைத்
தெரிசித் திடவுயர் (தெய்)

எழில் திருந்தும் பவள இதழ் பொருந்தும்படி
அமுர்த ரசம் அருந்தும்படி யுதவி
புரிந்து நேசித்திட வரும் (தெய்)

திட சித்தஜனுக்குரிய யக்கல வித்தொழில்
தத்துவமிக்க மடக்கொடி யிவள் (தெய்)

*படம் : வள்ளித்திருமணம் (1933),(டி.பி.ராஜலட்சுமி, எம். துரைசாமி முதலியோர் நடித்த படம்), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர்: எம். துரைசாமி.*

மாலை நேரம்
மனோகரம் தரும் காலம்
பூமாதேவியின் சோபன ரூபம்!
பூந்தென்றல் வீசும் மாலை....

ஆருயிர் யாவும் ஒருயிரான
'கோகிலம்' கொஞ்சும் சோபித மாலை!

*படம் : மாயா மாயவன் (1938), பாடலாசிரியர் : வேலுசாமி கவி.*
*இப்படத்தில் கதாநாயகியாக நடித்தவரின் பெயர் கே. கோகிலா என்பதாகும்.*



பொன்போலும் தாமரைப் பூவுமே கொளுத்துது
மின்போலுஞ் சந்திரன் மேலெலாங் காயுது
என்மேலுஞ் சந்தனம் எரிவந்தம் செய்யுது
தன்மேலும் பூக்கொண்ட பள்ளியும் வருத்துது.

*நூல் : சீதா கல்யாண நாடகம் (1915), பக்கம் : 74. நூலாசிரியர் : டி.பக்தவத்சலம், பி.ஏ., எம்.பி.பி.ஐ..*

சந்தனம் கஸ்தூரி ஜவ்வாது மணக்குது
சல்லாப மாகமனம் கொண்டாட பிணக்குது
பந்தெனும் கைக்கலச செண்டுகள் கனக்குது
பால்நில வொளிஎந்தன் மேனியைத் தகிக்குது.

*படம் - சதி - மகாநந்தா (1940), பாடலாசிரியர் - எஸ். வேல்சாமி கவி பாடியவர் - டி.ஆர். சுப்புலட்சுமி. இசையமைப்பாளர் : டி.எம். இப்ராகிம் மற்றும் குழுவினர்.*

***பாரிஸ் மெட்டு*** ***தாளம் - ரூபகம்***

வாலிப காலத்தில் மஞ்சத்தின் மேலென்னை
ஆலிங்கனம் செய்தால் ஆனந்தம்

*நூல் : சகுந்தலா சரித்திரம் (1930).பக்கம் : 35. பகுதி : சகுந்தலை விரகதாபம். நூலாசிரியர் : வித்வரத்தினம். எம்.ஆர்.எஸ். வேல்சாமி கவிராயர்.*

***(மாம்பழக் கவிச்சிங்க நாவலர் அவர்களின் மரபினர்)***

வாலிப காலம் வருமோ இனிமேல்
மாரன் ஏவும் பாணம் சகியேன்
மருவிட வருவாயே
மலரணை - தனிலணைந்திடுவாயே
கனிரச : இதழமுதருள் வாயே!

*படம் : சதி - மகாநந்தா (1940), பாடலாசிரியர் : வேல்சாமி கவி, இசையமைப்பாளர் : டி.எம். இப்ராகீம்.*



உன் அழகைக் காண இரு கண்கள் போதாதே - என்
இரு கண்கள் போதாதே
உன தெழிலில் ரதி மங்கையும் நிகரோ
நாண முறாளோ

*படம் : திருநீலகண்டர் (1939), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*

கண்கள் ரெண்டும் போதுமா
உன்னழகைக் காணவே

*படம் : திவான் பகதூர் (1943), பாடலாசிரியர் : வேலுசாமி கவி, பாடியவர்கள் : ஜே.சுசீலா,டி.ஆர். ராமச்சந்திரன்.*



வன்பெரு நெருப்பினைப் புன்புழுப்பற்றுமோ
வானை ஒருமான் தாவுமோ
வலியுள்ள புலியை ஓர் எலி சீறுமோ பெரிய
மலையை ஓர் ஈச் சிறகினால்
துன்புற அசைக்குமோ வச்சிரத் தூணொரு
துரும்பினால் துண்டமாமோ.

*நூல் - திருவருட்பா, நூலாசிரியர் : இராமலிங்க அடிகள்.*

***ராகம் - பிலஹரி*** ***தாளம் - ஆதி***

பெருந் தணலை ஒரு புழு வந்தணையுமோ
பேய் பிடித்த தீயும் தீண்ட அழிவனே.

*படம் : அருந்ததி (1943), பாடலாசிரியர் : வேல்சாமி கவி, பாடியவர்: எஸ்.டி. சுப்பையா.*



கும்மியடியுங்கள் கும்மியடியுங்கள்
கொஞ்சும் கிளிமொழிக் கோதையர்காள்
பால விவாகத்தின் சீர்கேடு சொல்லப்
படுமோ மெத்த பெரும்பாடு
காலமறிந்தொரு ஏற்பாடு செய்யக்
கண்ணபிரானைத்தினம் வணங்கி நல்ல
புண்ணியவான்களிட மிணங்கிக் (கும்மி)

*நூல் : ஹிந்துஸ்தான் ஹரிபஜனைக் கீர்த்தனை (1914), பாடல் : 82, பக்கம் : 68, நூலாசிரியர் : கும்பகோணம் என்.வீராசாமி நாயுடு.*

ஜென்ம பூமிக்கே நன்மை தேடுவோம் - ஜெய
பேரிகை முழங்க தாயகம் விளங்க
செந்தமிழ்க் கொடியை நாட்டுவோம்

ஜாதி பேதம் இனி இல்லை யாவரும் சமமே
கள்ளெனும் அரக்கனை ஓட்டுவோம் நாமே

கைத்தொழில் மேலோங்கி
வாழ்க வாழ்கப் பணியாற்றுவோம்.

பால்ய விவாகத்தைப் போக்க
பெண்கள் உரிமைதனை உண்டாக்க
ஏழை என்னும் தாழ்வு நீக்கி
யாவரும் கூடி வந்து
ஜே ஜே ஜே என வாழ்த்துவோம்!

*பாடலாசிரியர் : எஸ். வேல்சாமி கவி, படம் : திவான் பகதூர் (1943).*

கண்களைக் கொடுத்துப்பின் மண்பெறுவாரோ
காட்டை மதித்துச் சொந்த நாட்டையும் மறப்பாரோ.

*படம் : பக்த கௌரி (1941), பாடலாசிரியர் : வேல்சாமி கவி, பாடியவர் : பி.எஸ். சிவபாக்கியம், இசை : டி.எம். இப்ராகீம் மற்றும் குழுவினர்.*



## பாபநாசம் இராஜகோபாலய்யர்

நட்ட கல்லைத் தெய்வமென்று நாலு புட்பஞ் சாத்தியே
சுற்றி வந்து முணமுணென்று சொல்லு மந்த்ர மேதடா!
நட்ட கல்லும் பேசுமோ நாத னுள்ளி ருக்கையில்?
சுட்ட சட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ?

*நூல் : சித்தர் ஞானக் கோவை (சிவவாக்கியர் பாடல்கள்), நூலாசிரியர் : சிவவாக்கியர், பக்கம் - 74, பாடல் : 497.*

நட்ட கல்லைத் தெய்வ மென்பார்,
கெட்டிக்காரர் பொய்யடா
சுட்ட கல்லைப் பேச்சி யெனில்
சுவர்களின் பேர் என்னடா?

*படம் : பக்த சேதா (1940), பாடலாசிரியர் : பாபநாசம் ராஜகோபாலய்யர், இசை : வி.எஸ். பார்த்தசாரதி அய்யங்கார்.*



இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று *திருக்குறள் (100)*

*ராகம் - கானடா* *தாளம் - ஆதி*

கனியிருந்திடவே காய்கவர்வாரோ
பனித்துளி யருந்திப் பயன் பெறுவாரோ?

*படம் : கிருஷ்ணன்தூது (1940), பாடலாசிரியர் : பாபனாசம் ராஜகோபாலய்யர்.*

*இராகம் - பைரவி* *தாளம் - ஆதி*

தேடி வந்தேனே வள்ளிமானே - இனி
மோடி செய்யாதே செழுந் தேனே - தானே (தேடி)

தீனமான குரலோடு பரண்மிசை
கான வாழ்விலுறுதல் சரியல்லவே (தேடி)

*நூல் : கொலம்பியா மற்றும் ஓடியான் கிராமபோன், பாடல் : நான்காம் பாகம் (1934). பாடலாசிரியர் : பாஸ்கர தாஸ், பாடியவர் : ஏ.வி. நாகசுந்தர ராஜா.*

தேடி வந்தேனே தேவயாணி
மோடி செய்யாதே பணிந்தேனே நானே (தேடி)

தீரமான குரலொடு ஒருதரம் தாறுமாறு
மொழிகளை உரையாடி (தேடி)

*படம் : கச்ச தேவயாணி(1941), பாடலாசிரியர் :பாபநாசம் ராஜகோபாலய்யர், பாடியவர் : கொத்தமங்கலம் சுப்பு, இசையமைப்பாளர் : வித்வான் வி.எஸ். பார்த்தசாரதி அய்யங்கார்.*

சாதி சமயக்கொடுமை தவிர்ந்து
சாமிகோவிலைத் தகர்த்தெறிந்து
நீதியில் முதலாளி ஆட்சி தொலைந்தால்
நேர்மையாய் உண்மை பெருமை வளரும்.

*இதழ் : தமிழன் (23.5.1934),புத்தகம் : 8, இலக்கம் : 47, பக்கம் : 13, பாடல் இயற்றியவர் : புதுப்பாளையம் எ. முத்துகிருஷ்ணன்.*

தொல்லுலகில் ஈசனார் படைப்பிலே துமில்லையே
சொல்லவந்த சாத்திரங்கள் செய்து வைத்த தொல்லையே
நாட்டவர்க்கு ஈசன் கோயில் நாட்டிவைத்த பொதுவிடம்
பூட்டி வைத்த தாருடைத்து போவோமுட்புகுந்து நாம்
நாமெனும் இவ்வாணவம் நமக்கு வேண்டாம் என்றுமே
யாவரும் இவ்வுண்மையைத் தெரிய இன்று சொல்லுவோம்
(சொல்லு)

*படம் : தியாகி (1947), பாடலாசிரியர் : பாபநாசம் ராஜகோபாலய்யர், இசை : எஸ்.வி. வெங்கட்ராமன் மற்றும் டி.ஆர்.ராமநாதன்.*



ஊற்றைச் சரீரமிது வீந்திடும் கட்டையிது
இதுவோ என் வீடு எலும்போ என் கூடு?

*நூல் : வேதாந்த மணிமாலை (1946), பாடல் : 8, நூலாசிரியர் : ருக்மணி அம்மையார், பக்கம் : 63, பகுதி : ஜீவ மணிமாலை.*

நாற்ற நரம்பினால் ஆக்கிய கூடு
ஊற்றச் சரீரம் உளுத்திடும் வீடு

*படம் : பக்த ஜனா (1948), பாடலாசிரியர் : இராஜகோபாலய்யர், இசை : ரீமா மற்றும் நாராயண்.*



யான்நோக்குங் காலை நிலன் நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்.

*நூல் : திருக்குறள் (1094),*

வருவார் இன்றிரவு என்நாதன்
தருவார் இன்பமது என்னாளும் (வரு)

நாடி வந்தென் கை பிடிப்பார்
மிக நாணம் கொண்டு தலைகுனிவேன்
முகம் பார்த்து பார்த்து மனம் குளிர்வேன்
இன்ப நாள் இன்று தான் (வரு)

*படம் : போஜன் (1948), பாடலாசிரியர் : ஆர். ராஜகோபாலய்யர், பாடியவர் : எஸ். வரலட்சுமி, இசை : ஜி. ராமநாதன்.*



*பாபநாசம் இராசகோபாலய்யர் திரைப்படப் பாடல்களில் இவர் சிந்தனை வீச்சு!*

நாட்டின் நல்ல சேலை நெய்ய
ராட்டினங்கள் சுற்றுவோம்
வாட்டியே வதைக்கும் பஞ்சம்
வாடி ஓடச் செய்குவோம்

*படம் : தியாகி (1947), பாடலாசிரியர் : பாபநாசம் ராஜகோபாலய்யர்.*

தள்ளாத காலத்திலே கல்யாணமா?
தான்கெட்ட கேட்டுக்கொரு பெண்வேணுமா?

*படம் : போஜன் (1948), பாடலாசிரியர் : பாபநாசம் ராஜகோபாலய்யர் . (பி.எஸ். கோவிந்தன், எஸ். வரலட்சுமி நடித்தது).*

சூரிய உலகம் போவோம்!
புளிய மரம் நீ எனக்கு

புல்லுருவி நானுனக்கு
ஒளி பொருந்தும் சூர்யலோகம்
உடனே போவோம் வாடி பெண்ணே!

*படம் : கச்ச தேவயானி (1941).*

தத்தாரி அரசாளும் தனிக்காட்டு ராச்சியத்தில்
கத்தரிக்கோல் மந்திரியாம்
கன்னக்கோல் காவலராம்!

கஞ்சிக் கலயத்திலே
கட்டெறும்பு கடிக்குதடா!
பஞ்சத்துக்குப் பஞ்சமில்லை
பாவிப்பயல் ராச்சியத்தில்!

வீதி எல்லாம் தூக்குமரம்
வீடெல்லாம் சிறைவாசம்
வாதனையும் சோதனையும்
மடிமாங்காய் போடுதடா!

***படம் : போஜன் (1948).***

## கோவை அ, அய்யாமுத்து

### கஞ்சன் திரைப்படம்

கோவை சென்ட்ரல் ஸ்டுடியோவை எனது நண்பர்கள் எம். சோமசுந்தரமும் எஸ்.கே. மொய்தீனும் வாடகைக்குப் பிடித்து, திரைப்படங்கள் தயாரித்துக் கொண்டிருந்தார்கள்.

இராஜமாணிக்கம் கம்பெனியிலிருந்து விலகிய நடிகர்கள் நம்பியார், மாதவன், எஸ்.எம். சுப்பையா, எஸ்.வி. சுப்பையா மற்றுஞ் சிலர் என்னுடைய சிபாரிசின் பேரில் அங்குபோய்ச் சேர்ந்தனர்.

இராஜகுமாரி படத்தில் எம்.ஜி. ராமச்சந்திரன் நடித்துக் கொண்டு இருந்தார். வேலைக்காரி படத்துக்கு சி.என். அண்ணாதுரை வசனம் எழுதிக்கொண்டிருந்தார்.

ஒரு நாள் டிசம்பர் மாத ஆரம்பத்தில் சோமசுந்திரம் வந்தார்.

மாதச் சம்பளத்தில் பல நடிகர்கள் இருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் தங்கட்குத் தெரிந்தவர்கள். அவர்களுக்குப் போதுமான வேலையில்லை. அவர்களை வைத்துக் கொண்டு தாங்கள் ஒரு படம் தயாரித்தால் நன்றாக இருக்கும் என்று சொன்னார்கள்.

சரி, என்னிடம் "கஞ்சன்" என்றொரு கதை தயாராக இருக்கிறது. வசனங்களுடன் நாடக வடிவத்தில் இருக்கிறது. நாலைந்து தினங்களில் Synopsis எழுதி வைத்து இருக்கிறேன். படப்பிடிப்பின்போது எனக்குத் துணையாகச் செயல்படும் ஒருவரை நாளைக்கே அனுப்பிவையுங்கள் என்றேன்.

டி.ஆர். கோபுவும், எஸ்.எம். சுப்பையாவும் வந்தார்கள். இரண்டே நாட்களில் கதையைத் தொகுத்து டையலாக்கு களுடன் கொடுத்தேன்.

எஸ்.எம்.சுப்பையா மியூசிக் டைரக்டர், ராஜமாணிக்கம் கம்பெனியில் ஹார்மோனியம் வாசித்துக் கொண்டிருந்தவர். என்னிடம் அதிக வாஞ்சை உள்ளவர். சில ட்யூன்கள் கொடுத்து அதன்படி பாட்டுகள் எழுதிக் கொடுக்கச் சொன்னார். எழுதிய பாட்டை உடனிருந்து பாடுவதற்குத் திருச்சி லோகநாதனையும் அனுப்பியிருந்தார்.

ட்யூன்களுக்கு ஏற்றவாறு பாட்டுகள் எழுதுவது எனக்கு மிகச் சங்கடமாக இருந்தது. ஏதோ வார்த்தைகளைப் போட்டு நிரப்பத்தான் முடிந்தது. அதில் எனக்குத் திருப்தியேற்பட வில்லை.

கஞ்சனுக்கு மொத்தம் ரிகார்டான பாட்டுகள் பன்னிரண்டு. சுப்பையாவோடு சமரசம் செய்து அவற்றில் ஏழு பாட்டுகளை நான் எழுதிக் கொடுக்க அவர் அவற்றிற்கு ஏற்ற இசை அமைத்துக் கொண்டார்.

கஞ்சன் படத்தின் முதற்பாட்டு பிரசித்தமானது.

"இந்த உலகினில் இருக்கும் மாந்தரில்
எழிலுடையோன் எங்கள் தமிழன்"

என்று அப்பாடல் துவங்கும். அதனை எம்.எம். மாரியப்பா கம்பீரமாகப் பாட ஒளிப்பதிவு செய்தோம்.

நூல் : எனது நினைவுகள் (1973), பக்கம் : 690, 691, 692, நூலாசிரியர் கோவை அய்யாமுத்து.

இன்றே பெரும்பயன் இன்றே பெறவும்,
நன்றே செய்யவும் நயம்பட வுரைக்கவும்,
அறம்பல தாங்கவும் அன்புகொண் டுலவவும்,
தமிழ்மொழி மலியவும் தமிழ்த்தாய் ஓங்கவும்,
தமிழ்நாடு யாவும் தமிழ்மணம் கமழவும்,
தமிழ்நாடு தழையவும் தமிழ்க்கொடி உயரவும்,
தமிழ்மணி யிசைக்கவும் தமிழ்ஒளி வீசவும்,
தமிழ்பெருந் தெய்வம் தமிழாசி கூறவும்,
வாழ்நா ளதனில் வழுத்துமின் இறையை.



*இதழ் : விவேக போதினி (1920), கவிதை இயற்றியவர்: ச.தா. மூர்த்தி முதலியார்.*

தமிழன் நாட்டிலே தமிழன் ஆட்சியே
தழைத்திடச் செய்யடா தமிழா - உடனே (தழை)
தமிழ னுக்கென தனிக்கொடி யொன்றினைத்
தந்து மகிழடா தமிழா நீ (தந்து)

*படம் : கஞ்சன் (1947), பாடலாசிரியர் : கோவை அ. அய்யாமுத்து, பாடியவர் : எம்.எம். மாரியப்பா, இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.*



## கு.மா. பாலசுப்பிரமணியன்

கன்னியே மாமரித்தாயே
என் - காணிக்கை கண்ணீரே
இன்னல் கடல்தனிலே-
இறகில்லா பட்சிபோல் வீழ்ந்தேன்
மின்னல் நிகரான வாழ்வில் -
மீளாத சோகம் கொண்டேனே.

*படம் : சிட்டாடல் ஞானசௌந்தரி (1948), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : பி.ஏ. பெரியநாயகி, இசை : எஸ்.வி. வெங்கட்ராமன்.*

காசு இல்லையே பூஜைபண்ண உனக்கு
கண்ணீர் தனையே காணிக்கை தந்தேன்
கண்யமும் புண்யமும் அடையுமுன்னால்
மண்மீதில் என்னைக் காப்பாற்று அன்புடன்

*படம் : இது நிஜமா (1948), பாடலாசிரியர் : கு.மா. பாலசுப்ரமணியம், பாடியவர் : ஜிக்கி.*



கல்யாணம் செய்து வையுமே அந்தக்
கானகத்தில் கிடைத்த ஞான சௌந்தரியைக் (கல்)

*படம் : ஞானசௌந்தரி (1935), பாடல் : உடுமலை நாராயண கவி, பாடியவர் : சி.வி.வி. பந்துலு.*

கல்யாணம் செய்து பாரடி! - என்னைக்
கல்யாணம் செய்து பாரடி! - அடி கல்யாணி
கல்யாணம் செய்து பாரடி! - என்னைக் (கல்யாணம்)

*படம் : வேலைக்காரன் (1952), பாடலாசிரியர் : கு.மா. பாலசுப்ரமணியம், பாடியவர் : டி.எஸ். பகவதி, எம்.எஸ். ராஜேஸ்வரி.*



வண்டுமொய்த் தனைய கூந்தல்
மதனபண் டார வல்லி
கெண்டையோ டொத்த கண்ணாள்
கிளிமொழி வாயி னூறல்
கண்டுசர்க் கரையோ தேனோ
கனியோடு கலந்த பாகோ!
அண்டர்மா முனிவர்க் கெல்லாம்
அமுதமென் றளிக்க லாமே.

*நூல் : விவேக சிந்தாமணி, பக்கம் : 8.*

வண்டுமொய்க் காத கூந்தல்
வளையாத முத்துப் பல்லி
கெண்டைமீன் போன்ற கண்ணாள்
கிளிமொழி பேசும் வாயாள்
ஊர்வசியே இவள்தானே!
ரம்பை தானே! மேனகை தானே!
உயிரோவிய மனமோகினி
எனதாருயிர் மனையாள் இவள்...

*படம் : இன்ஸ்பெக்டர் (1953), பாடலாசிரியர் : கு.மா. பாலசுப்ரமணியம், பாடியவர் : ஏ.எம்.ராஜா, இசையமைப்பாளர் : ஜி.ராமநாதன்.*



பூசணிக்காய் ஆதிசிவன் பூசல் தொப்பையல்லவா
பொரியல்பாகல் ருத்திராக்ஷம் புதுமை யழகல்லவா
தோழி சுரக்ஃகாயோடு சோறெடுப்ப தல்லவா
துண்ணும்வாழை ஆண்குறிதான் தொல்லைவிட்டுச் சொல்லவா
கத்தரிக்காய் தூளிதப்பை காரணங்க ளாச்சுதே
கருணைக்கிழங்காவது கர்த்தன்வித்துப் போச்சுதே
கொத்தவரைப் பித்தனிட கொள்கைவிர லாச்சுதே
கோதிலாத அவரைக்காய் குறிப்புநக மாச்சுதே.

*நூல்: சிறுத்தொண்ட நாடகம் (1930), பக்கம் : 39, 40, நூலாசிரியர் : சேங்காடு மாசிலாமணி கவிராயர்.*

வெண்டைக்காய் என்று சொன்னாய் சிறுத்தொண்டா
பக்தா சிறுத்தொண்டா! அந்த வெண்டைக்காய்
சிவனோடெ விரலல்லவோ
முருங்கைக்காய் என்று சொன்னாய் சிறுத்தொண்டா

அந்த முருங்கைக்காய் சிவன் சடை முடியல்லவோ
பூசணிக்காய் சிவனோட வயிறல்லவோ, பக்தா
வாழைக்காய் அவனோட நெற்றியல்லவோ, பக்தா
நெற்றியல்லவோ!
பாகற்காய் ருத்திராக்ஷ மாலையல்லவோ பக்தா
பீர்க்கங்காய் திருநீற்றுப் பையல்லவோ!
சுரைக்காய் கமண்டலம் தானல்லவோ
சுண்டைக்காய் சிவனோட கண்ணல்லவோ
செடிகொடி ஜீவனெல்லாம் சிவமல்லவோ - அதை
சிவபக்தர் உண்ணுவது பாவமல்லவோ.

*படம் : சிவக்தி (1956), பாடலாசிரியர் : கு.மா. பாலசுப்ரமணியம், பாடியவர் : எஸ்.சி. கிருஷ்ணன், இசை : டி.ஜி. லிங்கப்பா.*



*தரு* *இராகம் - தோடி* *அடாதா சாபு*

நாட்டிலே நல்லோ - ரொருத்தருக் காகவும்
நன்றாய் மழை பொழி வாராம் - வாழும்
நானிலத்தோர்களனேகர் தமக்கது
நட்பாக நிற்கு மாதாரம்.

*நூல் - அருணாசல கீர்த்தனை (1856), திருமலைச்சருக்கம், பக்கம் - 76, நூலாசிரியர் - காஞ்சி மாநகரம் வீரணப்புலவர்.*



நல்லவர் வாழப் பெய்திடும் மழையால்
நாடும் வாழ்ந்திடும் என்பது பொய்யோ!

*படம் : குழந்தைகள் கண்ட குடியரசு (1960), பாடலாசிரியர் : கு.மா. பாலசுப்ரமணியம், பாடியவர் :—சுசீலா, இசை : டி.ஜி. லிங்கப்பா.*



வள்ளுவன் சொல்லே வேதமாம் - ஞானி
வாழ்வினிலே கண்ட அனுபவமாம் - பாரில்
வெள்ளையன் பாராட்டி, வேண்டிய நூலாக்கி,
கொள்ளை கொண்ட குறளைக் கொண்டாடுவோமே.

*படம் : ஆத்ம சாந்தி (1952), பாடலாசிரியர் : டி.என். ராஜப்பா.*

வள்ளுவர் குறளே செல்வமாய்
வாழ்விலே நீ எண்ணுவாய்
கல்வியில் காணும் நல்வழியில்
கடமைகள் செய்குவாய்

*படம் : பெற்றவள் கண்ட பெருவாழ்வு (1960), பாடலாசிரியர் : கு.மா. பாலசுப்ரமணியம், பாடியவர் - கே. புருஷோத்தமன், இசை : பிரதர் லெட்சுமணன்.*

சங்குவெண் டாம ரைக்குத்
தந்தைதாய் இரவி, தண்ணீர்!
அங்கதைக் கொய்து விட்டால்
அழுகச்செய் தந்நீர் கொல்லும்;
துங்கவெண் கரையிற் போட்டால்
சூரியன் காய்ந்து கொல்வான்
தங்களின் நிலைமை கெட்டால்
இப்படித் தயங்கு வாரே.

*நூல் : விவேக சிந்தாமணி, பக்கம் : 8.*

*சங்கு போலும் வெள்ளைத் தாமரைக்குச் சூரியனும் தண்ணீரும் பிதா மாதாக்களாக விருத்தினும், அத்தாமரையைக் கொய்து விடில், அந்நீரே அதனை அழுகச் செய்து கொல்லும். கரையில் விடில் சூரியன் காய்ந்து கொல்வான். (அதுபோல) தங்கள் நிலைவிட்டுப் பெயர்ந்தவர்கள் இவ்விதம் வருந்துவார்கள்.*

*இளவரசி*

தண்ணீரில் நீந்தும் வரை எனது மித்ரன்
தண்ணீரின் மீதில்பகை எண்ணும் சத்ரு
நகையாடி நண்பகலில் திகழ்வதுண்டு
முகம்மூடி இருள்கண்டு அழுவதுண்டு
நான் யாரோ - அவன் யாரோ - கவிஞரையா?

*இளவரசன்*

சிங்காரி உன்வதன வடிவு கொண்டு
சேற்றிலே மலர்கின்ற பூவும் ஒன்று!
நீர் நிலையில் ஆதவனே அதற்கு மித்ரன்.
நீரோடை காய்ந்துவிடின் எரிக்கும் சத்ரு!
தாமரைப் பூவையும் கண்டதுண்டோ?

*படம் : ராணி சென்னம்மா, பாடலாசிரியர் : கு.மா. பாலசுப்ரமணியம், பாடியவர்கள் : S. ஜானகி, P.B. ஸ்ரீநிவாஸ், G. ராகவலு, C.S. ருத்ரப்பா, இசையமைப்பாளர் : T.G. லிங்கப்பா.*



## கு. சா. கிருஷ்ணமூர்த்தி

காதல் கனிரசமே - எந்தன்
கண்மணியே பூங்குயிலே
சாதலும் கற்கண்டடி - சம
தர்மயுத்த வீரன் என்றே (காதல்)

*நூல் : ஜீவாவின் பாடல் (1934), பக்கம் : நூலாசிரியர் : ப. ஜீவானந்தம்.*

காதல் கனிரசமே - சந்ததம்
கலா வதி மதி சேர் சரச
காதல் கனிரசமே

*படம் : மங்கையர்க்கரசி (1949), பாடலாசிரியர் : கு.சா. கிருஷ்ணமூர்த்தி, பாடியவர் : பி.யு. சின்னப்பா, இசை : குன்னக்குடி வெங்கட்ராமய்யர்.*



தென்றலும் வீசுதே - தேகமும் கூசுதே
செய்வதோ தெரியேன் - ஊரும் ஏசுதே.

*படம் : அசட்டு மாப்பிள்ளை (1938), பாடல் : எஸ்.ஜி. கிருஷ்ணமூர்த்தி பிள்ளை (திருச்சி), பாடியவர் : எம். தனலட்சுமி இசை: எஸ்.ஜி. கிருஷ்ணமூர்த்தி பிள்ளை.*

தென்றல் வீசுது தேகம் கூசுது
கொல்லாமல் கொல்லுது மன்மதன் கணை

*படம் : அருமை மகள் அபிராமி (1959), பாடல் : கு.சா. கிருஷ்ண மூர்த்தி, பாடியவர் : ஜமுனா ராணி, இசை : வி. தட்சணாமூர்த்தி.*



இதமான சுத்தம் இல்லாத மாந்தர்கள்
நதிமூழ்கில் என்ன பலன்? - ஏ மனமே!
எட்டாத கனியொன்றை ஏறிப் பறிப்பதற்குக்
கொட்டாவி கொள்ளுகின்றாய் - ஏ மனமே!
எரியாத நெருப்புக்கு இடையி லமர்ந்திருந்தால்
பெரியோர்கள் என்பார்களோ? ஏ, மனமே!

*பாடலாசிரியர் : கே.வி. சந்தானகிருஷ்ண நாயுடு, படம் : புரந்தர தாஸ் (1937)*



மூக்கை மூடிக்கொண்டு நீரில் மூழ்கினால்
மோட்சமுந்தான் வந்திடுமா?
ஆத்ம சக்தியே போனபின்னால் - இந்த
ஆச்சாரம் உனக்கு வீண்தானடா?

*படம் : சதி அனுசூயா, பாடலாசிரியர் : கு.சா. கிருஷ்ணமூர்த்தி.*



முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும்
முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு
பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற்பொன்னி
னம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி
வாரில்லையே!

*நூல் : பட்டினத்தார் பாடல்கள், பகுதி : திருத்தில்லை, பக்கம் : 97.*



அகம்பாவம் கொண்டே அகிலத்தை வென்றே
அரசாள நினைத்தோரெல்லாம் - முன்னே
அரசாள நினைத்தோரெல்லாம்
முடிவாக ஓர்நாள் தடுமாறி வீழ்ந்தே
பிடி சாம்பல் ஆனாரடா - ஒரு
பிடி சாம்பல் ஆனாரடா
அறிவாயடா - உண்மை - தெரிவாயடா அகங்காரம்
கூடாதடா (அகம்பாவம்)

*படம் : சதி அனுசூயா, பாடல் : கு.சா. கிருஷ்ணமூர்த்தி, பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசை : டி.எம். இப்ராஹீம்.*



வாழப்பிறந்த மக்கள் கூட்டம்
வறுமைத் தீயில் வாடுது - உடல்
வளையாத சுக போகியை
வாழ்த்தியே துதி பாடுது - இந்தப்
பாழான நிலையைப் பார்க்கப்
பார்க்க மனசு கொதிக்குது - இது
ஊழ்வினை யென்று சொல்லி
ஊரை ஏய்க்கப் பார்க்குது.



உழைத்திடும் தொழிலாளிக் குணவில்லையே
உழவனுக்கோ சொந்த நிலமில்லையே - இன்னும்
அழுது புலம்பும் மனிதவர்க்கம் இங்கே
ஆனந்தம் காணும் நந்நாளும் என்றோ?

*படம் : அவன் அமரன் (1958), பாடலாசிரியர் : கு.சா. கிருஷ்ணமூர்த்தி, பாடியவர் : கே.ஆர். ராமசாமி, இசையமைப்பாளர் :டி.எம். இப்ராஹீம்.*



கையால் ஆகாத ஆசாமிபோல - வாழ்வு
பொய்யானது மிகப் பொல்லாதது - எனும்
வேதாந்தம் பேசாதே வீணிலே
உலகில் மெய்யான இன்பங்கள் கோடி
உண்டு மேலான நல்வாழ்வு தேடி
முயற்சி செய்யாமல் ஏங்கி...
சோம்பேறியாகி...
திரிவோர்க்குச் சுகமேது வாழ்விலே...

*படம் : வாழ்விலே ஒரு நாள் (1956), பாடல் : கு.சா. கிருஷ்ணமூர்த்தி.*

வீர கங்கணம் பூணுகின்றோம்
வீர ரத்தம் தாரை வார்ப்போம்
பிரதாப சோழன் - பாண்டியன் சந்ததி
எட்டுத் திக்கும் ஜெயம் கொள்ளும் சேரர்கள்
வீர பாண்டிய கட்டபொம்மன் ஆகியோர்
அவதரித்த நம் நாடு வாழவே
வீர ரத்தம் தாரை வார்ப்போம்!

*படம் : வெற்றி வீரன், பாடலாசிரியர் : கு.சா. கிருஷ்ணமூர்த்தி.*



## கே.பி. காமாட்சி

மாந்தி ரீக மெழுதினதேன் - பல
மந்திர வித்தை யெழுதினதேன்
தேர்ந்த வேதத்தில் வந்த வுனக்கிந்தத்
தித்திரிப் பேதுக்கு ஞானப்பெண்ணே.

அஞ்சன வாதிக்குப் பாதாளத்தின்
அடக்க முங்கூட வெளியானால்
மிஞ்சப் பொருளை யெடுத்துலகத்தவன்
மேன்மைப் படாததேன் ஞானப்பெண்ணே?

புதைய லைக்கண் டெடுப்ப தென்றாலந்தப்
பொல்லாத அஞ்சன வாதியவன்
அதையு னக்குவந் தோதுவ னோவீண்
கதையை நம்பினாய் ஞானப்பெண்ணே!

பில்லி சூனியத் தாலே யொருவனைப்
பேசாமற் கொல்ல விடமானால்

வல்ல பராபரன் பூமியி லில்லையோ
மதிய தெங்கடி ஞானப்பெண்ணே.

பில்லிவைத்துக் கொல்லக் கூடுமென்றால் போரில்
பீரங்கி குண்டுகள் கத்திகளேன்?
வல்லமை யாகிய சேவக ரேனிந்த
மண்ணாளு வோருக்கு ஞானப்பேண்ணே?

*நூல் : சாஸ்திரிக்கும்மி (1919), நூலாசிரியர் : வேதநாயக சாத்திரியார்,*

மந்திரத்தின் பேரைச் சொல்லி
மாயக்காரர் தான் பிழைக்க
தந்திரமாய் செய்த ஏட்டை – கிளியே
தாட்சன்யம் பார்க்காமலே - கிளியே

புதையல் எடுப்பேனென்று
பொய்சொல்லி ஆடு கோழி
வதைசெய்வோர்... செய்த ஏட்டை கிளியே

பில்லி சூனியம் என்றும்... பேய்
குட்டிச் சாத்தானென்றும்
சொல்லி வரைந்த ஏட்டைத்
தொலைப்பது நல்லதடி.

*படம் : இன்பவல்லி (1949), பாடலாசிரியர் : கே.பி. காமாட்சி சுந்தரம், பாடியவர்கள் : என்.எஸ். கிருஷ்ணன், மதுரம், இசை : ஜி. ராமநாதன்.*



போனால் வருமோ வாலிபம் இப்போதே சுகிக்கிறது லாபம்
புத்தி விசாரிக்கும் புண்ணியமும் ஜொலிக்கும்
சித்திகள் பலிக்கும் - தேஜஸ்பிரபை பாலிக்கும்.

*நூல் : சங்கீதத் திரட்டு (1919), பக்கம் : 71 (இரண்டாம் பாகம்), வெளியிட்டோர் : யாழ்ப்பாணம் கா. கந்தையா பிள்ளை (ஆறுமுக நாவலரவர்களின் மாணாக்கரின் மாணாக்கர்), பாடியவர் : வனஜாட்சி.*



வான வில்லைப் போல வரும் வாலிபந்தானே
எழில் போனபின்னே திரும்பி வராதே.

*படம் : சிங்காரி (1951), பாடலாசிரியர் : கே.பி. காமாக்ஷிசுந்தரன், இசைய : எஸ்.வி. வெங்கட்ராமன்.*



காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தம்மை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே. —சம்பந்தர் தேவாரம்

காதலாகிக் கசிந்து கண்ணீரும் மல்கியே
கற்பூரம் மென்மலர் தன்னையும் சாற்றியே
பாடிப்பாடி தினம் தேடினாலும் அவன்
பாதம் காண முடியாது.

*படம் : கண்கள் (1953), பாடலாசிரியர் : கே.பி. காமாக்ஷி, பாடியவர் : பி.ஜி. கிருஷ்ணவேணி, இசை : எஸ்.வி. வெங்கட்ராமன், ஜி. ராமனாதன்.*



## மருதகாசி

வெண்ணிலாவும் வானும் போலே
வீரனும்கூர் வாளும் போலே

கண்ணும் ஒளியும் போலே! எனது
கன்னல் தமிழும் நானும் அல்லவோ!

*நூல் : இசையமுது, பகுதி : தமிழ்ப்பகுதி, பக்கம் : 46, நூலாசிரியர் : பாரதிதாசன்*

நீலவானும் நிலவும் போல
ஞாலமீதில் இணைந்து வாழ்வோம்

*படம் : பொன்முடி (1950), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்கள்: ஜி. ராமநாதன், டி.வி. ரத்னம், இசையமைப்பாளர் : ஜி. ராமநாதன்.*



பன்னீர் வெந்நீர் ஆச்சுதடி
என்நிலைமை மாறிட லானேனே.

*படம் : சீமந்தனி(1936), பாடலாசிரியர் : திருச்சி டி.வி. நடராஜாசாரியார், பாடியவர் : டி.பி. ராஜலட்சுமி.*



கண்ணாளா உன்னைக் காணாததாலே
கரும்பெல்லாம் வேம்பானதே
என்மீது தூவும் பன்னிரும் கூட

வெந்நீரைப் போல் தோணுதே.

*படம் : மனைவியே மனிதனின் மாணிக்கம், பாடல்: மருதகாசி, பாடியவர்கள் : ஜிக்கி மற்றும் குழுவினர், இசை : எஸ். ஹனுமந்தராவ்.*



ஆடுவதும் பாடுவதும்
ஆளடிமை செய்கிறதும்
ஓடுவதும் தேடுவதும் - தங்கமே
ஒருஜாண் வயிற்றுக்கடி - ஞானத்தங்கமே!

*நூல் : மெய்ஞ்ஞானத் தங்கம் (1934), நூலாசிரியர் : தட்சணாமூர்த்தி சுவாமிகள், பக்கம் : 4, பாடல் : 19.*

நாம் ஆடுவதும் பாடுவதும் காசுக்கு
பலர் ஆளைக் குல்லா போடுவதும் காசுக்கு
சிலர் கூடுவதும் குழைவதும் காசுக்கு
காசுக்கு... காசுக்கு...

*படம் : அலிபாபாவும் 40 திருடர்களும், பாடலாசிரியர் : மருதகாசி.*
*காபி : செஞ்சுருட்டி*

நல்வாக்கு நீகொடடி! நான் சிலம்பு விற்று வரேன்
பத்தினிப் பெண்ணே!
செல்வாக்குட னிருந்தோம்
தேவடியாள் கடனால் நொந்தோம்
பத்தினிப் பெண்ணே

*நூல் : கொலம்பியா அண்டு ஓடியான் கிராம போன் பாடல் (1934), பாடியவர் : எஸ்.வி. சுப்பையா பாகவதர்.*

நல்வாக்கு நீ கொடடி – என் தங்கமே
நல்வாக்கு நீ கொடடி
செல்வாக்கு உண்டாக எல்லோரும் கொண்டாட.

*படம் : சதாரம், பாடலாசிரியர் : மருதகாசி, பாடியவர் : கே.ஆர். ராமசாமி, இசை : ஜி. ராமநாதன்.*



*இராகம் : செஞ்சுருட்டி* *தாளம் : ஆதி*

ஏறாது மலைமேலே
எருது இரண்டும் தத்தளிக்க
பாறாமல் கைகொடுத்தான்
பழனிமலை ஆண்டவனே

*நூல் : கிராமபோன் சங்கீத கீர்த்தனாம்ருதம் (1930), பாடல் : 12, பக்கம் : 10*

ஏறாத மலைதனிலே... வெகு
ஜோரான கௌதாரிரெண்டு
தாராளமா இங்கே வந்து
ததிங்கிணதோம் தாளம் போடுதையா.

*படம் : தூக்கு தூக்கி, பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : ஜி. ராமனாதன்.*



நம்பாதே
உன்னையே நம்பாதே கண்ணையும் நம்பாதே
ஒருநாளும் மோசம் போகாதே (நம்பாதே)

*படம் : நல்லவன் (1955), பாடல் : தஞ்சை ராமையாதாஸ், இசை : எம்.எஸ். ஞானமணி.*

கண்ணை நம்பாதே உன்னை ஏமாற்றும்
உன்னை ஏமாற்றும் நீ காணும் தோற்றம்
உண்மையில்லாதது
அறிவை நீ நம்பு, உள்ளம் தெளிவாகும்
அடையாளம் காட்டும் பொய்யே சொல்லாதது.

*படம் : நினைத்ததை முடிப்பவன் (1975), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



கண்ணை மட்டும் நம்பாதே!
கருத்தை மட்டும் இழக்காதே!

*படம் : மனமுள்ள மறுதாரம் (1958), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : ஜிக்கி, இசையமைப்பாளர் : கே.வி. மகாதேவன்.*



வரப்புயர நீருயரும்
நீருயர நெல்லுயரும்
நெல்லுயரக் குடியுயரும்
குடியுயரக் கோலுயரும்
கோலுயரக் கோனுயரும்

— *ஔவையார்*

நீர் இருந்தா ஏர் இருக்கும்
ஏர் இருந்தா ஊர் இருக்கும்
ஊர் இருந்தா உலகத்திலே

எல்லாம் இருக்கும்.
உண்மையோடு நன்மையெல்லாம்
நல்லா செழிக்கும்

*படம் : பாலாபிஷேகம், பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : வாணி ஜெயராம், இசையமைப்பாளர் : சங்கர் – கணேஷ்.*



ஆல மரத்துக்கிளி
அக்கரையில் மேயுங்கிளி
இக்கரை வந்தகிளி - கந்தையா
இங்கிதம் சொல்லுதையா!

*நூல் : தமிழக நாட்டுப் பாடல்கள்,தொகுப்பாசிரியர் : கவிஞர் மா. வரதராசன்,பகுதி : வேதாந்தப் பாடல்கள், பக்கம் : 324.*

ஆலமரத்துக்கிளி - ஆளப்
பார்த்து பேசும் கிளி
வால வயசுக்கிளி - மனம்
வெளுத்த பச்சைக்கிளி.

*படம் : பாலாபிஷேகம் (1977), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : வாணி ஜெயராம், இசை : சங்கர் – கணேஷ்.*



மலைக்கு மலைநடுவே மலையாள தேசமெங்கும்
அதட்டிச் சிறையெடுக்கும் ஆறுமுகத் தையாவே.

*நூல் : சுவாமிமலை • ஆண்டிப்பண்டாரம்(1926), நூலாசிரியர் : கும்பகோணம் ஆர். திருவேங்கடம் பிள்ளை*

மலைக்கு மலை நடுவே முருகையா
மலையாள தேசமப்பா முருகையா
மலையாள தேசம்விட்டு முருகையா
நீ மயிலேறி வரவேணும் முருகையா.

*படம் : பாலாபிஷேகம் (1977),பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்கள் : கிருஷ்ணமூர்த்தி, டி.கே. கலா, கிருஷ்ணன். இசை : சங்கர் – கணேஷ்*



ஆண் : உன் எண்ணத்தை எந்தன்
கன்னத்தில் வந்து எழுதிவிடு.

பெண் : என் பெண்மையைக் காக்கும்

தன்மைக்குக் கொஞ்சம் தவணைகொடு.

*படம் : பூமாலை (1965), பாடலாசிரியர் : கவி. ராஜகோபால், பாடியவர்கள் : டி.எம். சௌந்தராஜன், பி. சுசீலா, இசை : ஆர். சுதர்சனம்.*



ஈரெட்டு வயது! நீ தொட்ட மனது!
எண்ணத்தை நீ எனது கன்னத்தில் எழுது.

*படம் : நேர்வழி (1968), பாடலாசிரியர் : மருதகாசி, பாடியவர் : எல்.ஆர்.ஈஸ்வரி, இசை : பி.எஸ். திவாகர்.*



தூங்குதற் கேஇரவாம் - மற்ற
தொழில்களுக் கேபகலாம்

ஈங்கிது நீயுணரா தேனோ
இன்னும் துயிலுகின்றாய்?

*நூல் : தேனமுதம் (1968), பக்கம் : 53, நூலாசிரியர் - புலவர் சி. மாணிக்கம்.*

உழைப்புக்குப் பகல் ஓய்வுக்கு இரவு
உழைப்புக்குப் பகலும் ஓய்வுக்கு இரவும்
உலகில் பிறந்தது நமக்காக!
வளர்ச்சிக்கு வெயிலும்
தளர்ச்சிக்கு நிழலும் வாழ்க்கையில் கிடைத்தது சமமாக.

*படம் : நேர்வழி (1968)*



கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினால்
கைகொட்டிச் சிரியாரோ?

*நூல் : பாரதியார் கவிதைகள் (1922), பகுதி : தேசிய கீதங்கள், 3 சுதந்திரம், 26 சுதந்திரப் பெருமை, பக்கம் : 56.*

கண்கொடுத்துச் சித்திரத்தை வாங்குவதும் உண்டோ - நீ
கடமைக்குப் பெண்மையைப் பலியிடுதல் நன்றோ?

*படம் : வீராங்கனை (1964), பாடலாசிரியர் : மருதகாசி, பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசை : வேதா.*



*இராகம் : செஞ்சுருட்டி* *தாளம்: ஆதி*

ராதே உனக்குக் கோபம் ஆகாதடி

மாதரசே பிழையேது செய்தேன் சுகுண (ராதே)
எனைக் கணம் பிரிய மனம் வந்ததோ
எங்கும் சென்றாலும் நான் உன்னை விடுவேனோ ஓடாதே

*படம் : சிந்தாமணி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர்: எம்.கே. தியாகராஜ பாகவதர்.*



ராதே உனக்குக் கோபம் ஆகாதடி
காதலியே தவறேது செய்தேன் - பிரிய (ராதே)
உனை மணம் புரிபவன் நானல்லவோ-நீ
ஒன்றும் புரியாத சின்னஞ்சிறுமியோ, ஓடாதே.. (ராதே)

*படம் : குலமகள் ராதை (1963), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : கே.வி. மகாதேவன்.*

மங்கல மங்கையராய், மன்னவர் கன்னியராய்,
மைந்தர் வயிற்றினராய், வாழ்வின ராய்,அதிலே
திங்கள் நிறைந்துவரும் சேயிழை யார்நடைபோல்
தென்றல் அசைந்துவரும் செந்தமிழ் நாடுடையாய்!
கங்கையின் நன்கொழுநா! காவிரி யின்கணவா!
கன்னிதான் நாடுடையாய்! சென்னியின் நாயகமே!
எங்கள் இளங்கொடிதான் உங்கள் இளம்பிறையால்
இத்தனை கோடிஇரா இப்படி வாடுவதோ.

*இதழ் : பஞ்சாமிர்தம், (1925) ஆடி, பழைய தனிப்பாடல் (சேது சமஸ்தான வித்துவான் பண்டிதர் ரா. இராகவையங்கார் கூறக் கேட்டது)*

சின்னஞ்சிறு பெண்ணைப்போல
தென்னல் நடை போடுது
மின்னல் வெட்டுங் கண்ணைக் கண்டு
மீனும் துள்ளி ஓடுது.

*படம் : வழி பிறந்தது (1964), பாடலாசிரியர் : மருதகாசி, பாடியவர் : பி. சுசீலா, இசையமைப்பாளர் : டி. சலபதிராவ்.*



உறவுமில்லை பகையுமில்லை ஒன்றுமே இல்லை
உள்ளதெல்லாம் நீயேயல்லால் வேறே கதியில்லை
இனி யாரும் துணை இல்லை.

*படம் : தேவதாஸ் (1953), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம், பாடியவர்: ஜிக்கி, இசை : சி.ஆர். சுப்புராமன்.*

உறவுமில்லை பகையுமில்லை
உயர்வும் தாழ்வும் உனக்கில்லை
இரவுமில்லை பகலுமில்லை
எதுவும் உலகில் எனக்கில்லை.

*படம் - கொடுத்து வைத்தவள் (1963), பாடலாசிரியர் - அ. மருதகாசி, பாடியவர் : பி. சுசீலா, இசை : கே.வி. மகாதேவன்*



என் கதைதான் உன் கதையும்
உன் கதைதான் என் கதையும்
பாதையில்தான் சிறு மாற்றம்
பயணத்திலே ஏமாற்றம்

*படம் : பந்தபாசம் (1962), பாடலாசிரியர் - கவி. ராஜகோபால்.*

உன் கதையும் என் கதையும்
ஒரே கதை யல்லவா?
உன் கதையை உன்னிடமே
நான் எடுத்துச் சொல்லவா?

*படம் - நீங்காத நினைவு (1963), பாடலாசிரியர் - அ. மருதகாசி.*



துணிவெளுக்க மண்ணுண்டு - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்துமாரி!
தோல்வெளுக்கச் சாம்பருண்டு, - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்துமாரி!
மணிவெளுக்கச் சாணையுண்டு - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்துமாரி,
மனம் வெளுக்க வழியில்லை - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்துமாரி.

*நூல் : பாரதியார் கவிதைகள், பகுதி : தோத்திரப் பாடல்கள், பாடல் : 40 (முத்துமாரி), பக்கம் : 123.*

துப்புரவாக அழுக்குப்போக துவச்சி விரிச்சிப்போடு - அதைத்
தும்பப் பூவைப்போல் வெளுப்பது புள்ளே உனதுபாடு
(துப்புரவாக)

துணியிலுள்ள அழுக்கைப் போக்க உழ மண்ணிருக்குது
நம்ம மனசிலுள்ள அழுக்கை நீக்க என்ன இருக்குது?

*படம் : லவகுசா (1963), பாடலாசிரியர் : அ.மருதகாசி, பாடியவர்கள் : திருச்சி லோகநாதன், எல்.ஆர். ஈஸ்வரி மற்றும் பார்ட்டி. இசை : கே.வி. மகாதேவன்.*

மாசற்ற நின்முகத்தை மதியொத்த தென்றிடிலோ
ஆசற்ற குறைதலில்லா வம்முகத்துக் கழகாமோ?
தீதற்ற நின்முகத்தைத் தாமரையென் றோதிடிலோ
போதென்று குவியாவுன் பொன்முகத்துக் கழகாமோ?
கார்போலு நின்கூந்தல் கருமேக மென்றிடிலோ
நீர்தோயா மணங்கமழு நின்கூந்தற் கழகாமோ?
வரிநிறைந்த நின்கண்கள் வனப்புடைய கயலென்றால்
பரிவுற் றவற்குப் பழுதொன்றும் வாராதோ?
செவ்வாயைக் குமதமெனச் செப்பிடுவ துண்டானால்
அவ்வாயைப் போலதற்க தரமின்மை யறியாரோ?
கண்ணாடி யெனக்கவிகள் கன்னத்தைச் செப்பிடிலோ
கண்ணாடி பார்த்தார்க்குக் களிப்பூட்டின தறியாரோ?

*நூல் : சுரதற்கலிவெண்பா (1921), நூலாசிரியர் : ம.தி. திருமறைக்குன்றம், பக்கம் : 8, அடிகள் : 38, 39, 40, 41, 42, 43.*

வாரி முடித்த குழல் எனக்கேதான் சொந்தமென்று
வானத்துக் கார் முகிலும் சொல்லுதே
மலர்ந்து விளங்கும் முகம் எங்களின் இனமென்று
வண்ண மலரெல்லாமே துள்ளுதே.
தந்தப்பல் எழில்கண்டு தன் இனந்தான் என்று
பொங்கும் கடலின் முத்து பண்பாடுதே
குங்கும இதழ்கண்டு கோவைக் கனி எல்லாம்
தங்களின் இனமென்று ஆடுதே.

*படம் : சபாஷ் மாப்பிளே (1961), பாடலாசிரியர் : மருதகாசி, பாடியவர்கள் : சீர்காழி கோவிந்தராஜன், பி. சுசீலா, இசை : கே.வி. மகாதேவன்.*

*இராகம் : எங்குல காம்போதி* *தாளம் : ரூபக சாபு*

வருஷம் பிறக்கும் வகையேது சொல்லுவாய் தோழா - பூமி
வட்டமாய்ச் சூர்யனைச் சுற்றுங் காலமது கேளாய்

*நூல் : இசைத்தமிழ் மஞ்சரி (1934), பக்கம் : 23. நூலாசிரியர் : 'போயட் லாரெட்' பண்டித ஆர். உலகநாதபிள்ளை (மாட்சிமைமிக்க புதுக்கோட்டை மகாராஜா அவர்களின் தமிழாசிரியர்), பாடல் : 19.*

பெண் :

தன்னைத்தானே சுற்றிக்கொண்டு இந்த உலகமே
செங்கதிரோனைச் சுற்றும் சேதி பழைய பாடமே.

ஆண் :என்னை மட்டும் சுற்றிக் கொண்டு இருந்த உள்ளமே - இன்று
உன்னைச் சுற்றிக் கேட்கும் பாடம் புதிய பாடமே.

*படம் : தாயில்லாப் பிள்ளை (1961), பாடல் : மருதகாசி, பாடியவர்கள்: பி.பி.சீனிவாசன்,கே.ஜமுனாராணி, இசை: கே.வி. மகாதேவன்.*



அலைமோதுதே - அலைமோதுதே - ஏதும்
அறியாத என்மனம் அலைமோதுதே

*படம் : வனமோஹினி (1941), பாடல் : யானை வைத்தியநாத பாகவதர், பாடியவர் : கே. தவமணிதேவி, இசை : ராம் சிட்டல்கர்.*

அலைமோதுதே - என்னை அறியாமலே
நெஞ்சம் நிலைமாறியே

*படம் : இருமனம் கலந்தால் திருமணம் (1960), பாடல் : அ.மருதகாசி, பாடியவர்கள் : ஜமுனாராணி, ஏ.எல்.ராகவன். இசை : எஸ். தட்சிணாமூர்த்தி.*



கண்ட சரந் தருவேன் - அடிபெண்ணே
கல்லிழைத்தவோலை தாறேன்
தண்டை கொலுசு தாறேன் - அடிபெண்ணே
சரிகை பட்டாடை தாரேன்
பட்டாடை தாரேனடி - அடிபெண்ணே - மார்
பதக்கமும் தாரேனடி
பதக்கமுந் தாரேனடி - அடிபெண்ணே
பாவையரே கேட்டதெல்லாம்
கேட்டதெல்லாம் நான் தருவேன் - அடிபெண்ணே நீ
மாட்டேனென்று சொல்லாதடி.

*நூல் : நூதன பெரிய ஒட்டநாட்டார், நூலாசிரியர் : நாடக அலங்காரம், பக்கம் : 66.*

பட்டுச்சேலை வாங்கித் தாரேன்
ஆசைக் கண்ணம்மா
பதிலுக்கு என்ன தாரே நீயும் சொல்லம்மா!
கழுத்துக்கு ஏத்த கண்டசரம்
காலுக்கு ஏத்த பாதசரம்
காதுக்கு மாட்டிக்க ஜிமிக்கியும் தோடும்
தாரேன், நீ என்ன தாரே கண்ணம்மா, சொல்லம்மா!

*படம் : இருமனம் கலந்தால் திருமணம் (1960), பாடல் : அ. மருதகாசி, பாடியவர்கள் : எஸ்.சி. கிருஷ்ணன், ரத்னமாலா, இசை : எஸ். தட்சிணாமூர்த்தி.*

தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்
செங்கதிரோன் பரிக்காலுந் தேர்க்காலும் வழுகும்
முழங்குதிரைப் புனலருவி கறங்கெனமுத் தாடும்
முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக்கொண்டோடும்.

செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்
தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும்
செல்லினங்கள் முழவுகொட்ட மயிலினங்க ளாடுந்
திரிகூட மலையெங்கள் செல்வமலை யம்மே.

*நூல் : திருக்குற்றாலக் குறவஞ்சி, நூலாசிரியர் : மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயர், பக்கம் : 37, 38, பகுதி : குறத்தி மலைவளங் கூறல்.*

ஆயிரங்கண் போதாது வண்ணக்கிளியே - குற்றால
அழகை நாம் காண்பதற்கு வண்ணக்கிளியே.
தென்றல் இசை பாடிவரும் தேனருவி ஆடிவரும்
அன்றலர்ந்த செண்பகப்பூ வண்ணக்கிளியே
ஆனந்தக் காட்சி தரும் வண்ணக்கிளியே

எங்கும்பனி தூங்கும்மலை வண்ணக்கிளியே - நெஞ்சில்
இன்பநிலை தந்திடுதே வண்ணக்கிளியே
மந்தியெல்லாம் மாங்கனியைப்
பந்தாடிப் பல்லிளிக்கும்
சந்திரனும் சூரியனும் வண்ணக்கிளியே - குளிர்ச்சி
தந்திடுவாள் இங்கு என்றும் வண்ணக்கிளியே.

*படம் : பாவை விளக்கு (1960), பாடலாசிரியர் ; மருதகாசி. பாடியவர் : சி.எஸ். ஜெயராமன், இசை : கே.வி. மகாதேவன்.*



நிலவோடு வான்முகில் விளையாடுதே - அந்த
நிலைகண்டு எனதுள்ளம் துணைதேடுதே.

*படம் : ராஜராஜன் (1957), பாடலாசிரியர் : கு.சா. கிருஷ்ணமூர்த்தி.*

நிலவேதான் வானோடு விளையாடுதே – நம்
நிலைபோலே மெய்க்காதல் உறவாடுதே
அழியாத சந்தோஷம் உருவாகவே – நம்
அலைமோதும் உள்ளங்கள் நிலைகாணவே

*படம் : புதுமைப்பெண் (1959), பாடலாசிரியர் : அ. மருதகாசி , பாடியவர்கள் : ஏ.எம்.ராஜா, ஜிக்கி; இசை : டி.ஜி. லிங்கப்பா.*



ஆதிகடவுளுக்கே யாரிடத்திலும் பேதமில்லை
பாதியிலே சமயகூத்தர் பண்ணிவைத்தாரிந்ததொல்லை
ஜாதி ஒன்றுதான் ஆண்பெண் தன்மைரெண்டுதான்.

*நூல் : நூதன டிராமா பாட்டு (1927), நூலாசிரியர் : சூளை, மாணிக்க நாயகர், பக்கம் : 6. பாடியவர் : அயன் ஸ்ரீபார்ட் எஸ்.எஸ்.சரஸ்வதிபாய் அம்மாள்.*

ஆண்டவன் படைப்பிலே ஆதியிலே
ஜாதிமத பேதமில்லை
அவையெல்லாம் பாதியிலே
மனிதர்களால் வந்ததொல்லை.

*படம் : கலைவாணர் (1959), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்: டி.எம். சௌந்தரராஜன்.*



தை பிறந்தா வழி பொறக்கும்
தரணி எல்லாம் பூ பூக்கும்
சம்பா நெல்லுக் குத்திடுவோம்
கம்மாஞ்சோறு தின்னுடுவோம்.

*நூல் : தமிழக நாட்டுப்பாடல்கள், பக்கம் : 93.*

தை பொறந்தா வழி பொறக்கும் தங்கமே தங்கம்
தங்கச் சம்பா நெல் விளையும் தங்கமே தங்கம்

*படம் : தை பிறந்தால் வழி பிறக்கும் (1958), பாடலாசிரியர் : மருதகாசி, பாடியவர்கள் : சௌந்தரராஜன், பி. லீலா மற்றும் பார்ட்டி.*

வீட்டின் மனையாளை விட்டயலில் லாளின்பம்
வேட்டுறுகண் கொள்ளார் விவேகத்தோர் - மோட்டெழில்
தோட்டப் பலாவிட்டுத் துன்பத்திற் கொள்வரோ
காட்டீச்ச முள்ளுட் கனி.

*நூல் : விவேக மணி (1938),பாடல் :27, நூலாசிரியர் : சிறுவை அருட்கவி வேலாயுதம் பிள்ளை, பக்கம் : 6.*

இன்பக் கனியும் வீட்டினி லிருக்க
எச்சில் பழத்தெ தேடிக்கிட்டு
ஏங்கித் திரியும்சில மைனர்கள் போலே
இங்கும் அங்கும் ஓடாதீங்க.

*படம் : அன்னையின் ஆணை (1958), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்கள் : பி. லீலா, பி. சுசீலா, இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.*



சங்கு முழங்கும் தமிழ்நாடன்
தன்னை நினைந்த போதெல்லாம்

பொங்கு கடலும் உறங்காது
பொழுதோர் நாளும் விடியாது.

திங்கள் உறங்கும் புள்ளுறங்கும்
தென்றல் உறங்கும் சிலகாலம்

எங்கும் உறங்கும் இராக்காலம்
என்கண் இரண்டும் உறங்காதே.

*நூல் : விவேக சிந்தாமணி, பாடல் : 39*

தென்றல் உறங்கிய போதும்
திங்கள் உறங்கிய போதும்
கண்கள் உறங்கிடுமா? - காதல்
கண்கள் உறங்கிடுமா?

ஒன்று கலந்திடும் நெஞ்சம்
உறவை நாடி கெஞ்சும்
கண்கள் உறங்கிடுமா? - காதல்
கண்கள் உறங்கிடுமா - காதல்
கண்கள் உறங்கிடுமா?

*படம் : பெற்ற மகனை விற்ற அன்னை (1958), பாடல் : அ. மருதகாசி, பாடியவர்கள் : ஏ.எம். ராஜா, ஜிக்கி, இசை : விஸ்வநாதன், ராமமூர்த்தி*

சாந்துப் பொட்டடி நீ எனக்கு - நல்ல
சவ்வாது பொட்டடி நானுனக்கு
சாந்துப் பொட்டுக்கும் சவ்வாது பொட்டுக்கும்
சம்மதமோ முத்து வீராயி.

*நூல் : முத்துவீராயி பாட்டு (பழைய நூல் 1934), பக்கம் : 6.*

ஆண் : சந்தனப் பொட்டு எனக்கு நீ
ஜவ்வாது பொட்டு உனக்கு நான்

பெண் ; சந்தனப் பொட்டுக்கும் ஜவ்வாது பொட்டுக்கும்
பஞ்சமில்லே இனி நமக்குத்தான்.

*படம் : மாய மனிதன் (1958), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்கள் : பொன்னுசாமி, டி.வி. ரத்தினம், இசையமைப்பாளர் : ஜி. கோவிந்தராஜலு நாயுடு.*



நற்பொதி கருவாம் போது
நாடகக் கணிகை மாரின்
முற்பட மறைந்து தோன்றி
முகமெடுத் தாடிப் பின்னர்

விற்பொலி புருவம் கோட்டி
விளைந்துநெட் டிலைமுக் காட்டின்
கற்புடை மடவார் நாணம்
காட்டுவ கதிர்ச்செஞ் சாலி.

*நூல் : திருக்குற்றாலத்தல புராணம் (1874), பாடல் : 12, நூலாசிரியர் : மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயர்.*

நெத்தி வேர்வை சிந்தினோமே முத்து முத்தாக - அது
நெல்மணியாய் விளைஞ்சிருக்கு கொத்துக் கொத்தாக.
வளர்ந்துவிட்ட பருவப் பெண்போல் உனக்கு வெட்கமா? - தலை
வளைந்து சும்மா பாக்கிறீயே தரையின் பக்கமா?

*படம் : பிள்ளைக் கனியமுது (1958), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்கள் : டி.எம். சொந்தரராஜன், இசை : கே.வி. மகாதேவன்.*



பஞ்சணை மீது பெண்டு;
பானைபோ ஜனத்தி லன்னை;
அஞ்சிலாச் சுகத்தில் தோழி;
அரும்பிணி யுற்றால் தெய்வம்;
கொஞ்சலில் கிள்ளை; நீதி
கூறலில் அமைச்சன் போலும்
வஞ்சியை மனைவி யென்றே
வாழ்த்துவர் மேலோர் தாமே.

*நூல் : பிரதாப சந்திர விலாசம் (1877), பக்கம் : 158, நூலாசிரியர் : ப.வ.இராமசாமிராஜு,பி.ஏ., பாரிஸ்டர், அட்-லா,எப்.ஆர்.எச்.எஸ். (லண்டன்) எம்.ஆர்.ஏ.எஸ். (லண்டன் 1915)*

துணையாக இருப்பதிலே தோழனைப்போல -யுக்தி
சொல்வதிலே மதியுள்ள மந்திரிபோலே
உணவூட்டி வளர்ப்பதிலே அன்னையைப்போலே - பதிக்கு
உண்மையாகத் தொண்டுசெய்து பூமியின் மேலே
வாழணும் - பெண்கள் வாழணும்.

*படம் : பெரிய கோயில் (1958), பாடலாசிரியர் : மருதகாசி, பாடியவர்: டி.வி. ரத்தினம், இசையமைப்பாளர் : கே.வி. மகாதேவன்.*



சைனா ஜப்பான் ரெங்கோன் பர்மா
சல்லா சில்க்கு காரியே
மைனா பிடிக்காதடி மானாட்டம் போடாதடி
மதிக்கும் ஜகோ செண்டு சோப்பு
மாறிப் போச்சு கிராப்பு சீப்பு

*நூல் : கொலம்பியா அண்டு ஒடியான் கிராமபோன் பாடல் (1934), (ஆறாம் பாகம்), பாடல் : 5.*

சைனா ஜப்பான் ரெங்கோன் பர்மா
சல்லா சிலுக்குக் காரிநான்
மைனா பிடிக்கிறியே
மைவேலை காட்டிறியே
மயக்கவந்த மன்மதா – நீ
வந்த வழியைத் திரும்பிப் பாரேன்

*படம் : குடும்ப கௌரவம் (1958), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : ஏ.பி. கோமளா, ரத்தினமாலா, இசை : விசுவநாதன், ராமமூர்த்தி.*



மேகமண்டலம் தாண்டிக் கண்ணுக்கும் தெரியாமல்
மின்மினி ஒளியுடன் – பம்பரம்போற் சுழன்று
போகுது பாரென் புறா – பறந்து
பொன்னிறச் சிறகடித்து – உயரப்
போகுது பாரென் புறா.

*படம் : நவீன சாரங்கதரா (1935) பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*

மேகத்திரை பிளந்து மின்னலைப்போல் நுழைந்து
வில்லினின்றே எழுந்த அம்புபோலே விரைந்து
போகுதுபார் என்புறா – வானில்
போகுதுபார் என் புறா.

*படம் : சாரங்கதரா (1958), பாடலாசிரியர் : அ. மருதகாசி.*



பல்லவி

சிற்பி செதுக்காத பொற்சிலையே – எந்தன்
சித்தத்தை நீ அறியாயோ (சிற்பி)

அநுபல்லவி

அற்ப செயலுக்கு இப்படியும் – மன
அவஸ்தைப் பட விடுவாயோ (சிற்பி)

*படம் : எதிர்பாராதது (1954), பாடியவர் : ஏ.எம். ராஜா, பாடலாசிரியர்: கே.பி. காமாட்சிசுந்தரன்.*



சிற்பிகள் செய்யாத சிலையொன்று கண்டேன்
சிங்கார வாய் திறந்து பேசவுங் கண்டேன்.

*படம் : சாரங்கதரா (1958), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : பி. பானுமதி, இசையமைப்பாளர் : ஜி. ராமனாதன்.*



*இராகம் : தன்யாசி* *தாளம் : ரூபகம்*

குழலையே போன்ற மழலையே பேசி
குளிரவே செய்யும் குழந்தைகள் வாசி
பாச்சி சோச்சியென்று கேட்டதும் இல்லாது
பரதவிக்கும் குறை ஹாஹா பொல்லாது.

*நூல்: சீதா கல்யாண நாடகம் (1915), பாடல் : 19, பக்கம் : 26. நூலாசிரியர் : டி. பக்தவத்ஸலம், பி.ஏ., எம்.பி.பி.ஐ.,*

மாடிமனை கோடிப்பணம் வாகனம் வீண்ஜம்பம்
வாழ்வினிலே ஒருவனுக்கு வருவதல்ல இன்பம்!
மழலைமொழி வாயமுதம் வழங்கும்பிள்ளைச் செல்வம் - உன்
மார்மீது உதைப்பதிலே கிடைப்பதுதான் இன்பம்!

*படம் : மனமுள்ள மறுதாரம் (1958), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசை : கே.வி. மகாதேவன்.*



*ராகம் : நாதநாமக்கிரியை* *தாளம் : ரூபகம்*

உன்னையே நீயெண்ணிப்பாரு - இந்த
உலகத்தில் எதுசொந்தம் யோசித்துக்கூறு
பின்னை வளர்த்திடும் பாசம் இடை
பிங்களை சுவாஸம் தடைப்பட்டால் மோசம்.

*படம் : கிருஷ்ணபக்தி அல்லது பக்த ஜயதேவர் (1937).*



உன்னையே நீ எண்ணிப்பார் - உன்னை
உணராமல் வாழ்வதால் பலன் என்ன கூறு
மன்னாதி மன்னர் எல்லோரும் - இந்த
மண்ணோட மண்ணாகிப்போன தல்லாது - இங்கு
எந்நாளும் வாழ்ந்ததும் இல்லை - இதை
எண்ணாமல் அலைவதால் விளைவது தொல்லை.

*படம் : பக்த மார்க்கண்டேயா (1957), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : சிவராமன், இசை : எம்.எஸ்.விஸ்வநாதன், டி.ஆர். ராமமூர்த்தி.*

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் - செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

*நூல்: நீதிநெறி விளக்கம் (1927), பாடல் : 53, பக்கம் : 15, நூலாசிரியர் : குமரகுருபர சுவாமிகள்.*

உன் வேலையிலே நீ கண்ணாயிரு
உன்னாலே இவ்வுலகம் முன்னேறுது
உன் எல்லைதனை நீ காணும்வரை
எங்கும் நில்லாமல் செல்வாய் நீயே.

*படம் - மல்லிகா (1957), பாடலாசிரியர் - அ. மருதகாசி, பாடியவர்கள் - ஜிக்கி மற்றும் நாகேஸ்வர ராவ், இசை - டி.ஆர். பாப்பா.*



நெற்றி வேர்வை நிலத்தினில் இற்றுவிழ வேலைபாரு – சற்று
நேரங்கூட வீணாய்ச் சுற்றாதே பணத்தைச் சேரு.

*நூல் : பெற்றான் சாம்பனார் சரித்திரக் கீர்த்தனம் (1915), பக்கம் : 124, நூலாசிரியர் : ரஞ்சித மோகனகவி மாயவரம் தியாகராஜ தேசிகர்.*

பொழைக்கும் வழியைப் பாரு!
ஒழைச்சாதான் சோறு!
பொழுதை வீணாக்கி சோம்பேறிப் பேரு
எடுத்துத் திரியாதே! காசு பணம் சேரு.

*படம் : ஆசை அண்ணா அருமைத் தம்பி (1955), பாடலாசிரியர் : அ.மருதகாசி, பாடியவர்கள் : கே.வி. மகாதேவன், தோடி கண்ணன், எஸ்.ஸி. கிருஷ்ணன், குமாரி சுசிலா, குமாரி உடுதா, குமாரி பத்மா. இசை : கே.வி. மகாதேவன்.*



இராகம் : செஞ்சுருட்டி — தாளம் : ரூபகம்

கொண்டல் நிகர்... கூந்தலின் கட்டு
குலைந்து மலர்... உலர்ந்த தேனோ
கூறவேணும் நேரில் வாய்விட்டு - அருள்
கொஞ்சுமஞ்சுக வஞ்சியேவிழி
பஞ்சடைந்து சிவந்து புன்னகைக்
கோவையிதழ் கோரமேற்பட்டு
வெண்மையதான உண்மையைக் காண
கோரினேன்சந் தேகமேலிட்டு (கொண்)

வண்டுமொய்க்கும் கொண்டையைத்தானே
வரும்வழியில் பெருஞ்செடியில்
வாழ்கொடிகள் பற்றி என்மானே - பலம்
வாய்ந்திழுத்ததி னாலேமாமலர்க்
கூந்தலிவ்வித மாய்க்குலைந்தது
வாயிதழ்ச்சங் கானதுந் தேனே
வாரிப்புசித்த காரியமன்றி
மர்மமில்லை உண்மை சொன்னேனே. (வண்)

*நூல் : வள்ளியம்மை சரிதம், பக்கம் : 38, நூலாசிரியர் : மதுர பாஸ்கர தாஸ்.*

சீவி சினுக்கெடுத்து
சிங்காரிச்சுப் பூவு வச்சு
கோயிலுக்குத் தானே போனே - ஏங்குருவிக்காரி
கூந்தல் கலைஞ்ச தேனடி?
கோயிலுக்குப் போயி நானும்
கும்பிட்டதும் எம்மேலே
சாமி வந்து ஆடினதாலே - எம்மேலே
ஏங்குருவிக்காரா
தலையும் கலைஞ்சு போச்சுடா.

*படம் : முல்லைவனம் (1955), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்கள் : ஏ.பி. கோமளா, குருவாயூர் பொன்னம்மா, இசை : கே.வி. மகாதேவன்.*



அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு (திருக்குறள் 80)

அன்பில்லாத் தேகம்
ஆவியில்லாக் கூடு

*படம் : நீதிபதி (1955), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : டி.வி. ரத்னம், இசை : விஸ்வநாதம் — ராமமூர்த்தி.*



நாடு செழித்திடவே - இனி
ஏர் பிடித்தே வாழ்வோம்
வீட்டுக்கு வீடு தோட்டங்கள் வைத்து
காய்கனி பயிரிடுவோம்

*படம் : கலாவதி (1951), பாடலாசிரியர் : எம்.எஸ். சுப்பிரமணியம்.*

சிங்காரக் காய்கறித் தோட்டம் - இதைச்
சீராகக் காத்திடில் ஜோராகக் காய்த்திடும்
மாறாத ஆனந்த மூட்டும்

*படம் : கனவு (1954), பாடலாசிரியர் : மருதகாசி, பாடியவர் : எம்.எல். வசந்தகுமாரி, இசை : ஜி. ராமநாதன், வி. தட்சிணாமூர்த்தி.*

பல்லவி

அன்பில் விளைந்த அமுதமே
அன்னமே என் கண்ணகி

அநுபல்லவி

கன்னல் தெளிதேன் பாகுசீனி
கனியும் சேர்ந்த கற்கண்டா உன்மேனி (அன்)

*படம் : கண்ணகி (1942), பாடலாசிரியர் : உடுமலை நாராயணகவி, பாடியவர் : பி.யூ. சின்னப்பா, இசை : எஸ்.வி. வெங்கட்ராமன்.*

✵

அன்பில் விளைந்த அமுதே - என்
ஆசைக் கனவும் நீயே!
இன்ப நிலாவே! உனது கண்கள்
இனிய கதைகள் சொல்லுதே!

*படம் : சுகம் எங்கே (1954), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்கள் : கே.ஆர். ராமசாமி, ஜிக்கி, இசை : விஸ்வநாதன் ராமமூர்த்தி.*

✵

சந்தோஷம் வேணு மென்றால்
இங்கே கொஞ்சம்
என்னை பாரு கண்ணால்
கொஞ்சம் பாரு கண்ணால்
வண்டாட தேன் மருவும் பூ மாங்கனி
பேசும் வனிதாமணி நேசம் பெறவே இனி
என்னைப் பாரு கண்ணால்
கொஞ்சம் பாரு கண்ணால்.

*படம் : தேவதாஸ் (1953), பாடலாசிரியர் : உடுமலை கவிராயர், இசை : சி.ஆர். சுப்பராமன்.*

✵

சந்தோஷம் வேணுமென்றால் ஜாலி வேணுங்க
சாப்பாடு ஓட்டல் ரூமு டான்சு வேணுங்க!

*படம் - சுகம் எங்கே (1954), பாடலாசிரியர் - அ. மருதகாசி, பாடியவர்கள் : ராஜேஸ்வரி, கோமளா, இசை : விஸ்வநாதன் – ராமமூர்த்தி.*



ஏழைகள் வாழவே இடமில்லையா
இறைவாஇதுதான் உன் லீலையா
பணம் இருந்து விட்டால் ஒரு நீதியா?
நிலை இழந்துவிட்டால் அவன் பாவியா?

*படம் : சிங்காரி (1951), பாடலாசிரியர் : தஞ்சை ராமையாதாஸ், இசை : டி.கே. கல்யாணம்.*



எளியோர்க்கு சுகவாழ்வு ஏது – துன்ப
இருள் நீக்க மேலோர் எண்ணாத போது
கடைத்தேற வழி இங்கு ஏது – ஏழை
கடைத்தேற வழி இங்கு ஏது – பஞ்சக்
களைதீர வேலை கிடைக்காத போது (எளியோர்க்கு)

*படம் : கனவு (1954), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : எம்.எல். வசந்தகுமாரி, இசை : வி. தட்சிணாமூர்த்தி.*



*இராகம் : தேசிய கீர்வாணி*

கண்ணில் புகுந்தான் கருத்தில் கலந்தான்
காதலினால் எனை அடைந்தான்

*படம் : ராஜகுமாரி (1947), பாடலாசிரியர் : உடுமலை நாராயணகவி, இசையமைப்பாளர் : எஸ்.எம். சுப்பைய்யா நாயுடு.*



கண்வழி புகுந்து கருத்தினில் கலந்த
மின்னொளியே ஏன் மௌனம்?
வேறெதிலே உந்தன் கவனம்?

*படம் : தூக்கு தூக்கி (1954), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்: டி.எம். சௌந்தரராஜன், இசை : ஜி. ராமநாதன்.*



நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை

இது நல்ல நாள் என்றும், இது தீய நாள் என்றும், இது நல்ல கிழமை என்றும், இது தீய கிழமை என்றும் ஆராய்ந்து பார்த்துச் செய்வது நோயாளிகளுக்கு ஏற்றதாகாது என்பதாம்.

நாள் என்பதற்கு வேளை என்றுங் கொள்ளலாம்.

*நூல் : வெற்றிவேற்கை, பாடல் : 4, ஆசிரியர் : ஆதிவீரராமபாண்டியன், உரையாசிரியர் : முகவை ராமானுச கவிராயர்.*

நாளும் கிழமையும் நலிந்தவர்க்கேது
நலம்பெற உலகில் மரணமே தோது.

*படம் : குமாஸ்தா (1953), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர் : நாகய்யா, இசையமைப்பாளர் : நாகய்யா.*



விதிபோல நிகழ்ந்தாலும் அறிவால் - அவரவர்தம்
மதியாலே விதிமாறும் உயர்வால்.

*படம் : மாணிக்கவாசகர் (1930), பாடல் : மாயவரம் கே. தியாகராஜ தேசிகர்.*

புதிய வாழ்வு பெறுவோம் - மதியினால்
விதியை வெல்ல முயல்வோம்
கெதியை நொந்திடாமல் - கால
கெதியை நொந்திடாமல்
கடமையைச் செய்குவோம்.

*படம் : அமரகவி(1952) பாடல்: மருதகாசி, பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர், இசையமைப்பாளர் : ஜி. ராமநாதன்.*



மாதர் தம்மை இழிவு செய்யும்
மடமை யைக்கொ ளுத்துவோம்;
வைய வாழ்வு தன்னில் எந்த
வகையி னும்ந மக்குளே
தாதர் என்ற நிலைமை மாறி
ஆண்களோடு பெண்களும்
சரிநி கர்ச மான மாக
வாழ்வம் இந்த நாட்டிலே

*நூல் : பாரதியார் கவிதைகள், பாடல் : 30. பகுதி தேசிய கீதங்கள் (விடுதலை), பக்கம் : 50.*

மாதர் தம்மை யடிமை - செய்யும்
வழக்கம் ஒழிய வேண்டும்

நீதி நிலவ வேண்டும் - எங்கும்
நேர்மை உலவ வேண்டும்.

*படம் : ராஜாம்பாள் (1951), பாடல் : அ. மருதகாசி, பாடியவர் : எம்.எல். வசந்தகுமாரி, இசையமைப்பாளர் : எம்.எஸ். ஞானமணி.*



ஒருமையுட னினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்த முறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்
உறவுகல வாமை வேண்டும்

*நூல் : திருவருட்பா நான்காம் திருமுறை, நூலாசிரியர் : இராமலிங்க அடிகள், பகுதி : தெய்வ மணிமாலை, பக்கம் : 690.*

உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவோர்
உயர் பதவி காணுகின்றார்.
உண்மையே பேசிடும் உத்தமர்கள் ஓயாத
துயராலே வாடுகின்றார்.

*படம் : ராஜாம்பாள் (1951), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்: வி.என். சுந்தரம், இசையமைப்பாளர் : ஞானமணி.*



ஆசை வச்சேன் ஒங்க மேல
ஆளான மாசி மாசம்
பேச நல்ல ஆசை ஐயா
பிறருக்கிடம் வையாதிய.

*நூல் : தமிழர் நாட்டுப் பாடல்கள், பகுதி : காதல், பக்கம் : 166, தொகுப்பாசிரியர்: நா. வானமாமலை, எம்.ஏ., எல்.டி.,*

ஆசை வச்சேன் உன்மேலே நான்
ஆளான உன்னைக் கண்டே
ஆளான உன்னைக் கண்டே
அன்பு கொண்டேன் பெண் மயிலே

*படம் : பொன்முடி (1950), பாடலாசிரியர் : அ. மருதகாசி, கா.மு. ஷெரீப் பாடியவர்கள் : ஜி. ராமனாதன், டி.வி. ரத்னம்.*



**சுரதா**

ஊஞ்சல் போல முன்னும் பின்னும்
கருங்கடலே - நீயும்
ஓடி ஓடி வந்து போவாய் பெருங்கடலே!

*நூல் : தமிழக நாட்டுப் பாடல்கள், தொகுத்தவர் : கவிஞர் மா. வரதராசன் பகுதி : தொழில் பாடல்கள், பக்கம் : 284*

ஆடும் ஊஞ்சலைப் போலே
அலையே ஆடுதே!
ஆறு வந்து கடலிலே சேருதே

*படம் : என் தங்கை (1952), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர்கள் : மோதி, பி. லீலா, இசை : சி.என். பாண்டுரங்கன்.*



தேங்கா மரத்தினிற் கள்ளு வடிக்கவும்
தேறற் றெளித்துத் தெளித்துக் குடிக்கவும்
மாங்காவில் வண்டாய் மயங்கிக் கிடக்கவும்
வாசி குணங்குடி வாயி லடைக்கவும்
கனவுங் கண்டிலனே - பாவியொரு
கனவுங் கண்டிலனே.

*நூல் : குணங்குடியார் பாடற்கோவை நூலாசிரியர் : குணங்குடி மஸ்தான் சாகிபு, பகுதி : கீர்த்தனைகள், பாடல் : 15, பதிப்பும் குறிப்பும் : பேராசிரியர் அப்துல் ரகுமான் (1980).*

மாங்கனியின் உள்ளே
வண்டுபோல் மயங்கிக்
காதல் புரிவதும் கலையே.

*படம் : அமரகவி (1952), பாடலாசிரியர் : சுரதா, பாடியவர்கள் : எம்.கே. தியாகராஜ பாகவதர், கானசரஸ்வதி, இசை : ஜி. ராமநாதன்.*



*இராகம் : சுருட்டி* *தாளம் : அடதாளம்*

*பல்லவி*

அடிக்கடி கையைப் பிடிக்கிறார் இவராரடி சகியே
இவராரடி சகியே (அடி)

*அனுபல்லவி*

செடிக்குள்ளே யொளித் தாலும் விடேனென்று
திடத்துடனெதிர் மடக்கி மடக்கித்
துடுக்குகள் பல தொடுக்கிறார் மனம் (அடி)

*நூல் : சுப்பராமையர் பதம் (1898), நூலாசிரியர் : சுப்பராமையர்.*

செடி மறைவிலே, ஒரு பூங்கொடி
மறைந்தே மாயம் செய்வதேன்?
பிடிக்க வந்தாலே, ஓடிடுவேனே
நிஜமே இது, எனையே தொட முடியாது உம்மாலே!

*படம் : அமரகவி (1952), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர்கள் : எம்.கே. தியாகராஜ பாகவதர், பி. லீலா, இசை : ஜி. ராமநாதன்.*



நளிகடற் றண்சேர்ப்ப நாணிழற் போல
விளியுஞ் சிறியவர் கேண்மை - விளிவின்றி
அல்கு நிழற்போ லகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு.

*பொழிப்புரை :– கீழ்மக்களுடைய நட்பானது காலை நேரத்து நிழலைப்போல வரவரக் குறையும்; பழமையான புகழுடைய பெரியோரின் நேயம் மாலை நேரத்து நிழலைப்போல வளர்ந்து கொண்டே யிருக்கும்; ஆதலின், பெரியோரை அவமதிக்காமல் அவருடைய நட்பைப் பெற வேண்டும் என்பது இதன் கருத்து.*

*நூல் : நாலடியார், அதிகாரம் : 17, பெரியாரைப் பிழையாமை, பாடல்: 166, பக்கம் - 383, உரையாசிரியர் : செம்பூர் வீ. ஆறுமுகம் சேர்வை.*

நாமே ஜீவசுகம் உல்லாசம் தேடும் நேரமே
போற்றிடும் கவி போலவே புதுமை தரும் காதல் லோகமே
நாம் வாழ்ந்திடும் நிலமே வான் உலகம் ஆகுமே
மாலை நிழல் போலே வளரும் ஆசை மனதில் மோதுமே.

*படம் : ஜெனோவா (1953), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர்கள் : ஏ.எம். ராஜா, பி. லீலா, இசை : எம்.எஸ்.விஸ்வநாதன்.*

என்னெனப் படுங்கோ றோழி மின்னுவர
வலனேர் பிறங்கு மென்றோ டதனெதிர்
கான மஞ்ஞை கடிய வேங்கு
மேதில கலந்த விரண்டற்கென்
பேதை நெஞ்சம் பெருமலக் குறுமே.

*நூல் : குறுந்தொகை, முல்லை, பாடல் : 194, பாடலாசிரியர் : கோவர்த்தன் பாடியது.*

*(இ-ள்) என்னவென்று கருதப்படும்? தோழி! மின்னல் வருவதால், வெற்றியை நேர்ந்து கலிப்பதாகும் தாழையின் மலர்; அம்மின்னலின் எதிரே காட்டிடத்து மயில்கள் மிகவும் ஆரவாரிக்கும்; அயன்மையதாய்க் கூடிய இவ்விரண்டு நிகழ்ச்சிகளுக்கு என் நெஞ்சம் பெருங்கலக்கம் அடையும்*

*(எ-று) மின்னத் தாழை மலர்தலும், மயில்கள் ஆரவாரித்தலும் இயற்கை. பேதை-காதலர் சொல்லில் நம்பிக்கையற்றமையிற் பேதையான குறித்த கார்காலத்திலும் வாராதாரிடத்துக் காதலறாமையின் பேதையான என்றுமாம்.*

*மெய்ப்பாடு - அழுகை, பயன் : ஆற்றாமையறிவித்தல்.*

*உரையாசிரியர் : திருக்கண்ணபுரத்தலத்தான் திருமாளிகைச் சௌரிப் பெருமாளரங்கன், தமிழ்ப்பண்டிதன், மதரஸே இஸ்லாமியா, வாணியம்பாடி, 5.10.1915.*

கண்ணில் வந்து மின்னல்போல் காணுதே - இன்பக்
காவியக் கலையே ஓவியமே
சுடர் மின்னல் கண்டு தாழை மலர்வதுபோல
உனைக்கண்டு உள்ளமே மகிழ்ந்தேனே

*படம் : நாடோடி மன்னன்(1958), பாடலாசிரியர் : சுரதா, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், ஜிக்கி.*



மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரு மென்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போல...

*நூல் : புறநானூறு, பாடல் : 2, பக்கம் : 4.*

சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகனார் பாடியது.

அணுச்செறிந்த நிலனும்; அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும்;
அவ்வாகாயத்தைத் தடவி வரும் காற்றும்; அக்காற்றின்கண்
தலைப்பட்ட தீயும்; அத் தீயோடு மாறுபட்ட நீருமென
ஐவகைப்பட்ட பெரிய பூதத்தினது தன்மை போல...

*விளக்கவுரை : சித்தாந்த கலாநிதி ஔவை, சு. துரைசாமிப் பிள்ளை (மதுரைத் தியாகராயர் கல்லூரி).*



எண்ணமெல்லாம் ஓரிடத்தையே நாடுதே
கண்ணிரண்டும் ஓர்முகத்தையே தேடுதே.
தேனேந்தும் மலராகி வானேந்தும் நிலவாகி
சிந்தை கவர்ந்திடுதே - என் மணிவிழி மயங்கிடுதே.

*படம் : திருமணம், (1958) பாடலாசிரியர் : சுரதா, பாடல் : பாடியவர்: டி.எம். சௌந்தரராஜன், இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.*



நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. (திருக்குறள் 20)

எத்தகையோரும் நீரில்லாமல் உயிர்வாழ முடியாது; நீரோ மழையில்லாவிடின் கிடையாது.

நீலவானம் இல்லாத ஊரே இல்லை
உலகினில் மழையின்றி வாழ்வே இல்லை.
அமுதே உனையன்றி வாழ்வே இல்லை
அன்பே இது உண்மையே.

*படம் : நாடோடி மன்னன் (1958), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், ஜிக்கி, இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.*



மலரினு மெல்லிது காமம் சிலரதன்
செவ்வி தலைப் படுவார். (திருக்குறள் 1289)

காம இன்பம் மலரினும் மெல்லியதாக இருக்கும்; ஒருசிலர் தாம் அதனுடைய சிறப்பை அடைவார்கள்.

அங்கும் இங்கும் விளையாடி அலைபோலே உறவாகி
ஆனந்தம் காணும் நேரம்தானே
உள்ளத்தின் ஆசையே உன்னைத் தேடுதே
கொஞ்சிப்பேசும் கிளியே நல் இன்பம் தரும் ஜோதியே
மானே மலரினும் மெல்லியது காதலே.

*படம் : நாடோடி மன்னன் (1958), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், ஜிக்கி, இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு*



மலைமிசைத்தோன்றும் மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர் - நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட் டா ரல்லால்
எஞ்சினார் இவ்வுலகத் தில்.

*பொழிப்புரை - மலையின்மேல் காணப்படுகின்ற பூரணச் சந்திரன் போல் யானையின்மேல் தமது தலையின்மேல் கவியப்பெற்ற*

வெண்கொற்றக் குடையாராகச் சென்றவர்களும் இறந்தனர்கள் என்று பூமியில் குறிக்கப்பட்டுப் பலரறியச் சொல்லப்பட்டாரல்லாமல் அச்சாவினின்றும் தப்பினவர் இந்த உலகத்தில் இலர் என்பது.

*நூல்: நாலடியார் 21; நாலடி நானூறு மூலமும் உரையும் : (1903), உரையாசிரியர் : மகாவித்வான் கோமளபுரம், இராசகோபாலப் பிள்ளை.*

வருக வருக வேந்தே
வாகை மாலைதரும் மாமணம் வருகவே
மலைமீது தோன்றும் முழுநிலவு போலே - யானைத்
தலைமீது வெண்குடை பிடிக்கும் தலைவனே
வருக வருகவே.

*படம் : நாடோடி மன்னன் (1958), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர்கள் : ஜிக்கி குழுவினர்.*



வாட வெற்றிலை வதங்க வெற்றிலை
வாய்க்கு நல்லால்லை
குருவி குடைந்த கொய்யாப்பழம்
கொடைக்கு நல்லால்லை

*நூல்: நாட்டுப்பாடல் திரட்டு 16, பகுதி : சிறுவர் உலகம் (வேடிக்கைப் பாட்டுக்கள்)*

வாட வெத்திலே வதங்க வெத்திலே
வாய்க்கு நல்லால்லே! - நீங்க
நேத்து வச்ச சந்தனப் பொட்டு
நெத்திக்கு நல்லால்லே!

*படம் : தலை கொடுத்தான் தம்பி (1959), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர்கள் : ஏ.எல். ராகவன், ஜமுனாராணி, இசை : விஸ்வநாதன் – ராமமூர்த்தி.*



குழலும் யாழும் இனிமை தருமோ
மழலை இன்பம் போலவே

*படம் : பாக்கியவதி (1957), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்: பி. லீலா, இசை : எஸ். தட்சிணாமூர்த்தி.*

குழலும் யாழும் இனிமை தராது
குழந்தையின் தேன் மொழி
கேட்டிடும் போது.

*படம் : புனிதவதி (1963), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர்கள் : கண்டசாலா, பி. சுசீலா, இசை : ஹுசைன் ரெட்டி.*



காத்திருந் தாலும் கலிதீரு மேகண்
ணாட்டிமுகம்
பார்த்திருந் தாலும் பசியாரு மேயிட
பாகமதில்
வீற்றிருந் தாலும் வினைதீரு மேமெல்லி
யாளிவளைச்
சேர்த்தணைந் தாலும் சிவபோக ஞானம்
சித்திக்குமே

*நூல் : சாரங்கன் (1932), பாடல் : 4, நூலாசிரியர் : கே. குற்றாலம் பிள்ளை.*

உன்பேரைச் சொன்னால் மதுவூறும் இனி
உன்முகம் பார்த்தால் பசிதீரும்

*படம் : பக்தகுசேலா, பாடலாசிரியர் : சுரதா, பாடியவர் : ஜானகி, ஏ.பி. கோமளா, இசை : பிரதர் லட்சுமணன்.*



எட்டாதகொம்பி லிருக்கும்கனியை
எப்படிக் கொய்திடலாம்
எட்டும்படிக்கிரு கொம்புண்டதைப்பற்றி
ஏறிப் பறித்திடலாம்.

*படம் : வள்ளித் திருமணம் (1933), பாடியவர் : மாஸ்டர் எம். துரைசாமி, டி.வி. சுந்தரம்.*



எட்டாக் கொம்பில் கனியிருந்தால்
எட்டிப் பறித்திட லாமன்றோ?

*படம் : காட்டு மைனா (1963), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர்கள் : பி. சுசீலா, எஸ்.வி. பொன்னுசாமி, இசை : பி ர த ர் லெட்சுமணன்.*



வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது. (குறள். 377)

வகுப்பார் அதுபோல் வாழ்வதில்லை
வந்தவர் யாருமே நிலைத்ததில்லை
தொகுப்பார் சிலரதை சுவைப்பதில்லை
தொடங்குவார் சிலரதை முடிப்பதில்லை.

*படம் : நீர்க்குமிழி (1965), பாடலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன்.*



## கே.டி. சந்தானம்

அம்பலத்தரசே யருமருந்தே
ஆனந்தத்தேனே யருள்விருந்தே
பொதுநடத்தரசே புண்ணியனே
புலவரெலாம் புகழ் கண்ணியனே.

*நூல் : திருவருட்பா, பகுதி : நாமாவளித்திரட்டு.*

அம்பலத்தரசே அருமருந்தே - நாம்
உண்பது எல்லாம் ஊர் விருந்தே
சாவடி சத்ரம் நம் சொந்தம் - அன்னைக்
காவடிக்கேது நிர்ப்பந்தம்.

*படம் : வேலைக்காரி மகள் (1953), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம்; பாடியவர் : எஸ். தட்சிணாமூர்த்தி, தேவநாராயணன், இசை : சி. ஆர். சுப்பராமன்.*



*ராகம் : யமுனா கல்யாணி* *தாளம் : ஆதி*

பல்லவி

பிழைக்கும் புத்தியைக் கேளடா - சூரபத்மாநீ
பிழைக்கும் புத்தியைக் கேளடா

அநுபல்லவி

மழைக்குதவியகுடை - இடிக்குதவுமென்றெண்ணி
மலைத்துமிக மனப்பால் குடியாமலே
குலத்துடனே சரியாய் மடியாமலே (பிழைக்கும்)

*நூல் : ஸ்காந்த புராண கீர்த்தனை (1914), நூ பக்கம் : 173, பகுதி : வீரபஹேந்த்ர காண்டம் (வீரன்கூறல்), நூலாசிரியர் : கவிஞர் குஞ்சர பாரதி,*

துணிந்த பின் மனமே துயரம் கொள்ளாதே
சோகம் பொல்லாதே (துணி)

சீறும் புயலும் மழையும் சேர்ந்தால்
சின்ன குடை தாங்காதே. (துணி)

*படம் : தேவதாஸ் (1953), பாடலாசிரியர் :கே.டி.சந்தானம், பாடியவர்: கண்டசாலா், இசை : சி.ஆர். சுப்பராமன்.*



மகாபலிபுரம் மாயக்காட்சி
மானிடர் கூறும் வேத சாட்சி
நேர்திருக் கழுக்குன்றம் நடுமாட்சி
பார்புகழ் பட்சிதீர்த்தம் ஓயாக் காட்சி

காலை வியாழன் உதித்திடவே
கனசிற்பி விசித்திரங்கள் துலங்கிடவே
நூதன லயிட்டெளசு மோங்கிடவே
காதலாய் சமுத்திரம் பாடிடவே.

தசாவ தாரத்தின் உருவங்கள் பார்
ஸ்தல சயன கனபெருமாள் பார்
தினந்தினம் கடல்ஸ்நான சிங்காரம்பார்
வதைத்திடும் நெருஞ்சிமுள் அநியாயம் பார் !

*நூல் : செங்கற்பட்டு சீர்திருத்தப் பாடசாலைப் பாடல்கள், பக்கம் 92. பாடியவர் : எஸ்.ஜி. வேதமாணிக்கம்.*

உல்லாசப் பயணம் மகாபலிபுரம்
செல்வதுபோல் விளையாடலாம் - அங்கு
உலகம் வியக்கும் ஓவிய சிற்பக்
கலைகளின் அழகைக் காணலாம்.

அங்கயற் கண்ணி பாரடி அலைவீசும்
கடலின் அழகை
தங்க மயமாய்ச் செய்கிறான் மாலைச்
செங்கதிரோன் இவ்வுலகை!

*படம் : முதல் தேதி (1955), பாடலாசிரியர் : க.டி. சந்தானம், பாடியவர் : டி.வி. ரத்தினம், கோமளா, ராணி, இசை : டி.ஜி. லிங்கப்பா.*



இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில். (குறள் 621)

துன்பம் வரும்போது நகைத்திடுவாய் - கால்
தூசுக்கும் சமமாக மதித்திடுவாய் - நீ (துன்பம்)

*படம் : முதல் தேதி (1955), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம், பாடியவர் : இசையரசு தண்டபாணி தேசிகர், இசை : டி.ஜி. லிங்கப்பா.*



கங்கை நதிப்புறத்துக் கோதுமைப்பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறுகொள்ளுவோம்.

*நூல் : பாரதியார் கவிதைகள், நூலாசிரியர் : சி. சுப்பிரமணிய பாரதியார். (1907)*

கொங்கு நாட்டுச் செங்கரும்பே
தங்கச் சிலையே - அன்பு
பொங்க வரும் புத்தமுதே இன்ப நிலையே.
கங்கை நதிக் கோதுமையே
காவேரி வெற்றிலையே
சிங்களத்துத் தேயிலையே
சிவபுரிப் புகையிலேயே.

*படம் : கோமதியின் காதலன் (1955), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம்.*



பானா இட்டானா டானா ணத்திலே
பாரு பெற்றவண்டா - அப்பாடா

பாரு பெற்றவண்டா
நான் ரீனா பெற்றவண்டா - அப்பாடா
நான் சு பெற்றவண்டா
பட்டணத்தில் பரிசு பெற்றவண்டா
காணாஇட்டண்ணா டானா டத்தை
காணா வைப்பவண்டா - அப்பாடா

நான் இன்னன்னா வைப்பவண்டா
நா இம்மன்னா வைப்பவண்டா
கட்டட த்தைக் கன்னம் வைப்பவண்டா.

*நூல் : அதிசயப்பூன் பாட்டுகள் (1930), பாடல் : 4, பதிப்பாசிரியர் : ஜே. புருஷோத்தமன் நாயுடு - பிரதர்ஸ், சென்னை.*

பொனா, ய்யன்னா, க்கன்னா, காவன்னா
லுனா, குதிரை யிண்ணான்! அப்படின்னா?
பொய்க்காலு குதிரையைச் சொன்னான்! – அப்போ
மனா, ண்ணண்ணா, டினா, கூவன்னா...
டனா, போடாதிண்ணான்! – இப்படிண்ணா
மண்டிகூட போடாதிண்ணான்.

*படம் : அம்பிகாபதி (1957), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம், பாடியவர் : சீர்காழி கோவிந்தராசன், இசை : ஜி. ராமநாதன்.*



மூணாத்தனம்
ஓய்... வானா... மூனா.... கானா....ஓய்
வானா....மூனா.... கானா
மூனாத்தனத்தை மறைச்சு வக்க
முதலாளியைக் காக்கா புடிக்கும் (வானா)

*படம் : மாங்கல்யம் (1954), பாடலாசிரியர் : அ. மருதகாசி*



உழவ ரோதை மதகோதை
உடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப
நடந்தாய் வாழி காவேரி

விழவ ரோதை சிறந்தார்ப்ப
நடந்த வெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன்
வளனே வாழி காவேரி.

*நூல் : சிலப்பதிகாரம், கானல் வரி.*

நடந்தாய் வாழி காவேரி
நாடெங்குமே செழிக்க, நன்மையெல்லாம் சிறக்க
நடந்தாய் வாழி காவேரி!
அடர்ந்த மலைத்தொடரில் அவதரித்தாய் - இந்த
அழகுத் தமிழ் நிலத்தை அலங்கரித்தாய்
உணவளிக்கும் உழவர்க்கெல்லாம் கண்ணாக! - பண்பு
உயர்ந்த தமிழ் நாட்டின் செல்லப் பெண்ணாகப்
புலவரெல்லாம் பாராட்டும் பொன்னாக - அன்பு
பொங்கி வரும் காவிரியே வாழியவே.

*படம் : அகத்தியர் (1972), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம், பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசை : குன்னக்குடி வைத்தியநாதன்.*



*ராகம் : பூபாளம்* *தாளம் : மிஸ்ரம்*

உன்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கல மென்று
அங்கப் பழம் சொற்புதுக்கும் எம் அச்சத்தால்

எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங் கேள்
எம் கொங்கை நின்னன்பர் அல்லார் தோள் சேரற்க.

நூல் திருவாசகம், மாணிக்க வாசகர்

உடைய கையில் என் பிள்ளை
உனக்கே அடைக்கலம் என்று
இன்று நம் மன்னன் கொடுத்தான்
தன் செல்வியை (இன்று)

படம் : ராஜராஜசோழன் (1973), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம், பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசை : குன்னக்குடி வைத்திய நாதன்.



## கொத்தமங்கலம் சுப்பு

ராகம் : யதுகுல காம்போதி தாளம் : ஆதி

காக்கைச் சிறகினிலே நந்த லாலா! - நின்றன்
கரியநிறந் தோன்று தையே, நந்த லாலா!
பார்க்கும் மரங்க ளெல்லாம் நந்த லாலா - நின்றன்
பச்சை நிறந் தோன்று தையே, நந்த லாலா!

நூல் : பாரதியார் பாடல்கள்.

காக்கைச் சிறகினிலே - உந்தன்
கரிய நிறம் காணுதையா - ரங்கா
நெருக்கும் அலைகடலில் - ரங்கா உன்
நீல நிறம் தோன்றுதடா - பாண்டு ரங்கா.

படம் : சக்ரதாரி (1948), பாடலாசிரியர் : கொத்தமங்கலம் சுப்பு, பாடியவர் : சித்தூர் வி. நாகய்யா, இசை : எம்.டி. பார்த்தசாரதி.



வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு. (ஔவையார்)

வாக்கிருந்தால் மட்டும் போதாது - நல்ல
மனமிருக்க வேண்டும்
மனமிருந்தால் மட்டும் போதாது - மாமலராள்
பணமிருக்க வேண்டும்
பணமிருந்தால் மட்டும் போதாது - உடலில்
பலமிருக்க வேண்டும்.

படம் : ஜெமினி ஔவையார் (1953), பாடலாசிரியர் : கொத்தமங்கலம் சுப்பு, இசை : எம்.டி. பார்த்தசாரதி.



குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்.

(க-து) ஒரு காலத்தில் அரசர்க்கரசனாய் இருந்து யானைமேற் சென்றவரும், பின்னொரு காலத்தில் மிகுதியும் வருத்தப்பட்டுக் கால் நடையாக மற்றொரு தேசம் போகவும் நேரிடும்.

நூல் : வெற்றி வேற்கை, 51, நூலாசிரியர் : ஆதிவீரராம பாண்டியர், உரையாசிரியர் : வரகவி அ. சுப்பிரமணிய பாரதியார் (1958)

குஞ்சரத்தில் ஏறியே குடை நிழலில் ஆண்டபேர்
வஞ்சகத்தின் வலிமையால் வண்டி ஓட்டினாலுமே
அஞ்சி வாழ்ந்திடோம் யார்க்கும் அடிமை செய்யோம்.

படம் : வஞ்சிக்கோட்டை வாலிபன் (1958).



வேர்க்குங்கண் ணீர்ததும்பும் கம்பிக்கும் மெய்ந்நடுங்கும்
வார்த்தை நழுவும் மனம்பதறும் - கார்க்கதமாய்க்
காந்தும் உரோமாஞ் சலியாகும் காதலித்தார்க்(கு)
ஏய்ந்த குணங்காண் இவை.

உடற்கண் வேர்வை யரும்பும், கண்களில் ஆநந்த நீரொழுகும், உள் நடுங்கும், உடல் நடுங்கும், வசனம் குழறும், ஆசாரியரை என்றைக் கடைவோமென்று மனம் விரைந்து நாடும், மேகம் போல் உள்ளே குமுறி உளமெலாம் வெதும்பும், உடல் மயிர்க்கூச் செறியும்.

நூல் : ஒழுவிலொடுக்கம் (1865), நூலாசிரியர் : சீர்காழி கண்ணுடைய வள்ளல், பாடல் : 10 பகுதி சத்திநிபாதத்துத் தமரொழிவு, உரையாசிரியர்: திருப்போரூர் சிதம்பர சுவாமிகள்.

மாலா : அடிக்கடி நெஞ்சில் படபடப்பு
அளவுக்கு மீறின துடிதுடிப்பு
படுக்கையில் படுத்தா கதகதப்பு
இருகண் சிவப்பு - ஒரு மதமதப்பு
ஏன் ஸார் இத்தனை பரபரப்பு?

மோகன் : இது காதல் நோயின் அறிகுறியாகும்
இவர் கவனிச்சு பார்த்தா சரியாகும்.

*படம் : மோட்டார் சுந்தரம் பிள்ளை (1966), பாடலாசிரியர் : கொத்த மங்கலம் சுப்பு, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா குழுவினர், இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



பெண்வழி நலனொடும் பிறந்த நாளொடும்
எண்வழி உணர்வுநான் எங்கும் காண்கிலன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வ னேகொலாம்.

*நூல் : கம்பராமாயணம், படலம் : மிதிலைக்காட்சிப் படலம் 55.*

கள்வன் ஒருவன் கட்டழகன் - என்
கண்வழியாக நுழைந்து விட்டான்
கருத்தைக் கொள்ளை அடித்தவனை
காவலில் வைக்க வழி உண்டோ?

*படம் : மோட்டார் சுந்தரம் பிள்ளை (1966), பாடலாசிரியர் : கொத்த மங்கலம் சுப்பு, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா குழுவினர், இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



## டி. ராஜேந்தர்

ஸ்வர மில்லாமல் சங்கீதமா?
துணையில்லாமல் சந்தோஷமா?
ஜோடி சேருங்கள் இளைஞர்களே
ஆடிப் பாடுங்கள் இளமையிலே.

*படம் : சங்கிலி (1982), பாடலாசிரியர் : கண்ணதாசன், பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



சாரீரம் இல்லாமல் சங்கீதமா?
சம்சாரம் இல்லாமல் சந்தோஷமா?
கிளியே கிளியே எங்கே போனே
தூக்கம் வரலியே – என்
ரதியே ரதியே எங்கே போனே
பசியே எடுக்கலயே...

*படம் : மைதிலி என்னைக் காதலி (1986), பாடலாசிரியர் : டி. ராஜேந்தர், பாடியவர் : எஸ்.பி. பாலசுப்பிரமணியம், இசை : டி. ராஜேந்தர்.*



தண்ணீரில் மீன் அழுதால்
கண்ணீரைக் கண்டது யார்?
தனியாக நானழுதால்
என்னோடு வருவது யார்?

*படம் : வடிவங்கள் (1980), பாடலாசிரியர் : பூவை செங்குட்டுவன், பாடியவர் : ஜேசுதாஸ், இசை : சந்திரபோஸ்.*



தண்ணீரிலே மீன் அழுதால்
கண்ணீரைதான் யாரறிவார்?
தனிமையிலே நீ அழுதால்
உன் மனதை யாரறிவார்?

*படம் : மைதிலி என்னைக் காதலி, பாடலாசிரியர் : டி. ராஜேந்தர், பாடியவர் : எஸ்.பி.பாலசுப்ரமணியம், இசை : டி. ராஜேந்தர்.*



பெண் : வெள்ளி நிலவைக் கையில் பிடிக்க
உள்ளம் நினைக்கிறது

ஆண் : பூமியில் வந்து சந்திர கிரணங்கள்
பூவை அணைக்கின்றதே.

*படம் : ஒருவனுக்கு ஒருத்தி, பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : ஜேசுதாஸ், எஸ். ஜானகி, இசை : வி. குமார்.*



சந்திரனைப் பிடிப்பதற்குக் கையும்தான் எட்டவில்லை
சட்டத்தை வளைப்பதற்கு ஏழைக்கு வலிவு இல்லை
பணம் அது பத்தும் செய்யும் - அது
ஏழைகளை வித்துவிடும்
பொய்யும்தான் சாட்சி சொல்லும் - அதில்
மெய்யும்தான் சாஞ்சி விடும்.

*படம் : ஒரு தாயின் சபதம், பாடலாசிரியர் : டி. ராஜேந்தர்.*

## நா. காமராசன்

அன்பான நீயும் அருகே இல்லாதே
சுகமே தராதே
நிழல்கூட தீபோல் சுடுதே விடாதே
கருணையில்லாதே.

*படம் : ஜெனோவா (1953), பாடலாசிரியர் : சுரதா, பாடியவர்கள் : ஏ.எம். ராஜா, பி.லீலா, இசை : ஞானமணி.*

நீ தொடும் வேளையில் கொதிப்பும் என்ன?
எந்தன் நிழலும் சுடுவதென்ன?

*படம் : இன்றுபோல் என்றும் வாழ்க (1977), பாடலாசிரியர் : நா. காமராசன், பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : எம்.எஸ்.விஸ்வநாதன்.*



கண்ணிலிருந்து இதயம் வரையில்
காதல் போராட்டம்
தரையிலிருந்து கட்டில் வரையில்
பருவத் தேரோட்டம்

*படம் : நேற்று இன்று நாளை (1974), பாடலாசிரியர் : சுரதா, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : கே.வி. மகாதேவன்.*

இதயத்திலிருந்து இதழ்கள் வரை - அது
ஏதோ ஒருவகை புதியகலை - மனப்
புயலுக்குப் பிறகு அமுதமழை - அதில்
மலர்போல் வளர்வது என்ன கதை?

*படம் : இன்று போல் என்றும் வாழ்க, (1977), பாடலாசிரியர் : நா. காமராசன், பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



குடிக்கத் தண்ணீரில்லாது பெருங் கூட்டந் தவிக்குது - சிறு
கும்பல் மட்டும் ஆரஞ்சுப்பழ ஜூசு குடிக்கிது
அடுக்கு மாடிமீது சிலது படுத்துத் தூங்குது - பல
ஆயிரக் கணக்கான மக்கள் பாயில்லாமல் ஏங்குது,

*படம் : மணமகள் (1951), பாடலாசிரியர் : உடுமலை நாராயண கவி*

எத்தனை மனிதர்கள் உலகத்திலே - அம்மா
எத்தனை உலகங்கள் இதயத்திலே
ஏழையின் உறக்கங்கள் பாதையிலே - அந்த
மாளிகை மயக்கங்கள் போதையிலே

*படம் : நீதிக்குத் தலைவணங்கு, பாடலாசிரியர் : நா. காமராசன், பாடியவர், : பி. ஜெயசந்திரன், இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



## மகாராஜ வாத்தியார்

தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துட் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
அணிதேர் புரவி ஆட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.

நூல் : வெற்றி வேற்கை (2), நூலாசிரியர் : ஆதிவீரராம பாண்டியர்.

ஆலின் விதைசிறி தாயினுமே கோன்
நீள படையேதங்க நிழல்தருந்தானே
தாயே நிஜமிதுவே நேரில் காண்பாய்.

படம் : வாமன அவதாரம் (1940), பாடலாசிரியர் : ம க ா ர ா ஜ வாத்தியார், பாடியவர் : மாஸ்டர் டி.ஆர். மகாலிங்கம், இசை : என்.பி.எஸ். மணி.



### பழமுதிர்சோலை காவடிச் சிந்து

இராகம் : செஞ்சுருட்டி — தாளம் : ஏகம்

(வண்ணத்தினைமாலைத் தெள்ளியே – என்ற அண்ணாமலை
ரெட்டியார் காவடிச் சிந்து வர்ணமெட்டு.)

கந்தா இதென்ன சிங் -காரமா–மனங்
கல்லா இரும்பாக – ரூரமா – என்னைக்
காப்பதுனக்கொரு – பாரமா – சுடு
கதிராவத – னுழையாதொரு – புறமூர்பழ – முதிர்சோலைமு
காமிங்கிருந்ததி – தூரமா – கவி
காலத்துக்கஞ்சுதல் – வீரமா?

நூல் : தோத்திரக் கீர்த்தனப் பாமாலை (1924), (51), நூலாசிரியர் : பழனி கே. பக்கிரியா பிள்ளை.

பரிமளமிகுவன மதிசயமே
பகலவனுழைந்திட இடமில்லையே
பலவித மரமதன் கிளைகளிலே
பறவைகள் தொனிபல வருவதைப்பார்!

படம் : தயாளன் (1941), பாடலாசிரியர் : மகாராஜா வாத்தியார், பாடியவர்கள் : டி.ஆர். மகாலிங்கம், எஸ்.சி. கிருஷ்ணன்.



## சங்கரலிங்கக் கவிராயர்

இராகம் : அடாணா ரூபக தாளம்

பல்லவி

எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம்
என்ன பொருத்தமோ
இந்தப் பொருத்தம் உலகில் பிறருக்
கெய்தும் பொருத்தமோ.

*நூல் : திருவருட்பா ஆறாவது, திருமுறை, பகுதி : மெய்யருள் வியப்பு மாலை, (1)*

(வாங்கித்தா மெட்டு)

எனக்கும் உனக்கும் உகந்த பொருத்தம்
இசைந்திருக்குது - திரு
மணத்தின் முகூர்த்தம் நமக்குள்ளே இன்று
வாய்த்திருக்குது

*படம் : அதிரூப அமராவதி (1935), பாடலாசிரியர் : எஸ்.எஸ். சங்கரலிங்கக் கவிராயர், பாடல் : 14, பாடியவர் : பி.கே. சம்பந்தன், இசை : ரங்கசாமி நாயக்கர் மற்றும் குழுவினர்.*



பல்லவி

போய் வருவாய் மகனே - சீமைகள் பார்க்கப்
போய் வருவாய் மகனே (போய்)

அனுபல்லவி

நேயமறவாமல் நெறிகள் திறவாமல்
நித்தியானந்த கர்த்தனையெண்ணி
எத்திக்கும்பிர யாணம் நீ பண்ணி (போய்)

சரணங்கள்

ஆய்ந்தநூலைக் கைக் கொள்ளுவாய் - துன்மார்க்கத்
தமர்ந்தவர் களைத்தள்ளுவாய்
வாய்ந்தவரைப் பின்பற்றி மகித்லமெல் லாஞ்சுற்றி
மருவுமதியாரோ றதனில் வருகுவாய்
வந்துமனமகிழ் வதைநீ தருகுவாய் (போய்)

விற்பன்னரைத் தேடுவாய் - தேடியே நீயும்
விகிர்தமாகவே கூடுவாய்

அற்பரோடிணங்காமல் ஆசையிற் பிணங்காமல்
அமலனிருசரண் மனதிலுறஉன
தகமும் புறமுமங் கவரதருள்பெறப் (போய்)

எங்களைப் பிரிந்தேனென்று - மனதை நீ
சங்கடப்படுத்தாய் சென்று
பொங்குமறிவையுண்டு புகலும்நின் மனம்விண்டு
புந்தியுளனென விந்தைகொடுவர
முந்துமுதலைநீ சிந்தனை செய்து (போய்)

*நூல் : பதிவிரதை விலாசம் (1909), பக்கம் : 14,15, நூலாசிரியர் : யாழ்ப்பாணம் தெல்லிப்பழை குமார குலசிங்க முதலியார்.*



போய் வருகின்றேன் பிதா
புண்ணியனே பூம்பாதா
தாய்நாட்டை விட்டகன்று
தமைப் பிரிந்து (போய்)

ஆயிந்த சபையுள்ள அமைச்சரே! அதிபரே!
என் தாயினு மேலானவரே!
பிறதேசம் நான்
தேச சஞ்சாரம் செய்து சேவிப்
பேனுமை வந்து
ஆசிர்வாதம் கொடுத்தருள்வீர்
ஆதரித்திடுவீர் (போய்)

*படம் : அதிரூப அமராவதி (1935), பாடலாசிரியர் : எஸ். எஸ். சங்கரலிங்கக் கவிராயர்.*

சோலையிலோர் நாள் எனையே,
தொட்டிழுத்து முத்தமிட்டான்.
துடுக்குத் தனத்தை என் சொல்வேன்
மாலைப் பொழுதில் இந்த மாயம்புரிந்த செம்மல்
வாய்விட்டுச் சிரித்துப் பின்
போய்விட்டானேடி தோழி!
ஓடி விழிக்கு மறைந்தான் - ஆயினும் என்றன்
உள்ளத்தில் வந்து நிறைந்தான்!

*நூல் : பாரதிதாசன் கவிதைகள் (1938), பகுதி : காதல்.*

சோலையிலே ஒருநாள் எனையே
தொட்டிழுத்தே முத்தமிட்டான்டி - சகியே

மாலைப் பொழுதில் கண்ணன் மாயக் குழலிசைத்து
வாய்விட்டுச் சிரித்துப் பின் போய் விட்டான் - சகியே
ஓடி எங்கோ மறைந்தான் - ஆயினுமெந்தன்
உள்ளந்தனிலே வந்து நிறைந்தான்

*படம் : ஸ்ரீ ஆண்டாள் (1948), பாடலாசிரியர் : யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார், பாடியவர் : யு.ஆர். ஜீவரத்தினம், இசை : ஜி. ராமநாதன், ரங்கநாதம்.*



## கவிஞர் கா.மு.ஷெரீ:ப்

தற்கொலை பாபமே தானறியீரோ
தாமுணர்ந்துமிதனைத் தான்துணிவாரோ?

*படம் : லீலாவதி - சுலோசனா (1936), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ்*

காமுகர் சூழ்ந்தாலும் கடும்பசி வந்தாலும்
கற்புநிலை தவறாதே மனமே!
ஏமாற நேர்ந்தாலும் தற்கொலைப் பாதையில்
என்றென்றும் செல்லாதே மனமே.

*படம் : மாங்கல்யம் (1954), பாடலாசிரியர் : கா.மு. ஷெரீஃப், பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : கே.வி. மகாதேவன்.*



*ராகம் : சாவேரி* *தாளம் : ஆதி*

*பல்லவி*

ஆரோ இவர் ஆரோ, என்ன பேரோ அறியேனே (ஆரோ)

*அநுபல்லவி*

கார் உலாவும் சீருலாவும் மிதிலையால்
கன்னி மாடந்தன்னில் முன்னே நின்றவர் (ஆரோ)

*சரணம்*

பாக்கிய மென்பதிவர் தெரிசனமோ - அதிங்கே
பலித்ததென்ன புண்ணியமோ - மனமே
மூக்கும் விழியும் தீர்க்கமாய் இன்னமும் - பெண்கள்
பார்க்கப் பார்க்க நோக்கம் கொள்ளுமோ - கண்கள் (ஆரோ)

*நூல் : இராமநாடகம் (1861), பாலகண்டம், நூலாசிரியர் : சீர்காழி அருணாசல கவிராயர்.*

சந்திர பிம்பமுக மலராலே - என்னைத்
தானே பார்க்கிறார் ஒருகாலே
அந்த நாளில் தொந்தம் போலே வருகிறார்
இந்த நாளில் வந்து சேவை தருகிறார் (ஆரோ)

*நூல் : இராமநாடகம்*

யாரோ என்ன பேரோ! யாதிவர் சொந்த ஊரோ?
ஏனோ என் நெஞ்சம் இவரை நாடுது?
முன்னம் கண்டதில்லை நேசம் கொண்டதில்லை
இன்றோ இவர்மீது மனசு செல்லுது
தோணுமிந்த நிலைதானோ காதல் என்பது - இதைச்
சொல்லும்போதே எனது உள்ளம் இன்பங் கொள்ளுது.

*படம் : முதலாளி (1957), பாடலாசிரியர் : கவி.கா.மு. ஷெரீஃப், பாடியவர் : எம்.எஸ். ராஜேஸ்வரி, இசை : கே.வி. மகாதேவன்.*



தமிழ்க்களஞ்சியம், நவசக்தி பத்திராதியர்
திரு.வி. கலியாணசுந்தர முதலியார்
(கல்யாணம் செய்து வையுமே - என்ற மெட்டு)

பல்லவி

திருவிகல்யாணசுந்தரன் - நல்
திகழ்ந்திடும் யந்திரன் (திரு)

அநுபல்லவி

பெருமை பெருகுந்தமிழ் பேசிடும் பண்டிதன்
பேதகம் சிறிது மிலாததோர் கண்டிதன்
அருமை தேசபக்தியில் அணுவும் தாண்டாதவன்
அவனியில் தன்சுகம் நாளும் வேண்டாதவன் (திரு)

தொழிலாளர் தனக்கென்றும் தொண்டுசெய்யும்
குணத்தோன்
தீமையென் பதைச் சற்றும் செய்திடா அகத்தோன்.
வழிசுய ராஜ்யம் வழுத்திடும் மனத்தோன்
வளம்பெரு திருச்சென்னை நகரில்வாழ் தனத்தோன் (திரு)

நவசக்தி என்றஒரு பத்திரிகைக் கதியன்
நயம்பெறத் தமிழ்நிலை நாட்டிய நிதியன்
நவம்பல செய்திடும் நாடோர் துதியன்
நாடெங்கும் புகழ்நிலை பரவிடு மதியன் (திரு)

*நூல் : இந்திய தேசாபிமானிகளின், உபந்நியாச செந்தமிழ்த் திலகம், (1924), பக்கம் 40; நூலாசிரியர் : மதுரை பாலதாஸ், (உடுமலை முத்துசாமிக் கவிராயரின் மாணவர்).*

நல்லறிவாளர் திரு. வி.க.
தமிழ்நாட்டின் செல்வம் திரு.வி.க.
தொல்லைபடும் பாட்டாளியின்
தோழனாக வாழ்ந்தவராம்
சிந்தை அள்ளும் நூற்கள்பல
செந்தமிழ் நடையில் தந்து
தீந்தமிழுக்கே பெருமை தேடிய பெரியவராம்.

கவி. கா.மு. ஷெரீஃப்

*படம் : மாதவி (1959), பாடல் : கா.மு. ஷெரிஃப், பாடியவர் : எஸ்.சி. கிருஷ்ணன், இசை : கே.வி. மகாதேவன்.*



பணமிருந்தாலுலகம் பேசும்
பணமில்லையென்றா லுலகம் ஏசும்
குணமிருந்தாலென்ன காணும்
குடி வாழ்க்கையை மெய்யென்றால் தோணும்

*நூல் : ஆறாதாரவிலாசம் (1883), பக்கம் : 99, நூலாசிரியர் : கன்னிப்புத்தூர் வேலாயுத முதலியார்.*

ஒண்ணுந் தெரியா ஆளானாலும் பணமிருந்தாலே! -அவனை
உயர்த்திப் பேச மனிதர் கூட்டம் நாளும் தப்பாதே
என்ன அறிவு இருந்திட்டாலும் பணமில்லாத ஆளை - உலகம்
எந்த நாளும் மனிதனாக மதிக்கமாட்டாதே!

*படம் : பணம் பந்தியிலே (1961), பாடலாசிரியர் : கவி கா.மு. ஷெரிஃப், பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசை : கே.வி. மகாதேவன்.*



# தூத்துக்குடி ஸ்ரீமான் வ.உ. சிதம்பரம் பிள்ளை

பல்லவி

சிதம்பரச் சீமான் அதி தீரச்சுதேசி (சித)

அநுபல்லவி

தீரச் சுதேசி சுத்த வீரப்ரகாசி (சித)

சரணம்

இதம்பரவ நெல்லையில்
இந்துநிலை சொல்லையில்
இறந்தவர்க்கும் உணர்ச்சி
ஏற்பட்ட(து) அவ் வெல்லையில் (சித)

புறநாட்டுச் சரக்கெல்லாம்
புறக்கணித்திட்ட நல்லான்
பூர்வசுய ராஜ்ஜியப்
போரில்முன் நிற்கவல்லான் (சித)

அடிமைத்தனத்தைப் போக்கி
ஆண்மைத்தனம் உண்டாக்கி
ஆதிமத சக்தியின்
நீதியருளும் வாக்கி (சித)

*நூல் : இந்து தேசாபிமானிகள், செந்தமிழ்த் திலகம் (1921), பக்கம் 15. பாஸ்கரதாஸ்.*

தென்பாண்டிச் சீமையிலே பிறந்தவர்,
கப்பலோட்டிய தமிழர் வ.உ. சிதம்பரனார்
இந்த நாட்டிலே செல்வக் குடியில்
தோன்றியவர் வ.உ.சி.
ஏகாதிபத்தியக் கப்பலுக்கு
எதிர்க்கப்பல் விட்ட தீரர் வ.உ.சி.
சொந்த நாட்டின் விடுதலைக்கெனத்
துயரடைந்தவர் வ.உ.சி.

தூய வள்ளுவர் குறள்நெறி
வாழ்ந்த அறிஞர் வ.உ.சி.
அந்நியர் ஆட்சி அகன்றிட
போர்க்கொடி உயர்த்தினார் வ.உ.சி

இன்னலோடு இருஜன்ம
தண்டனை ஏற்று நொந்தவர் வ.உ.சி.
என்ன கொடுமையாம் அந்தோ சிறையில்
செக்கிழுத்தவர் வ.உ.சி.
இறுதி நாளில் ஐயோ
அரிசி விற்றுப் பிழைத்தாராம் வ.உ.சி.

*பாடலாசிரியர் : கவி கா.மு. ஷெரீப், படம் : மாதவி (1959), பாடியவர் : எஸ்.சி. கிருஷ்ணன், இசை : கே.வி. மகாதேவன்.*



வரவுக்கேற்ற செலவு செய்து வாழ்க்கை நடத்தணும் - சொற்ப
வருமானம் வந்தாலும் அதிலும் மிச்சப் படுத்தணும் - வீண்
பெருமைக்காக ஆசைப்படுதல் பெரிய மடத்தனம் - புகை
பிடிக்கும் பழக்கம் குடிக்கும் பழக்கம் விடுத்தவன் எவனோ அவன்
நல்ல ஆண் மகன் - மிக நல்ல ஆண் மகன்.

*படம் : மேனகா (1955), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம்.*

சிக்கனமா வாழணும் சேர்த்து வைக்கப் பழகணும்
பக்குவமா குடும்பந்தன்னை அண்ணன் மாரே
பாதுகாக்கத் தெரியவேணும் அண்ணன் மாரே

சம்பளத்தை வாங்கிவீண் செலவு செய்யாதே!
தரித்திரத்தால் குடும்பந்தன்னைத் தவிக்க விடாதே!
அம்பலத்தில் மேடை போட்டுப் பொய்யைச் சொல்லாதே!
யாரையும் திட்டிப் பேசாதே! அதனால் லாபம் வராதே!

*படம் : முதலாளி (1957), பாடலாசிரியர் : கவி. கா.மு. ஷெரீப்*



ஆடவேணும் பாடவேணும் இன்பமாக - தினம்
ஆணும் பெண்ணும் கூட வேண்டும் கும்பலாக
பாடுபட்ட அலுப்புத் தீரும் ஆட்டம் ஆடினா - நல்ல
பசியுங்கூட பறந்துபோகும் பாட்டுப் பாடினா.

*படம் : பணம் பந்தியிலே (1961), பாடலாசிரியர் : கவி.கா.மு. ஷெரீப்*



## கிளவுன் சுந்தரம்

பக்கம் : 3

ஏழாம் நெம்பர் கைதி யாகி
கம்பளிச் சாக்கில் கண்துயில் கொண்டும்
மூட்டுப் பூச்சியின் வாட்டுக் கிரங்கியும்
தண்டங் கீரைச் சாறொரு போதும்
தவறா உணவில் காலங் கழிப்பதாய்
மறவா அன்பில் மகிழ்ந்து கூறுதும்
அறவோன் திருவடி ஆணை யாணையே!

*(நாரையைத் தூதுவிட்ட சத்தி முற்றப் புலவரின் செய்யுளை இது நினைவுறுத்துகிறது)*

நந்த வனத்திலோ ராண்டி - அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டுவந் தானொரு தோண்டி - மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி!

*நூல் : சித்தர் பாடல்கள், பாடல் : 4, நூலாசிரியர் : கடுவெளிச் சித்தர், பகுதி : ஆனந்தக் களிப்பு.*

மஞ்சாக் குப்பத்தில் ஓர் ஆண்டி
அஞ்சாறு விதமான களிமண்ணைத் தோண்டி
கஞ்சா சிமினி செய்தாண்டி - அதைத்
தஞ்சாவூர் ரோட்டிலே தம் அடிச்சாண்டி.

*படம் : அருமை மகள் அபிராமி (1959), பாடலாசிரியர் : கிளவுன் சுந்தரம், பாடியவர்கள் : பொன்னுசாமி மற்றும் குழுவினர், இசை : வி. தட்சிணாமூர்த்தி.*



ருக்மணி : தரு

கன்னத்திற் பற்குறிகள்
காணுவதென்ன விந்தையோ!
பன்னுவீ ரெந்தனுக்குப்
பக்ஷமுள்ள ப்ராணநாதா!

கிருஷ்ணன் - தரு

நந்தவனத்திற் சென்றுயான்
நறுமலர் பறித்ததனால்
அந்தமுள்ள முட்கொடிகள்
அறுத்ததுஎன் கன்னமதில்

*நூல் : ருக்மணி சத்தியபாமையின் மனதிற்கிசைந்த பாரிஜாத பு ஷ் ப ா பஹரண சரித்திரம் (1910), பக்கம் : 23, 24, நூலாசிரியர் : மதுரை மாநகரம் சுந்தர ஜெயவீர சூர தீர கவிராஜ கந்தசாமி பிள்ளை.*

*இரண்டாம் பெண் :*

மாம்பழத்தைப் போலிருக்கும்
பூங்குழலி உன்னுடைய
கன்னத்தில் காயமென்னடி - நீ அதன்
காரணத்தைச் சொல்லுவாயடி

*தலைவி :*

மாமலையோரம் மலர் கொய்யும் நேரம்
மதுவுண்டு கருவண்டு கடித்ததனாலே

*படம் : அன்னை மகள் அபிராமி (1959), பாடலாசிரியர் : கி ள வு ன் சுந்தரம், பாடியவர்கள் : ராணி, ரத்னமாலா குழுவினர், இசை : வி. தட்சணாமூர்த்தி.*



*ருக்மணி : தரு*

இன்பமுள்ள ப்ராணேஸா – வுன்
இருவிழி சிவந்ததென்ன
அன்புடனே யெந்தனுக்கு
அறிவிப்பீ ரித்ததியே.

*கிருஷ்ணன் - தரு*

நேற்றிரவு நித்திரையின்றி
நேரிழையான் விழித்திருந்தேன்
சாற்றும்புகழ் சரசியேநீ
சந்தேகப் படலாகுமோ.

*நூல் : ருக்மணி சத்திய பாமையின் மனதிற்கிசைந்த பாரி ஜாத புஷ்பாபஹரண சரித்திரம் (1910), பக்கம் : 24. நூலாசிரியர் : மதுரை மாநகரம் சுந்தர ஜெயவீர சூரதீர கவிராஜ கந்தசாமி பிள்ளை.*

*முதல் பெண் :*

மான் விழியும் மீன் விழியும்
வேல் விழியும் தோற்றிடும் உன்
கண் சிவந்து போனதென்னடி - நீ அதன்
காரணத்தைச் சொல்லுவாயடி.

தலைவி :

தேன் மொழியாரே வீண் மொழியேனோ
கண் இமையில் சிறு துரும்பு விழுந்ததனாலே

*படம் : அருமை மகள் அபிராமி (1959), பாடலாசிரியர் : கிளவுன் சுந்தரம், பாடியவர்கள் : ராணி, ரத்னமாலா மற்றும், குழுவினர், இசை : வி. தட்சிணாமூர்த்தி.*



ஆண் :

மாலைவெயில் டாலடிக்கும்
மாம்பழக் கன்ன நிறம்
மாறிச் சிவந்த தென்னாடி? ஏங்குருவிக்காரி
மர்மம் விளங்கச் சொல்லடி.

பெண் :

மாலையிட்ட மன்னவனே
காலையிலே உன்னுடைய
வாண்டுப்பயல் கடிச்சப்போட்டாண்டா - ஏங்குருவிக்காரா
தாண்டியே குதிக்க வேணாண்டா.

*படம் : முல்லை வனம் (1955), பாடலாசிரியர் : அ. மருதகாசி, பாடியவர்கள் : ஏ.பி. கோமளா, குருவாயூர், பொன்னம்மா, இசை : கே.வி. மகாதேவன்.*



## (கம்பதாசன்)

உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன....

*நூல் : ஔவையார் நல்வழி : பாடல் : 28 (1933), நூலாசிரியர் : ஔவையார், உரையாசிரியர் : நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார்.*

உண்டிட நாழி உடுத்திட நான்குமுழம்
ஒண்டிட சிறுகுடிலும் - எவர்க்கும்
உதவுதல் கடமையடி - ஞானப்பெண்ணே

*படம் : மணிமேகலை (1959), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசை : ஜி. ராமனாதன்.*



*இராகம் : செஞ்சுருட்டி* *தாளம் : ஏகம்*

**சுட்டும் விழிச்சுடர்தான் - கண்ணம்மா!**
**சூரிய சந்திரரோ?**
**வட்டக் கரிய விழி - கண்ணம்மா!**
**வானக் கருமை கொல்லோ?**

*நூல் : பாரதியார் பாடல்கள் (1922), பாடல் : 16, கண்ணன் பாட்டு, (கண்ணம்மா என் காதலி 1).*

**சுந்தர மோஹினியைக் கண்டது என் கண்கள்**
**சந்திர சூரியர் போலாம் தையல் இரு கண்கள்!**

*படம் : ஆராய்ச்சி மணி, அல்லது மனுநீதிச் சோழன், (1942), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : எஸ். பாலச்சந்திரன், இசை : ஸ்ரீனிவாசராவ் சிந்தே.*



**எண்ணெனப் படுவ தெண்ணுநற் கணிதம்**
**எழுத்தெனப் படுவ திலக்கிய மிலக்கணம்**
**எண்ணு மெழுத்துங் கண்ணென மொழிப.**

*நூல் : மெய்யறம் (1930) மூன்றாம் பதிப்பு, நூலாசிரியர் : வ.உ.சிதம்பரம் பிள்ளை, அதிகாரம் : 21. எண்ணெழுத்தறிதல், பக்கம்: 13, பாடல்கள் : 201, 202, 203.*

**எண்ணும் எழுத்தும் இரு கண்ணாகும்**
**ஏழைகள் வாழ்ந்திட இது தெய்வமாகும்.**

*படம் : வன சுந்தரி (1951), பாடலாசிரியர்: கம்பதாசன்.*



**வனஜ மலர்விழி வானுயிர் நாசி**
**வைபவ நெற்றி நிலவினை யேசி**
**பரிமள காந்தியும் கண்களைக் கூசி**
**விளங்குமிப் பெண்ணை யடைவதே ராசி.**

*நூல் : சீதா கல்யாணம் நாடகம் (1915), பக்கம் : 68, நூலாசிரியர் : டி. பக்தவத்ஸலம், பி.ஏ., எம்.பி.பி.எஸ்.,)*

**எண்ணங்கள் தாரகை போல்**
**எழிற்சுடர் வீசுதே**
**என் நெற்றி தனில் இன்று**
**நிலா வந்து பேசுதே**

*படம் : கண்கள் (1953), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : எம்.எல். வசந்தகுமாரி, இசை : எஸ்.வி. வெங்கட்ராமன், ஜி. ராமநாதன்.*

அன்னை மயமே அனைத்துயிரும் என்றிடலாம்
அன்னப் பெருமைதனை யாருரைப்பார் - அன்னமதே
ஆணுருவம் பெண்ணுருவம் ஆகிவிளை யாடுமிதைக்
காணுமதி யோருரைப்பார் காண்.

*நூல் : அன்னதான விளக்கம் (1918), நூலாசிரியர் : தே.அ. சாமி குப்புசாமி.*

பண்ணும் தானங்களில் பரமனைக் காண்பதற்கு
அன்ன தானமொன்றே பெரிதாம்
அன்புவழி யாகுமடி - ஞானப்பெண்ணே.

*படம் : மணிமேகலை (1959), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர்: சீர்காழி கோவிந்தராஜன், இசை : ஜி. ராமனாதன்.*



தானத்தில் முதலன்ன தானம் - இத்
தரணியில் நிகர்அதற் குண்டோ சமானம்

*நூல் : ஆண்டார்குப்பம் ஸ்ரீ, பாலசுப்பிரமணிய சுவாமிகள், மீது ஆனந்தக் களிப்பு (1904), நூலாசிரியர் : மயிலை வி. சுந்தர முதலியார் பக்கம் : 123.*

தீராத விளையாட்டுப் பிள்ளை - கண்ணன்
தெருவிலே பெண்களுக் கோயாத தொல்லை (தீராத)
தின்னப் பழங்கொண்டு தருவான் - பாதி
தின்கின்ற போதிலே தட்டிப் பறிப்பான்
என்னப்பன் என்னையன் என்றால் - அதனை
எச்சிற் படுத்திக் கடித்துக் கொடுப்பான் (தீராத)

*நூல் : பாரதியார் பாடல்கள், கண்ணன் பாட்டு 9.*

ராகம்: செஞ்சுருட்டி தாளம் : ஆதி

ஓயாத விளையாட்டுப் பிள்ளை - அவன்
உருட்டுக்கும் உண்டோ எல்லை - அவன்
திருட்டுக்கும் உண்டோ எல்லை (ஓயாத)

மாயாவி கோள் சொல்லும் சோரன்
வீண் கலகம் புரியும் வீரன் (ஓயாத)

*படம் : வேணுகானம் (1941), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : என்.சி. வசந்தகோகிலம், இசை : ஜி. கோவிந்தராஜுலு நாயுடு.*



மாயாஜாலன் கண்ணனடி - அவன்
ஓயாக் குறும்புக் காரனடி
தேன்போல் கனியே தினமும் கொண்டு வந்து தருவான்;
அதைத் தின்னும்போது தட்டிப் பறிப்பான்
விளையாட எங்களை அழைப்பான் கண்ணன்;
வேண்டாம் என பால் தயிர் மோர்
விற்றிட யாம் போகையிலே
ஒளிந்து நின்று கல்லை வீசித் தயிர்க்குடம்
உடைத்தே குலுங்கச் சிரித்திடுவானே.

*படம் : வேணுகானம் (1938), பாடலாசிரியர் : கம்பதாசன், இசை : ஜி. கோவிந்தராஜுலு நாயுடு.*



*இராகம் : இந்துஸ்தான் பியாக்*

*பல்லவி*

மாதரசே மயிலே மௌனம்
ஏனோ குயிலே ஆசை (மாத)

*அநுபல்லவி*

நீ தயவு புரிவாயே எந்தன்
நேரிழையே வருவாயே! ஆகா (மாத)

*நூல் : கொலம்பியா அண்டு ஒடியான், கிராம போன் பாடல் (1934), (இரண்டாம் பாகம்), பக்கம் : 5, பாடியவர் : எஸ்.ஜி. கிட்டப்பா.*



மாதரசே மயிலே
மௌன மாகுமோ குயிலே ! ஆஹா (மாத)
பேசிடும் நீ இளமானே ஆஹா (மாத)

*படம் : லைலா மஜ்னு (1950), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : டி.ஆர். மகாலிங்கம், இசை : எஸ்.வி. வெங்கட்ராமன்.*



*ராகம்: செஞ்சுருட்டி* *தாளம் : ஏகதாளம்*

சுட்டும் விழிச்சுடர்தான் - கண்ணம்மா!
சூரிய சந்திரரோ?
வட்டக் கரிய விழி - கண்ணம்மா
வானக் கருமை கொல்லோ?

*நூல்: பாரதியார் பாடல்கள் (1922), பகுதி :கண்ணம்மா என் காதலி -1 (16)*

*ராகம் : குந்தளவராளி* *தாளம் : ஆதி*

*சரணம்*

விளங்கும் தூய ஸர்ஜன ஸங்கம்
விடுத்தே கூடாதே துஷ்டர் ப்ரஸங்கம்
விளக்கில் விழும் பழமென்று மயங்கும்
விட்டிலாகாதே சஞ்சலமெங்கும்

*படம் : அசோக்குமார் (1941), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*

விளக்கைப் பழமென
எண்ணியே வீழ்ந்திடும்
விட்டிலது போலே ஏமாந்திடாதே
காதலை நம்பாதே நெஞ்சே

*படம் : இதய கீதம் (1950), பாடலாசிரியர்: கம்பதாசன், இசை : எஸ்.வி. வெங்கட்ராமன்.*



சந்திரனில் லாவானம் சற்சனரில் லாதவூர்
மந்திரியில் லாவாசல் மதகரியில் லாவெம்போர்
மக்களில்லாச் செல்வம் மதுரமில் லாதகவி
தக்க தளபதிகள் தானில்லா வெஞ்சேனை
தாழ்வுதரும் அல்லாது சாந்தவள மாகாது.

*நூல் : மனுநீதிகாதல் (1901), பக்கம் : 53 - 56 நூலாசிரியர் : ஆ றை மாநகர் தெய்வச்சிலையாப் பிள்ளை.*

சந்திரன் இல்லாமல் பல்லாயிரம் நட்சத்திரம்
இருந்தென்ன வானில்
எந்தன் ப்ராணேசனில்லாத ஸ்வயம்வரம்
சந்தையின் கூட்டமன்றோ.

*படம் : சாலிவாஹன் (1945), பாடலாசிரியர் : கம்பதாசன்.*



செந்தமிழ் நாடென்னும் போதினிலே - இன்பத்
தேன் வந்து பாயுதென் காதினிலே.

*நூல் : பாரதியார் பாடல்கள்*

யார் குரலிதுவோ செவி வழியே இன்பத்
தேன் வந்து பாயுதென் உளந்தனிலே.

*படம் : சாலிவாஹனன் (1945), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : டி.ஆர். ராஜகுமாரி.*



**காதல்! காதல்!! காதல்!!! காதல்!!!!**
**காதல் இல்லையேல் சாதலும் மேலே!!**

*நூல்: தமிழ் மகள் தந்த செய்தி அல்லது சிறையில் யான் கண்ட கனவு (1939), பக்கம் : 22, நூலாசிரியர் : குடியேற்றம் மு. அண்ணல் தங்கோ.*

*ராகம் : பாகேஸ்வரி - பம்பளாஸ்* *தாளம் : பீர்வலகு*

**காதலது போனால் சாத லாகும்**
**கதிரவன் போனால் இருளுண்டாகும்**

*படம் : ஆராய்ச்சிமணி அல்லது மனுநீதிச் சோழன் (1942), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : ஆர்.ஜி. நடராஜ சுந்தரம், இசை : ஸ்ரீனிவாசராவ் சிந்தே.*



தேனை மறந்திருக்கும் வண்டும் - ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்
வானை மறந்திருக்கும் பயிரும் - இந்த
வைய முழுதுமில்லை தோழி

*நூல் : பாரதியார் பாடல்கள் (1922), பகுதி : கண்ணன் பாட்டு 14.*

பூவை மறந்த வண்டு - கார்
புயலை மறந்த மின்னல்
பேடை மறந்த அன்றில் - இந்தப்
பாரில் கண்டதுண்டோ!

*படம் : வாஸவதத்தா (1946), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : ஆர். வசுந்தராதேவி, இசை : சி.ஆர். சுப்பராமன்.*



உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்
எண்பது கோடிக் கவலை இதற்கேன் பிரபு

*படம் : பக்த சேதா (1940), இயற்றிப் பாடியவர் : பாபநாசம் சிவன், இசை : வித்வான் வி.எஸ். பார்த்தசாரதி அய்யங்கார்.*

உண்டிட நாழி உடுத்திட நான்கு முழம்
ஒண்டிட சிறுகுழலும் - எவர்க்கும்
உதவுதல் கடமையடி - ஞானப்பெண்ணே!

*படம் : மணிமேகலை (1959), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசை : ஜி. இராமநாதன்.*



பல்லவி

**ஏழை செல்வன் ஜாதி பேதம்**
**இறைவனுக் கில்லையடா**
**ஏர் உழுவோனும் பொன்முடி அணிவோனும்**
**இறப்பது திண்ணமடா.**

*படம் : வேணுகானம் (1941), பாடலாசிரியர் : கம்பதாசன், பாடியவர் : வி.வி. சடகோபன்.*

*திரைப்படப் பாடல்களில் இவர் சிந்தனை வீச்சு!*

## வானத்தின் வாயில்!

**கண்கள் ஜோதி வான வாயில்**
**காணும் தேகம் தெய்வக் கோயில்!**

*படம் : மஹா மாயா (1944)*

## ஆடம்பரம் தேவையே!

**ஆடம்பரம் பாதி ஆள் பாதியே - இது**
**அனைவருக்கும் தெரிந்த சேதியே!**
**ஆள் தெரியாதவரும் தெரிந்தவர் போல் வந்து**
**அய்யா! வாரும் உட்காரும் என்றழைக்க - எந்நாளும்**
**ஆடையலங்காரம் வேணும்**

*படம் : வனசுந்தரி (1951)*

## சிந்தனையை விற்காதே!

**அறியும் தெய்வம் அன்னையும் தந்தை!**
**ஆயிரம் தந்தாலும் விற்காதே சிந்தை!**
**தன்னலம் இல்லாசேவை தந்திடும் மேன்மை!**
**சொன்னபடி செய்கையில் நடப்பது ஆண்மை!**

*படம் : கண்கள் (1953)*

## தானம் வாங்காதே!

**தொழில் செய்யாமலே வயிறு போற்றவே**
**படிதோறும் சென்று அலையாதே கைநீட்டியே**
**யாரோடும் வாங்காதே தானமாய் - பாரில்**
**வீறோடு தொழில் செய்வோம் மானமாய்!**

*படம் : தந்தை (1953)*

உழவனின் கண்ணீர் துளி
தங்கம் போன்ற கதிருக்குள்ளே
தரளம் போன்ற அரிசிதான்
அங்கம் தேய ஏரை உழுதோன்
அழுத கண்ணீர்த் துளிகள்தான்

*படம் : ஓடி விளையாடு பாப்பா (1959)*

பஞ்சம், பிணியில்லா நாடு...
பஞ்சமும் நோயுமிலாப் பரிவுள்ள நாட்டினிலே

வெஞ்சமர் இல்லையடி - உழைப்பினில்
விளங்கிடும் சாந்தியடி - ஞானப் பெண்ணே.

*படம் : மணிமேகலை (1959)*



## மாயவநாதன்

*பதிவுத் திருமணம்!*

ஒன்றுசொல்லி மற்றொன்றை மறைத்துச் செய்யும்
உலுத்தர்களின் எதிர்ப்புக்கிங் கஞ்சி டாமல்
இன்றைக்கே நீவிரும்பும் திரும ணஞ்செய்!
என்னைப்போல் எப்போதும் இன்பம் காண்பாய்!
என்றுசொல்லி என்அக்காள் வரைந்த அஞ்சல்
இதோஎன்றே அவனிடத்தில் தந்தாள், மாறன்
நன்றுபெண்ணே! நாளைக்கே திரும ணத்தை
நாம்பதிவு செய்திடுவோம் என்று சொன்னான்.

*பழனி. இளந்தத்தன், இதழ் : இலக்கியம், 15.7.1958*

எப்போது வச்சுக்கலாம் - அதை
எப்படி வச்சுக்கலாம் - திருமணம்
செப்புச் சிலையே சின்னக் குயிலே
சிங்காரி நம்ம திருமணத்தை (எப்போ)
பதிவு செய்வோமா? - அதையே
உறுதி செய்வோமா - வட
பழனிவேலன் தலைமையிலே நடத்திக் கொள்வோமா?

*படம் : பந்தபாசம்(1962), பாடலாசிரியர் : மாயவநாதன், பாடியவர் : சந்திரபாபு, இசை : விஸ்வநாதன் - ராமமூர்த்தி.*



ஆண் :

எனக்கொரு உதவி செய்

மடியினில் இடம்கொடு கண்ணே கண்ணே

பெண் :

திருமணம் பதிவுசெய் அதுவரை

பொறுத்திரு கண்ணா கண்ணா

*படம் : காலமடி காலம், பாடல் : வாலி, பாடியவர் : பாலசுப்ரமணியம், வாணி ஜெயராம், இசை : விஜயபாஸ்கர்.*



தறிபட்ட சந்தனக் கட்டைபழு தாயினும்
சார்மணம் பழுதாகுமோ?
தக்கபால் சுவறிடக் காய்ச்சினும் அதுகொண்டு
சாரமது ரம்குறையுமோ?
நிறைபட்ட கதிர்மணி அழுக்கடைந் தாலும்அதன்
நீள்குளம் மழுங்கிவிடுமோ?
நெருப்பிடை உருக்கினும் அடிக்கினும் தங்கத்தின்
நிறையுமாற் றுக்குறையுமோ?

*நூல் : அறப்பளீசுர சதகம், பாடல் : 23, நூலாசிரியர் : அம்பலவாணக் கவிராயர்.*

சுட்டதும் தங்கத்தின் நிறம் போமோ?
தொட்டதும் மலர்களின் மணம் போமோ?
கற்றவன் கலங்குதல் அழகாமோ?
சட்டமும் கற்பனைக் கதையாமோ?

*படம் : பந்தபாசம் (1962), பாடலாசிரியர் :மாயவநாதன், பாடியவர்கள் : டி.எம். சௌளந்தரராஜன், P.B. ஸ்ரீனிவாஸ், இசை : எம்.எஸ். விஸ்வநாதன், டி.ஆர். ராமமூர்த்தி.*



## துணிந்து விடு!

கவலைகள் கிடக்கட்டும் மறந்துவிடு
காரியம் நடக்கட்டும் துணிந்து விடு
எடுத்தவர் யாரோ? மறைத்தவர் யாரோ?
இருக்குது நீதி சிரித்துவிடு.

*பாடலாசிரியர் : மாயவநாதன், படம் : பந்தபாசம் (1962).*

நாளை என்பது கிடக்கட்டும்
நடக்கும் வரையில் நடக்கட்டும்
நடந்தது கனவாய் போகட்டும்
நடப்பது நனவாய் ஆகட்டும்

*படம் : நினைப்பதற்கு நேரமில்லை (1963), பாடலாசிரியர் : வாலி, பாடல் : 2, பாடியவர் : ஜமுனாராணி, இசை : கே.வி. மகாதேவன்.*



தமிழே சிறந்ததென உனதுநாமம் விளங்கச்
சாற்றும் அந்தப்பொருளை யாரறிவார் அம்மா (தமிழே)

அமிழ்தினிற் சிறந்தது ஆரியத் துயர்ந்தது
அகத்திய னார்சிவ னிடத்தினி லுணர்ந்தது
அடிசீர் மோனையெதுகை தொடைசேர் தளையின்வகை
யாகும் பாவினம் சந்தமா விரிந்தது, வண்ணத் (தமிழே)

*நூல் : பரமானந்தப் பத்திரஸக் கீர்த்தனை (1920), நூலாசிரியர்: தூத்துக்குடி டி.டி. சங்கரதாஸ் சுவாமிகள், பாடல் : 11, பக்கம் : 17.*



தமிழ் எங்கள் உயிரானது - காலச்
சுழலாலும் கனலாலும்
ஊழியாலும் நிலையான (தமிழ்)

படிப்போர்க்குப் பால் போன்றது - தன்னைப்
பகைப்போர்க்கு வேல் போன்றது - எங்கள்
தாயகத்தின் தன்மானக் கலைத்தேரில் சதிராடும் (தமிழ்)

*படம் : பூம்புகார் (1964) பாடலாசிரியர் : மாயவநாதன், பாடியவர் : பி. சுசீலா, இசையமைப்பாளர் : ஆர். சுதர்சனம்.*



நாளும் தேதியும் திங்களும் பார்த்து
ராசிப் பலன்க ளெலாம் பகுத்து
நீளும் தாரகை நன்றெனத் தீதென
நிமித்தம் கேட்பதார் ஞானப்பெண்ணே.

நாளும் தேதியும் நன்மைசெய் தாலினி
நாதனைக் கும்பிடக் காரியமென்?
நீளுஞ் சாத்திரக் குப்பையென் றெண்ணாத
நேர்மை என்னடி ஞானப்பெண்ணே.

எல்லா நாளையும் நல்ல நாளென
எமைப்ப டைத்தவன் செய்திருக்கப்
பொல்லா நாளென்றும் நல்ல நாளென்றும்
புகல்வ தாரடி ஞானப்பெண்ணே.

*நூல் : சாத்திரக் கும்மி(1919), பக்கம் : 5,6,7, நூலாசிரியர் : வேதநாயக சாத்திரியார்.*

நேரம் காலம் பார்த்தும் - அந்த
ராகு கேதைக் கேட்டும் - அண்ணே
வாழ்க்கை வாழ நினைத்தால் - உன்
வயது முடிஞ்சு போகும்.

*படம் : மறக்க முடியுமா? (1967), பாடல் : மாயவநாதன், பாடியவர் : ஏ.எல். ராகவன், இசையமைப்பாளர் : ராமமூர்த்தி.*



உடையோ கோவணம்
உணவோநீ ராகாரம்
கொடி செடி கோரை யெங்கட்
குகந்ததோ ராசனம்

*நூல் : சமூக சீர்திருத்த கீதம் (1932),நூலாசிரியர் : நாகை. பி. அம்மைநாதன்.*

வானும் நிலமும் வீடு
காற்றும் மழையும் உணவு
காலும் கையும் ஆடை
ஏழை வாழ்வு சிம்பிள்

*பாடம் : மறக்க முடியுமா?(1967), பாடலாசிரியர் : மாயவநாதன், பாடியவர் : ஏ.எல். ராகவன், இசையமைப்பாளர் : ராமமூர்த்தி.*



காயாத கானகத்தே நின்றுலாவும் நற்காரிகையே
மேயாத மான், புள்ளிமேவாதமான் - விழிமான் அந்தமான்
சாயாத கொம்பு இரண்டே இருந்தாலும் தலை நிமிர்ந்து
பாயாத மான் ஒன்று வந்ததுண்டோ உந்தன் பார்வையிலே.

*படம் : மிஸ் சுந்தரி (1937), பாடல் : கிருஷ்ணசாமி சிவன், இசையமைப்பாளர் : டிமிர் பர்ன் பட்டாச்சாரியா.*

காயாத கானகத்தே நின்றுலாவும் நற்காரிகையே
சாயாத கொம்புடனும் தத்தும் நடையுடனும்
மான் வந்ததா? மேயாத மான் வந்ததா
தமிழ் மான் வந்ததா?

*படம் : மகிழம்பூ (1969), பாடல் : மாயவனாதன், பாடியவர்கள் : எல்.ஆர். ஈஸ்வரி,ஏ.பி. கோமளா. இசை : டி.பி. ராமச்சந்திரன்.*



## கவிஞர் வாலி

**கோரிக்கை அற்றுக் கிடக்குதண்ணே இங்கு**
**வேரிற் பழுத்த பலா - மிகக்**
**கொடியதென் றெண்ணிடப் பட்டதண்ணே குளிர்**
**வடிகின்ற வட்ட நிலா!**

*நூல் : பாரதிதாசன் கவிதைகள் (1938), பக்கம் : 106, பகுதி : பெண்ணுலகு, பாடல் : 30, கைம்மைப் பழி.*

**திருவிழா திருவிழா**
**இளமையின் தலைமையில் ஒரு விழா**
**வேரினிலே நீ பழுத்த பலா**
**விழிகளிலே தேன் வழிந்த நிலா! இதோ**

*படம் : நாம் இருவர், பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : ஜெயச்சந்திரன், சசிரேகா, இசை : கங்கை அமரன்.*



**ஆணிப்பொன் மேனி அதில்கிடக்கும் நல்லொளியைக்**
**காணிக்கை வைத்தால் காப்பரசர் வாராரோ?**

*நூல் : பாரதிதாசன் கவிதைகள் (1938), பகுதி : புரட்சிக் கவி.*

**ஆணிப்பொன் மேனியை ஆசையில் அணைத்திட**
**காணிக்கை கொடுத்ததும் நேற்றல்லவோ!**
**பனிமல ரழகினில் மயங்கிட அருகினில்**
**வந்தால் இன்றே வா!**

*படம் : கலாட்டா கல்யாணம் (1968), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள்: டி.எம். சௌந்தரராஜன்,பி. சுசீலா, இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



**தமிழுக்கும் அமுதென்று பேர் - அந்தத்**
**தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்**
**தமிழுக்கு நில வென்று பேர் - இன்பத்**
**தமிழ் எங்கள் சமூகத்தின் விளைவுக்கு நீர்**
**தமிழுக்கு மணமென்று பேர் - இன்பத்**
**தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர்**
**தமிழுக்கு மதுவென்று பேர் - இன்பத்**
**தமிழ் எங்கள் உரிமைச் செம்பயிருக்கு வேர்** **(தமிழுக்கும்)**

*நூல் : பாரதிதாசன் கவிதைகள் (1938), பாடல் : 20, பக்கம் : 89.*

அவளுக்கும் தமிழென்று பேர் - என்றும்
அவள் எந்தன் உள்ளத்தில் அசைகின்ற தேர்
அவளுக்கு நிலவென்று பேர் - வண்ண
மலர் கொஞ்சம் குழல் அந்த முகிலுக்கு நேர்
அவளுக்கு குயிலென்று பேர் - அந்தக்
குயில் கொண்ட குரல் கண்டு கொண்டாடும் ஊர்
அவளுக்கு அன்பென்று பேர் - அந்த
அன்பென்ற பொருள் நல்ல பெண்மைக்கு வேர் (அவளுக்கும்)

*படம் : பஞ்சவர்ணக்கிளி (1965), பாடல்: வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : எம்.எஸ். விஸ்வநாதன் – இராமமூர்த்தி.*

✵

தங்கத்தால் பலகைவைத்துத் தரளமிட்ட தொட்டிலிலே
தங்குமணை மேற்படுத்துத் தாலாட்டுக் கேட்டாடு.
அம்மானார் தோள்மேலும் அத்தைமடி தன்மேலும்
விம்மாமல் வைகி விளையாட்டயராய் என் மகனே.

*நூல் : தாலாட்டுப் பாடல் (1903), நூலாசிரியர் : சாவகச்சேரி உபாத்தியாயர், ச. பொன்னம்பலப்பிள்ளை, பாடல் : 1, பக்கம் : 1.*

அத்தைமடி மெத்தையடி
ஆடி விளையாடம்மா
ஆடும் வரை ஆடிவிட்டு
அல்லி விழி மூடம்மா

*படம் : கற்பகம் (1963), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : பி.சுசீலா, இசையமைப்பாளர் : விஸ்வநாதன் - ராமமூர்த்தி.*

✵

வாழை மலர் போல பூமி முகம் பார்க்கும்
கோழை குணம் மாற்று தோழா....
நாளை உயிர் போகும் இன்று போனாலும்
கொள்கை நிறைவேற்று தோழா...

*படம் : தெய்வத்தாய் (1964), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : விஸ்வநாதன் - ராமமூர்த்தி.*

அல்லிப்பூ முல்லைப்பூ தாம ரைப்பூ
அத்தனையும் வானத்தை நோக்கிப் பூக்கும்
மெல்லிய நல்வாழைமட்டும் தலைகுனிந்து
வீதிமண்ணைப் பார்த்தபடி பூக்கும்!

நூல் : தேன்மழை (1965) நூலாசிரியர் : கவிஞர் சுரதா, பகுதி : இலக்கியக் கடிதங்கள் (வாழைப்பூ வேதாந்தம்), பக்கம் : 192.

வாழைப் பூபோல் தலை குனிந்திருந்தால்
கோழைகள் என்றே ஆகுமடா
நம்மை அடுத்தவன் ஒருவன் கெடுப்பதென்றால்
உயிர் சுமப்பதனால் என்ன லாபமடா.

படம் : பதிலுக்குப் பதில் (1972), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், கௌசல்யா, இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.



மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ
காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ
மானிலஞ் சுமக்க மாட்டேன் என்னுமோ?
கதிரோன் சிலரைக் காயேனென்னுமோ?

நூல் : கபிலர் அகவல்,பக்கம் : 18,19, நூலாசிரியர் : கபிலர்.

மண் குடிசை வாசலென்றால்
தென்றல் வர வெறுத்திடுமா?
மாலை நிலா ஏழையென்றால்
வெளிச்சந்தர மறுத்திடுமா?

படம் : படகோட்டி (1964), பாடலாசிரியர்: வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : விஸ்வநாதன் - ராமமூர்த்தி.



ஆலைப் பலாவாக்க லாமோ அருஞ்சுணங்கள்
வாலை நிமிர்க்க வசமாமோ – நீலநிறக்
காக்கைதனைப் பேசுவிக்க லாமோ, கருணையிலா
மூர்க்கனைச்சீ ராக்கலா மோ.

(க.து) ஆலமரத்தைப் பலாமரமாகச் செய்தல் கூடுமோ, அருமையாகிய நாயின் வாலை நிமிர்க்க வசப்படுமோ, கருமை நிறமுள்ள காக்கையைப் பேசுவித்தல் கூடுமோ, (மனதில்) இரக்கமில்லாத மூர்க்கனைச் சீர்ப்படுத்தல் கூடுமோ என்பதாம்.

நூல் : தனிப்பாடல் திரட்டு, பாடல்: பாபநாசம் சிவன், பாடல் : 60 , பக்கம் : 123.

சும்மா யிருங்கள் கண்ணனே
சுத்த அபத்தம் உரைத்தல் இவர் தொழில் (சும்மா)
நம்மால் முடியுமோ நாய் வால்தனை நிமிர்த்தல் - அந்
நாள்முதல் இவர் எண்ணம் முற்றும் ஒட்டகைக் கோணல் (சும்மா)

*படம் : பவளக்கொடி (1934), பாடல் : பாபநாசம் சிவன், பாடியவர் எஸ்.டி. சுப்புலட்சுமி.*



## வி.ஆர். கந்தசாமிப் பிள்ளை

தோட்டத்திலே பூப்பறிக்க
　　கூட்டமாக வாரும்
பாட்டுப்பாடிப் பலமலரைக்
　　கூட்டிக் கூட்டிச் சேரும்
மல்லிகையும் மருக்கொழுந்தும்
　　வாசமான ரோஜா
நல்ல நல்ல மருகுடனே
　　நலமாகப் பறிப்போம்
கிண்ணம்போல வண்ணமாகக்
　　கிளையிலுள்ள பூவை
கண்ணிகண்ணி யாகக்கட்டி
　　கழுத்திலேநாம் அணிவோம்.
அடுக்குமல்லி சாமந்தி
　　அரளிஇவை எல்லாம்
தொடுத்துடனே மாலையாகத்
　　தொங்கவிட்டுப் பார்ப்போம்.

*நூல் : சிறுவர் பாடல் திரட்டு (1925), நூலாசிரியர் : தேவநேயப் பாவணர், பக்கம் : 10, 7-ஆம் பாடம்.*

(கழுகுமலைக் குருவிக்குளம் என்ற வர்ண மெட்டு)

வனமதனில் பூவெடுப்போம் ஏ தோழியே
　　வந்துபல மாலை செண்டு
மனமகிழவே தொடுப்போம் ஏ தோழியே
　　மணமுடனே கூந்தல் வைப்போம்
மல்லிகையும் முல்லையதும் ஏ தோழியே
　　மணமுள்ள சண்பகமும்
நல்ல இருவாட்சியதும் ஏ தோழியே
　　நாமெடுத்துச் சூடுவமே.

*படம் : நளாயினி (1936), பாடல்: வி.ஆர். கந்தசாமி பிள்ளை, பாடியவர்: மிஸ். என்.எம். சுந்தராம்பாள்.*



இங்கு மாடு மேய்த்து வரும் மைந்தர்களே
எனதரும் பிறவியைக் கண்டீர்களா?
இடையிருலுடுத்துவது சாயச்சேலை
அவள் இடுகாதிலிருப்பது பொன்னின் ஓலை
அண்ணன் நானும் பார்க்க வெகு ஆவல் கொண்டு
என் பிறவியைக் காணாமல் மனமே நொந்து (இங்கு)

*படம் : நல்லதங்காள் (1935), பாடலாசிரியர் : பரம்பை சிவராமலிங்கம் பிள்ளை.*



தானன்னா பாட்டுப்பாடி ததிகளைதோம் போடும்படி
தையலே நான் பிரியலானேன் - ஜனக்கூட்டமதில்
தட்டு தடுமாறிடலானேன்
அவள் சாந்துப்பொட்டு வெச்சிருப்பாள்
சாயச் சேலை கட்டிருப்பாள்
காந்தாமணி போலிருப்பாள்
கண்ணில் மையை தீட்டிருப்பாள்
காலிலிட்ட பாதசரம்
கோலமணி பொற்சலங்கை
கலீர் கலீரென்ன நடப்பாள்
எந்தனையவள் காணாமல் பரிதவிப்பாள்.

*படம் : நளாயினி (1936), பாடல்: வி.ஆர். கந்தசாமி பிள்ளை, பாடியவர் : வி.எம். ஏழுமலை.*



## வில்லிபுத்தன்

பெண் : கொடியிலே கோணலிருக்கு எதுக்காக?-பூங்
கொடியிலே கோணலிருக்கு எதுக்காக?

ஆண் : பெண்கள் குணத்திலே நாணமிருக்கு அதுக்காக.

பெண் : நாணம் தானே பெண்களுக்கு நாணயம் - இந்த
நல்ல பண்பு கொண்ட பெண்கள் குடும்ப வாழ்வின்
ஆலயம்!

*பாடல் : வில்லிபுத்தன், படம் ; பெண் குலத்தின் பொன் விளக்கு (1959).*

கடவுள் படைக்கவில்லை - ஆண்கள்
கருதும் அடிமை இனமெனப் பெண்ணைக்
கடவுள் படைக்கவில்லை.
எடுத்ததற் கெல்லாம் தப்பெடுக்கும் ஆண்கள்

இஷ்டப்படி வாழ்வில் கஷ்டப்படுத்த பெண்ணைப்
கடவுள் படைக்கவில்லை.

*பாடலாசிரியர் : வில்லிபுத்தன், படம் : பெண் குலத்தின் பொன் விளக்கு (1959).*

காதலுக்கு வாத்தியாரு
சாயம்போன சாமியாரு
யாருக்காக வெந்தசோறு
ஆட்டமாடி பாடுறாரு.

*படம் : யாருக்குச் சொந்தம் (1963), பாடலாசிரியர் : வில்லிபுத்தன்.*



## சுயநலத்தின் தத்துவமே!

சுயநலத்தின் தத்துவமே தெய்வபக்தி - அதைத்
தூக்கியெறி நமக்குத்தேவை தேசபக்தி.. நாட்டில் (சுய)

பயமுறுத்தி உயிர்பறிக்கும் மதவாதம் - அதன்
பக்கபலம் தலைமை தாங்கும்சாதிமதம்... நாட்டில் (சுய)

சுயநலத்தார் எழுதிவைத்த தொடர்கதையில் - அவர்தம்
சொல்லைத்தாங்கி உருண்டுவரும் விடுகதையில்

கயமைதனை உருவாக்கும் கருங்குழியில் - மக்கள்
கருத்தினையே குருடாக்கும் சூழ்நிலையில், வளரும் (சுய)

மதத்தை வைத்து மக்களினம் அடிமையானது! - புது
மறுமலர்ச்சி பெரும்உலகம் மலடியானது!
விதியை வைத்து மதியைக் கொல்லும்
நிலைமையானது...மக்கள்
விட்டில் பூச்சிக் கூட்டம்போல வாழ நேர்ந்தது.

*நூலாசிரியர் : வில்லிபுத்தன், நூல் : உறவுக்கு மதிப்பளிப்போம்(1972),*

## நேரிசை வெண்பா

சொல்லெல்லாம் மாணிக்கம் தூய தமிழ்விளக்கம்
வில்லிபுத்தன் யென்றபெயர் விற்பனன் - கல்விநிறைப்
பண்பாளன் தென்னகத்துப் பாவலர்க்கும் நாவலற்கும்
கண்ணாம் யெழுதுங் கவி.

*நாடகப்புலவர் இசைக்கி முத்து வாத்தியார், மதுரை 23.2.1972.*

## மதுரை பாலசுந்தரக் கவி

சம்பங்கி யெண்ணையிதோ - தடவினேன்
சரசியென் ருக்மணியே
சந்தன சீப்பினால் சிந்தைமகிழ்ந்திதோ
சீவி சிக்கறுத்து சிமிழ்போற் கொண்டையிட்டு
நாரதர் தந்தபுஷ்பம் - பாரிஜாத
நன்மணம் வீசும்மலர்
தாரணியோர் புகழ் சரசி ருக்மணியுன்
சீரிலகுங் கூந்தற் கின்பாய் மணம்வீச
மலர் முடிக்கின்றேன் - மாதரசே
மலர் முடிக்கின்றேன்.

*நூல் : பாரிஜாத புஷ்பாபஹரண சரித்திரம் (1910), நூலாசிரியர் : மதுரை மாநகரம் சுந்தர ஜெயவீர சூரதீர கவிராஜ கந்தசாமிப் பிள்ளை, பக்கம் : 25, 26.*

நொண்டிச் சிந்து

செண்பகாதித் தயிலந்தொட்டு சிகையைச்
சிக்கெடுத்துப் பக்குவமாய் தக்கபடியே
சீவிஜடை பின்னிய பின்னே - புஷ்பம்
தேர்ந்தெடுத்து நான்தொடுத்து பாந்தமுடனே
வாசமிகுந்த மலரை - அழகுபெற
வைத்துடனே சூட்டிடுவேன் சித்தங்குளிர.

*படம் : சைரந்தரி (1939), பாடலாசிரியர் : மதுரை ரஞ்சித மோகனகவி, எம்.எஸ். பாலசுந்தரம் பிள்ளை, பாடியவர் : தென்னிந்தியா கோகிலகான ஸ்ரீமதி பி.எஸ். ரத்னாபாய்.*



பரமேஸ்வரி பராசக்தியே பாரத மாதா கண்பார்க் கலாகாதா
கைராட்டை சுற்றி நாட்டில் வெற்றி நாட்டிடுவோமே
புகழ் சாற்றிடுவோமே
நம் பாரட்டி ஔவை நூற்ற நூலை
பார்த்திடுவீரே தேசப்பழமையின் சீரே
பாரத சோதரிகாள் இனியாகிலும்
ஆதரவே பெறுவோம்
அடிமைத்தனம் நீங்கிடுவோம்.

*படம் : சைரந்தரி (1939), பாடலாசிரியர் : எம்.எஸ். பாலசுந்தரம் பிள்ளை (மதுரை ரஞ்சித மோகனகவி), பாடியவர் : என். பாகீரதி.*



வட்ட வட்டப் பாறையிலே
வரகரிசி தீட்டயிலே
மெட்டுக்காரக் குட்டி கண்ணே போட்டாளே
காசேத்துட்டேக் கேட்டாளே
வீட்டுக்கவ வந்து போக மாட்டாளே - போக மாட்டாளே.

*படம் : அல்லி அர்ஜுனா (1935), பாடல் : எம்.எஸ். பாலசுந்தர கவி,*



## வைரமுத்து

கன்னம் கன்னம் கன்னம் - சந்தனக்
கிண்ணம் கிண்ணம் கிண்ணம்.

*படம் : பூமாலை (1965), பாடலாசிரியர் : கலைஞர் மு. கருணாநிதி.*

இரண்டு கன்னம் சந்தனக் கிண்ணம்

*படம் : சிவப்பு மல்லி (1981), பாடலாசிரியர் : வைரமுத்து.*



கடலோட கடலுரச கடல்தண்ணீர் மீனுரச
உன்னோடு நான்உரச மானே - இந்த
உலகம் பொறுக்குதில்லை தேனே.

*நூல் : இன்பரசத் தெம்மாங்கு (1912), பக்கம் : 7, பாடல் : 64, நூலாசிரியர் : அ. சித்திரம் பிள்ளை.*

விழியில் விழுந்து இதயம் நுழைந்து
உயிரில் கலந்த உறவே
இரவும் பகலும் உரசிக் கொள்ளும்
அந்திப் பொழுதினில் வந்துவிடு
அலைகள் உரசும் கரையில் இருப்பேன்
உயிரைத் திருப்பித் தந்துவிடு.

*படம் : அலைகள் ஓய்வதில்லை (1981), பாடலாசிரியர் : வைரமுத்து, பாடியவர்கள் : இளையராஜா, சசிரேகா, இசை : இளையராஜா.*



வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல். *திருக்குறள் – 1261*

*அவர் பிரிந்து சென்ற நாள்களைச் சுவரின் கண் இழைத்தவற்றைத் தொட்டு எண்ணுதலால், என் விரல்கள் தேய்ந்தன; கண்களும் அவர் வரும் வழியைப் பார்த்து ஒளியிழந்து புல்லியவாயின.*

*திருக்குறள் எளிய உரை (1954) ஒற்றுமை ஆபீஸ் வெளியீடு.*

மாலை சூடும் தேதி எண்ணி
பத்து விரலும் தேயும்
இவ இழுத்து விடும் பெருமூச்சில்
ஈரச்சேலை காயும்.

*படம் : பாலைவனச்சோலை (1982), பாடலாசிரியர் : வைரமுத்து, பாடியவர் : மலேஷியா வாசுதேவன் – குழுவினர், இசை : சங்கர் – கணேஷ்.*



உலகமெனும் நாடக மேடையில்
நானொரு நடிகன்
உரிமையுடன் வாழ்ந்திடும் வாழ்க்கையில்
உங்களில் ஒருவன்.

*படம் : சிரித்து வாழ வேண்டும் (1974), பாடல் : புலமைப்பித்தன், பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், ஷேக் முகமது இசையமைப்பாளர் : எம்.எஸ். விஸ்வநாதன்.*

உலக வாழ்க்கை நடனம்
நீ ஒப்புக் கொண்ட பயணம் – அது
முடியும் போது தொடங்கும் – நீ
தொடங்கும் போது முடியும்.

*படம் : சலங்கை ஒலி (1983), பாடலாசிரியர் : வைரமுத்து.*



உன்னை நான் பார்க்கும்போது
மண்ணை நீ பார்க்கின்றாயே
விண்ணை நான் பார்க்கும் போது
என்னை நீ பார்க்கின்றாயே

*படம் : வாழ்க்கைப் படகு (1965), பாடலாசிரியர் : கண்ணதாசன் பாடியவர் : P.B. ஸ்ரீநிவாஸ்.*

நானோ கண் பார்த்தேன்
நீயோ மண் பார்த்தாய்
பேசவா பெண்ணே
நாள் பார்ப்போம் பின்னே. (நானோ)

*படம் : புதியவன் (1984), பாடலாசிரியர் : வைரமுத்து, பாடியவர் : கே.ஜே. ஜேசுதாஸ், இசையமைப்பாளர் : வி.எஸ். நரசிம்மன்.*



*தாய் :*

நெற்றியிலே வட்டமாய் நீலச்சாந் திட்டவளே
நெற்றிப்பொட் டெங்கேடி நிந்தனையா என்றனுக்கே?

மகள் :

ஆர்வ முடையநல் அம்மாவே, பொட்டுதனை
வேர்வை யழித்தாலும் மெல்லியல்என் குற்றமதோ?

*நூல் : மறுமலர்ச்சிக் கவிதைகள் (1946),பாடலின் தலைப்பு:காதற் குறி, நூலாசிரியர் : புதுவை ச. சிவப்பிரகாசம், பக்கம் : 37.*

நெத்தி வேர்வை நனஞ்சு
பொட்டு கொஞ்சம் அழியும்
குங்குமத்து செவப்பு வெக்கம் போல வழியும்!

*படம் : பூவிலங்கு (1984), பாடலாசிரியர் : வைரமுத்து, பாடியவர் : ஜேசுதாஸ், இசையமைப்பாளர் : இளையராஜா.*



வானத்தில் ஒரு கல் தொண்டையில் ஒரு கல்
நிலத்தில் ஒரு கல், நீரில் ஒரு கல்.

வானத்தில் ஒரு கல் - கருக்கல்
தொண்டையில் ஒரு கல் - விக்கல்

நிலத்தில் ஒரு கல் - வழுக்கல்
நீரில் ஒரு கல் - கலங்கல்.

*நூல் : விடுகதைப் புதையல்(1951), பக்கம் : 32, தொகுப்பாசிரியர் : தமிழ்ப்பண்டிதர் கே.ஜெ. வேதமுத்து.*

வானத்திலே ஒரு கல் என்ன கல்
பூமியிலே ஒரு கல் என்ன கல்

அரிசியிலே ஒரு கல் என்ன கல்?
வெத்திலையில ஒரு கல் என்ன கல்?

அட வெவரங் கெட்ட ஆளு இப்ப
வெடையைச் சொல்றேன் கேளு

வானத்திலே ஒரு கல் - கருக்கல்
பூமியிலே ஒரு கல் - வழுக்கல்

அரிசியிலே ஒரு கல் - புழுங்கல்
வெத்திலையிலே ஒரு கல் - அழுகல்

*படம் : அச்சமில்லை அச்சமில்லை (1984), பாடியவர்கள் : மலேஷியா வாசுதேவன்,எஸ். ஜானகி இசையமைப்பாளர் : வி.எஸ். நரசிம்மன்.*



சுதா : இது யாருடைய படம்?

மந் : இவள்தான்... முன்பு இந்நாட்டு இளவரசியாக இருந்த மங்கையர்க்கரசி. பாவம்! விபசாரியாகிவிட்டாள். அதற்காக மரண தண்டனை விதிக்கப்பட்டு மாண்டு மண்ணோடு மண்ணாகி விட்டாள்.

சுதா : நிஜமாகவே இறந்துவிட்டாளா?

மந் : ஆம்! நிச்சயமாகவே இறந்துவிட்டாள்.

சுதா : அதுதான் இல்லை. இவள் சாகவில்லை. இவளுக்கிருந்த மரணந்தான் செத்துவிட்டது. இவள் இன்னும் உயிரோடு தான் இருக்கிறாள்.

*நூல் : மங்கையர்க்கரசி வசனம் (1950), பக்கம் : 39, நூலாசிரியர் : கவிஞர் சுரதா.*

உதய கீதம் பாடுவேன்
உயிர்களில் பூத்தொடுப்பேன்
உலகமெல்லாம் மறந்து போகும்
மரணம் கூட இறந்து போகும் - குழந்தைக்காகவே

*படம் : உதய கீதம் (1985), பாடலாசிரியர் : வைரமுத்து, பாடியவர் : எஸ்.பி. பாலசுப்ரமணியன், இசையமைப்பாளர் : இளையராஜா.*



பாடறியேன் படிப்பறியேன்
பள்ளிக்கூடம் நானறியேன்

ஏடறியேன் எழுத்தறியேன்
எழுத்துவகை நானறியேன்.

ஏட்டிலே எழுதவில்லை
எழுதிநான் படிக்கவில்லை

வாயிலே வந்தபடி
வகையுடனே நான் படிப்பேன்.

*நூல் : நாட்டுப்புறப் பாடல்கள்*

பாடறியேன் படிப்பறியேன்
பள்ளிக்கூடம் நானறியேன்

ஏடறியேன் எழுத்தறியேன்
எழுத்துவகை நானறியேன்

ஏட்டில் எழுதவில்லை
எழுதி வச்சுப் பழக்கமில்லை

எலக்கணம் படிக்கவில்லை
தலக்கனமும் எனக்கு இல்லை.

அர்த்தத்தை விட்டுப்புட்டா
அதுக்கொரு பாவமில்லை

பழகின பாஷையில
படிப்பது பாவமில்லை.

*படம் : சிந்து பைரவி (1985), பாடல் : வைரமுத்து, பாடியவர் : சித்ரா, இசையமைப்பாளர் : இளையராஜா.*



வழக்குரைப்பீரே - வலுத்தவர்நீரே
உழக்குக்குள் கிழக்குமேற் - கோ நகைப்பாரே.

*நூல் : திருவிளையாடற் கீர்த்தனை (1854), பக்கம் : 283, நூலாசிரியர் : மழவாபுரி சுப்பிரமணிய ஐயர்.*

கற்றுத் தருவேன் ஒரு முத்த ஒத்திகை
முத்தம் முழுதும் என் மொத்தக் குத்தகை
எவரும் வரலாம் எதற்கு வழக்கு
உழக்கில் எதற்கு கிழக்கு மேற்கு.

*படம் : வேஷம் (1986), பாடல் : வைரமுத்து,பாடியவர் : ஜெயச்சந்திரன், இசையமைப்பாளர் : சங்கர் - கணேஷ்.*



முன்னரே காணாள்; முனிதக்க மூப்புன;
பின்னரும் பீடழிக்கும் நோயுள. *நாலடியார்*

பிறக்கின்ற போதே இறக்கின்ற தேதி
இருக்கின்றதென்பது மெய்தானே!

*படம் : நீங்கள் கேட்டவை , பாடல்: வைரமுத்து ,பாடியவர் : கே.ஜே. ஜேசுதாஸ், இசையமைப்பாளர் : இளையராஜா.*



கண்ணா நின்திவ்ய தெரிசனம் தரலாகாதா எந்தன்
உலகை மறந்திரு கண்ணீர் பொழியவும்
பாகா யுருகினேன் நெஞ்சம் (திவ்)

*படம் : சிந்தாமணி(1938), பாடல் : பாபனாசம் சிவன், பாடியவர், : கே. அஸ்வத்தம்மா.*

தரிசனம் கிடைக்காதா – என்மேல்
கரிசனம் கிடையாதா?
விழிகளில் வழிகிற துளிகளில் இவள்மனம்
தினம் தினம் கரையிற வரையிலும் கண்ணா (தரிசனம்)

*படம் : அலைகள் ஓய்வதில்லை, பாடல்: வைரமுத்து, பாடியவர் எஸ். ஜானகி, இசையமைப்பாளர் : இளையராஜா.*



காலம் வெகு சீலம் - இவ்வசந்தம்
காதலர்க் கனுகூலம்.
வாலிப மாரன் வருகையின் தீரம்
வந்தே புகல் சாரம் - இந்நேரம்
வந்தே புகல் சாரம்

லாலிதம் பாடி நறுமலர் சூடி
ரசிப்பாய் மனங்கூடிக் - கொண்டாடி
ரசிப்பாய் மனங்கூடி
ரஞ்சித மடமானே – அன்பான
ரகசிய மிது தானே.

*படம் : தேவதாஸ் (1937), பாடலாசிரியர் : மதுர பாஸ்கரதாஸ், பாடியவர் : எம்.எல். ராஜாம்மாள்.*



வந்தது வசந்த காலம்
பூமியில் புதிய கோலம்
சந்தன மரங்கள் தோறும்
மன்மதக் குயில்கள் பாடும்
இளமையே எழு! அழுகையே தொழு!
ஒரு காதல் சங்கீதம் பாடு.

*படம் : புதியவன், பாடலாசிரியர் : வைரமுத்து, பாடியவர் : எஸ்.பி. பாலசுப்ரமணியம், இசையமைப்பாளர் : வி.எஸ். நரசிம்மன்.*



கைவலிக்குது கைவலிக்குது மாமா – ஒரு
கைபிடிக்கணும் அம்மி அரைக்கணும் மாமா!
நான் இழுத்தரைக்கிற போது கை பழுத்திருக்குது பாரு
நீ அழுத்தமான ஆளு – என்
கழுத்தறுப்பது ஏன்ய்யா

ஆளானாலும் ஆளு - இவ
அழுத்தமான ஆளு
மிச்ச வெவரம் வேணுமின்னா
மச்சானைப் போயி கேளு.. கேளு..

*படம் : பாலைவனச்சோலை, பாடல் : வைரமுத்து, பாடியவர்கள் : மலேஷியா வாசுதேவன் – குழுவினர், இசையமைப்பாளர் : சங்கர் கணேஷ்.*



யோவ் குருவிக்கார மச்சானே ஏ... ஏ... நம்மை
கடவுள் சேத்து வைச்சானே
கோழி கூவும் வரையிலே - நம்ம
கொண்டாட்டந்தான் அறையிலே.

*படம் : நவரத்தினம் (1977), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : பாலமுரளி கிருஷ்ணா, வாணி ஜெயராம், இசை : குன்னக்குடி வைத்தியநாதன்.*

சேவல் அது கூவும் வரை
நாணம் ஓய்வு காணுமே.

*படம் : தாவணிக் கனவுகள், பாடல் : வைரமுத்து, பாடியவர்கள் : எஸ்.பி. பாலசுப்பிரமணியம், ஜானகி.*



என் - கண்ணனுக் கெத்தனை கோவிலோ?
காவலில் எத்தனை தெய்வமோ?
மன்னனுக் கெத்தனை உள்ளமோ?
மனதில் எத்தனை வெள்ளமோ?

*படம் : வேட்டைக்காரன் (1964), பாடலாசிரியர் : கண்ணதாசன்.*

பருவத்தில் எத்தனை ஆசைகளோ
பயணத்தில் எத்தனை பாதைகளோ?
பாதைகள் மட்டுமே நம் வசத்தில்
பயணங்கள் எல்லாம் யார் வசத்தில்?

*படம் : பெருமை, பாடலாசிரியர் : வைரமுத்து, பாடியவர் : வைர முத்து, இசை : சங்கர் - கணேஷ்.*



அவன் தோட்டத்தில் எத்தனை மான்களோ?
அவன் தோள்களில் எத்தனைக் கிளிகளோ?

அவன் பாட்டுக்கு எத்தனை ராகமோ?
அவன் பார்வையில் எத்தனைப் பாவமோ?

*படம் : வேட்டைக்காரன் (1964), பாடலாசிரியர் : கண்ணதாசன், பாடியவர் : பி. சுசீலா, இசை : கே.வி. மஹாதேவன்.*



வாளகண்டஞ் செல்லும் வரிக்குயிலைத் தணவாத தூதனுப்பிற்
காளகண்ட நல்வசனங் காட்டுமோ - தாளமலர்
ஏற்கு மதுகரத்தை யேவின் மதுபானி
நாக்குக் குழறுமே நவ்வியே - மூக்கிலே
கோபத்தைக் காட்டுமொரு கொண்டைமயில் போய்க்க
லாபத்தைக் காட்டுமில்லை லாபமே - சோபத்தால்
அன்னத்தைத் தூதுவிட்டால் அவ்வன்னம் பாலுக்கும்
பின்னத்தைக் காட்டுமிதம் பேசாதே - சொன்னத்தைச்
சொல்லுமே யல்லாமற் றோன்ற விரித்துரைத்து
வல்லமையாய்க் கிள்ளைசொல்ல மாட்டாதே - மெல்லவே
எத்திசையுஞ் செல்லு மிளம்பூவை தூது சென்றால்
கத்திகை வாங்கக் கலங்குமே - மெத்தவே
மேகங் கடுங்குரலாய் விள்ளுமல்லா னின்போலப்
பாகமுட னின்சொற் பகராதே - மோகமிஞ்சிக்
கண்டுயிலும் வேளையினிற் கண்டவநி ருத்தனைக்
கொண்டுவந்த பாங்கியென்பாற் கூடுமோ - தண்டாத
என்னெஞ்ச மாங்கவன்பா லெய்தி யெனைமறந்து
வன்னெஞ்ச மாயிருந்தால் வாயுண்டோ - தென்மலையத்
தென்றலைத் தூதுவிட்டாற் றென்றல் சலனகுணம்
மன்றலணி வாங்குமிங்கு வாராதே - துன்று
கலையே மணிமே கலையே தவிர்ந்தேன்
அலையேய் துரும்பா யலைந்தேன் - மலையாமற்
காக்கும் பிணையேவன் காமக் கடற்கரையிற்
சேர்க்கும் பிணையே செழுங்கலையே - ஆர்க்குமிகும்
ஆசைதந்தோன் பேருமவ னோடு மவனூரும்
மாசில் புகழும் வழுத்தக்கேள்.

*நூல் : மான் விடு தூது (1956), பக்கம் : 6, 7, நூலாசிரியர் : மிதிலைப் பட்டிக் குழந்தைக் கவிராயர்.*

மேகத்தைத் தூது விட்டா
தெசமாறிப் போகுமோன்னு

தாகமுள்ள மச்சானே
தண்ணியைநான் தூதுவிட்டேன்.

*படம் : அச்சமில்லை அச்சமில்லை, பாடலாசிரியர் : வைரமுத்து, பாடியவர்கள் : மலேசியா வாசுதேவன், பி.சுசீலா, இசை : வி.எஸ். நரசிம்மன்.*



செம்பவழம்போலு மதரத்துள்ளே
சின்னப்பல்லொளி நிலாவெரிக்க...

*நூல் : ஸ்ரீ அனந்த பத்மநாபர் ஸ்தோத்திரப் பாடல் (1905), நூலாசிரியர் : ஸ்ரீவாங்கள்.*

கோலம் போடும் நாணங்கள் காதை ஜாலம்
இதழ்களிலே பௌர்ணமி வெளிச்சம்.

*படம் : பயணங்கள் முடிவதில்லை, பாடலாசிரியர் : வைரமுத்து, பாடியவர் : எஸ்.பி. பாலசுப்ரமணியம், இசை : இளையராஜா.*



மானே யுனையடைய நான்
என்ன தவம் செய்தேன்
சுந்தர மனோகரி

*படம் : அம்பிகாபதி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன். பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*

என்ன தவம் செய்தேன்
உன்னை மணந்துகொள்ள
வண்ண மலர் தூவி
வாழ்த்துக்கள் சொல்ல.

*படம் : அதிர்ஷ்டம் அழைக்கிறது, (1976), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன்*



பாண்டியன் நீ இருக்க - எனக்கொரு
பயலும் வேண்டுமா? - சின்ன சின்னப்
பயலும் வேண்டுமா? - மச்சான்
பக்கத்திலிருக்க மற்றொருவர் முகம்
பார்க்கத் தூண்டுமா?

*படம் : ஹரிச்சந்திரா (1935), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர்கள் : மிஸ்டர் எத்திராஜுலு நாயுடு, மிஸ். திருக்கண்ணமணி*

நீயிருக்கே பொண்ணு, அடி வேறெதுக்கு ஒண்ணு
மீனிருக்கும் கண்ணு, என்னை மயக்குதடி நின்னு!

*படம் : அன்று சிந்திய ரத்தம் (1977), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : வி. குமார்*



எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்கு மொன்றாய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூடரெல்லாங்
கட்டிச் சுருட்டித்தங் கக்கத்தில் வைப்பார்; கருத்தில் வையார்;
பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே!

*நூல் : பட்டினத்தார் பாடல்கள் (30), நூலாசிரியர் : பட்டினத்தார்.*

எட்டுத் திசையும் பதினாறு கோணமும்
ஏழு கடலும் கட்டியரசாள வந்தவளே
நாட்டுக்கு நாடு மட்டும்
நாம ரெண்டும் ஜோடி மட்டும்
ஜோடியாக போனோம்னா
கோடி ஜனம் கையைத் தட்டும்!

*படம் : பாலாபிஷேகம் (1977), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : எஸ்.சி. கிருஷ்ணன், டி.கே. கலா, இசை : சங்கர் - கணேஷ்.*



உண்ட பிறகேமகிழ்வு உண்டாக்கும் கள்ளுணவு
கண்டவுடனே மகிழ்வு தங்க ரத்தினமே
காமமெனும் கள்ளுதவும் பொன்னு ரத்தினமே.

*நூல் : கலப்புமணக் காதலர், தெம்பாங்கு (1946), பக்கம் : 2, நூலாசிரியர் : திண்டுக்கல் எம்.ஆர். மத்திரன்.*

தையல் முகம் - இனிக்கலாம்
கள்ளில் போதை உண்டால் வரும்
பெண்ணில் போதை கண்டால் வரும்
இந்தா பொன்முத்தம்.

*படம் : மாங்குடி மைனர் (1978), பாடலாசிரியர் : வாலி.*



உலகே மாயம் வாழ்வே மாயம்
நிலை ஏது, நாம் காணும் சுகமே மாயம்.

*படம் : தேவதாஸ் (1948), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம்.*

வாழ்வே மாயம் இந்த வாழ்வே மாயம்
தரைமீது காணும் யாவும்
தண்ணீரில் போடும் கோலம் நிலைக்காதம்மா

*படம் : வாழ்வே மாயம் (1982), பாடலாசிரியர் : வாலி.*



பெண் மனம் ஓர் நிலை நில்லாது- அந்த
மன்மத பாணம் பொல்லாது.

*படம் : கன்னியின் காதலி (1949), பாடலாசிரியர் : புதுக்கம்பன் பூமி பாலகதாஸ், பாடல் : 9, இசை : எம்.எஸ். சுப்பையா நாயுடு.*



இளம் ஆடவன் பார்வைகள் பொல்லாது
அதன் ஆசைகள் எல்லையில் நில்லாது.
அதுதான் பருவத்தின் துடிப்பு.

*படம் : நிஜங்கள் (1982), பாடல் : 1, பாடலாசிரியர் : வாலி.*



மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்பா - முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை அந்திப் பொழுது.

*நூல் : நளவெண்பா, நூலாசிரியர் : புகழேந்திப் புலவர், பாடல் : 99.*

மல்லிகையே வெண்சங்காய் வண்டினங்கள் ஊதும்
மெல்லிசையின் ஓசைபோல் மெல்லச் சிரித்தாள்.

*படம் : ஸ்ரீராகவேந்திரர் (1985), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : ஜேசுதாஸ், இசை : இளையராஜா.*



கதிர்மதி வதன மனோகர மாதிவள் காணையா!
வடிவினி லழகிய மதனனு மடலெழுதும் பாத்திரம்
மாதரெல்லோரும்
அடிதொழு தவரவர் புரிகுவர் சிலசில தோத்திரம்
அருந்தவர்க்குக்
கொடியிடை கனியித ழமுதினி லொருதுளி மாத்திரம்
கொண்டாலே போதும்
பழயினி லிதைவிட நினையுமோ பலபல சாத்திரம்.

நூல் : சீகாழி சில பிரபந்தங்கள் (1907), பகுதி : ஸ்ரீ சட்டைநாதர் சிந்து.
பாடியவர் : சீகாழி அருணாசலக் கவிராயர்,

பெண் : குக் கூக்கூ

ஆண் :ஆசை மேனி குக் கூக்குக்கூ
மேலும் கீழும் தித்தித்திடும்
மீண்டும் மீண்டும்...

ஆண் : தேவைப்படும்
பெண் :தேன் தரும் பாத்திரம்
நான் தொட மாத்திரம்

ஆண்: ஏனிந்த ஆத்திரம்
நான் தரும் நாள் வரும்.

படம் : தங்க மாமா, பாடலாசிரியர் : வாலி, இசை : இளையராஜா.



வெள்ளையப்பன் தானுங்க உள்ளபடி தெய்வங்க
வேறே ஒரு சாமிஇந்த பூமியிலே ஏதுங்க?

படம் : கற்கோட்டை (1954) , பாடலாசிரியர் : திருமதி ராஜேஸ்வரி.

காசேதான் கடவுளப்பா - அந்தக்
கடவுளுக்கும் இது தெரியுமப்பா
கைக்குக் கைமாறும் பணமே - உன்னைக்
கைப்பற்ற நினைக்குது மனமே.

படம் : சக்கரம், பாடலாசிரியர் : வாலி



ஆண்டவன் உலகத்தின் முதலாளி
அவனுக்கு நானொரு தொழிலாளி

படம் : தொழிலாளி (1964), பாடலாசிரியர்: ஆலங்குடி சோமு.

ஆண்டவன் உலகத்தின் முதலாளி
அவனிடம் ஏமாந்த தொழிலாளி
உண்மை இன்று தெரிந்த பின்னால்
நானும்தான் செய்வேன்.

படம் : நூற்றுக்கு நூறு, பாடல் : 4, பாடலாசிரியர் : வாலி.

அந்த நாள் முதற்கொண்டு இந்த நாள் வரைக்கும்
ஆக்டர்கள் பேருதானே பாப்புலராச்சு
அதிலேயும் சிலபேரு டாப்புல போச்சு!

செல்லப்பா - கிட்டப்பா சின்னப்பா - கண்ணப்பா
தியாகராஜ பாகவதரு
எம்.ஜி.ஆர் - எம்.ஆர்.ஆர்.
என்.எஸ்.கே. எத்தனை பேரு!

நடிகர் திலகம் - கமலஹாசன்
ராஜினிகாந்த் - ஸ்ரீகாந்து

விஜயகுமார் - ஜெய்கணேசு
சரத்பாபு - சுதாகரு - சந்திரபாபு - நாகேஷ்
சுருளிராஜன் - சோ - சோ - சோ - வரிசை
சொல்லிப்புட்டேன் சூஸு பண்ணு போ! போ! போ!

அந்த நாள் முதற்கொண்டு இந்த நாள் வரைக்கும்
அடியாள்ங்க பேருதானே பாப்புலராச்சு!
அதிலேயும் சில பேரு டாப்புல போச்சு!

ராஜலட்சுமி - ஜெயலட்சுமி
சுப்பு லட்சுமி - சந்தான லட்சுமி
வரலட்சுமி - ராஜகுமாரி
லலிதா பத்மினி - சௌக்கார் ஜானகி - ஜெயலலிதா
பானுமதி - பண்டரிபாய் - சரோஜா தேவி
ஸ்ரீப்ரியா - ஸ்ரீதேவி - ஸ்ரீ வித்யா - ஜெயசித்ரா
தீபா - ஷோபா - படாபட்டு! இத்தனையும் போதாது
இன்னும் ஒண்ணு வேணுமின்னா மனோரமா பேரு வச்சுக்கோ!
நம்ம மனோரமா பேரு வச்சுக்கோ!

*பாடலாசிரியர் : கண்ணதாசன், படம் : அவன் அவள் அது (1980).*

நானொரு சின்னப்பா தான்
நீயொரு கிட்டப்பாதான்
வந்தது சொந்தப் பாட்டுத்தான்
மெட்டு இஷ்டம் போல கட்டுங்கடா
கொட்டு இல்லாமலே கொட்டுங்கடா!

*படம் : தழுவாத கைகள், பாடலாசிரியர் : வாலி.*



ஆனா... ஆவன்னா அறிவை வளர்த்தவன் பேரென்ன? - சொல்லு!
வள்ளுவன்!

ஈனா ஈயன்னா எதையும் வெல்லும் பொருளென்ன?
அன்பு!

ஊனா ஊவன்னா உலக உத்தமன் பேரென்ன? - சொல்லு!
காந்தி தாத்தா!

*படம் : அன்பு எங்கே (1958), பாடலாசிரியர் : பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், பாடல்: 3, பாடியவர்கள் : ஜமுனாராணி மற்றும் குழுவினர், இசை : வேதா.*



மூனா இத்தன்னா தானா இம்மன்னா
வேண்டுமா...மா... மா
மு...த்...த...ம்
ஒன்னா ரெண்டா உனக்கும் எனக்கும் (மூனா)

உள்ளதைச் சொன்னா எத்தனை இருக்கும்
கண்ணால் பேசும் காதல் மயக்கம்
சொன்னால் தீருமா. (மூனா)

*படம் : வைராக்கியம், பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : எல்.ஆர். ஈஸ்வரி, இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.*



மனிதன் என்பவன் தெய்வமாகலாம்
வாரிவாரி வழங்கும்போது வள்ளலாகலாம்
வாழை போலத் தன்னைத் தந்து தியாகியாகலாம்
உருகியோடும் மெழுகைப்போல ஒளியை வீசலாம்
ஊருக்கென்று வாழ்ந்த நெஞ்சம் சிலைகளாகலாம்
உறவுக்கென்று விரிந்த உள்ளம் மலர்களாகலாம்
யாருக்கென்று அழுதபோதும் தலைவனாகலாம்.

*படம் : சுமை தாங்கி (1962), பாடலாசிரியர் : கண்ணதாசன்.*



கருணை யிருந்தால் வள்ளலாகலாம்
கடமை யிருந்தால் வீரனாகலாம்
பொறுமை யிருந்தால் மனிதனாகலாம்
மூன்றுமிருந்தால் தலைவனாகலாம்.

படம் : குடும்பத் தலைவன். ✻

*ராகம்:* இந்துஸ்தான் தோடி

மக்கிப்போன கட்டைவண்டி
மாடுரெண்டும் மிக்கச்சண்டி

சொக்கி சொக்கி ராப்பகலாய்
தூங்கி விழுந்து ஓட்டுரெண்டி

*படம் : தேவதாஸ் (1937), பாடலாசிரியர் : பாஸ்கரதாஸ், பாடியவர் : பெருமாள்சாமி.*

கட்டவண்டி கட்டவண்டி
காப்பாத்த வந்தவண்டி
நாலும் தெரிஞ்சவண்டி
நாகரீகம் அறிஞ்சவண்டி

*படம் : சகலகலா வல்லவன், பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : எஸ்.பி. பாலசுப்பிரமணியம் குழுவினர், இசை : இளையராஜா.*



ஆணிப்பொன் மேனி
அதில்கிடக்கும் நல்லொளியைக்
காணிக்கை நீவைத்தால்
காப்பரசர் வாராரோ?

*நூல் : புரட்சிக்கவி, நூலாசிரியர் : பாரதிதாசன்.*



ஆணிப்பொன் மேனியை
ஆசையில் அணைத்திட
காணிக்கை கொடுத்ததும்
நேற்றல்லவோ.

*படம் : கலாட்டா கல்யாணம், பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



கள்ளூறும் மலரென்ன பெண்ணானதோ?
கருநாவல் பழமென்ன கண்ணானதோ?
தள்ளாடித் தள்ளாடி நடைபோடுதோ?
தணியாத சுகமென்னும் தடைபோடுதோ?

*படம் : என் கடமை (1964), பாடலாசிரியர் : கண்ணதாசன், பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : விஸ்வநாதன் ராமமூர்த்தி.*

சந்திரோதயம் ஒரு பெண்ணானதோ?
செந்தாமரை இரு கண்ணானதோ?
பொன்னோவியம் என்று பேரானதோ?
என்வாசல் வழியாக வலம் வந்ததோ?

படம் : சந்திரோதயம் (1966), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : விஸ்வநாதன்



பச்சைப் புல்லில் படுக்கையிட்டுப்
பறித்த பூவில் மெத்தையிட்டு
இச்சை தீர நாமிருந்தால்
இரவும் பகலும் புரிவதில்லை.

படம் : தெய்வச் செயல் (1967), பாடலாசிரியர் : கண்ணதாசன், பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : திவாகர்.

பச்சைப் புல்லில் மெத்தையிட்டுப்
பக்கம் வந்து தத்தும் சிட்டு
அழைக்கையில் அணைக்கவா
அனைத்தையும் ரசிக்கவா.

படம் : அன்பு ரோஜா (1975), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : எஸ்.பி. பாலசுப்ரமணியம், பி. சுசீலா, இசை: சங்கர் - கணேஷ்.



ராகம் : புன்னாகவராளி தாளம் : ஆதி

மானே யுனையடைய
என்ன தவம் செய்தேன் சுந்தர மனோகரி
ஸ்வாமி நானுமையடைய
என்ன தவஞ்செய்தேன் சுந்தர மனோகரனே.

படம் : அம்பிகாபதி (1937), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர்கள் : எம்.கே. தியாகராஜ பாகவதர் ,எம்.ஆர்.சந்தான லட்சுமி, இசை: கே.வி. நாயுடு, டி.கே. ஜானகிராம், கே.சி. ராஜமய்யர்.

என்ன தவம் செய்தேன்
உன்னை மணம் கொள்ள
வண்ண மலர் தூவி
வாழ்த்துக்கள் சொல்ல

படம் : அதிரஷ்டம் அழைக்கிறது, (1976), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்திர ராஜன், பி. சுசீலா, இசை : குமார்.

பச்சைப் புல்லாலே கட்டிய மேடை
பள்ளிக்கு வாவென்று செய்கின்ற ஜாடை
ஒன்று விடாமல் கண்ட பின்னாலே
உள்ளத்தில் ஓடுது பொல்லாத வாடை.

படம் : எதிரிகள் ஜாக்கிரதை, பாடலாசிரியர் : கண்ணதாசன்.

பனிப்புல் மீது படுக்கை போட்டு
மணிப்பூங் கவிதை மனம்போல் தீட்டு.

*படம் : டாக்டர் சிவா (1975), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



மதுராவினாத மானார் உலக இன்பம்
மாயை யென்பது தப்புத்தானே - சுகம்
தோயப் பெற்றேன்நான் இப்பத்தானே.
ஓயா துடம்பில் சாம்பலைப் பூசி
வாயால் ஜெபித்ததும் தப்புத்தானே
மாபெருமானந்தம் இப்பத்தானே.

*படம் : மாயா மச்சீந்திரா (1939)*

ஆசையைத் தொறந்தது அப்பத்தாண்டி - நான்
ஆடையைத் தொறந்தது இப்பத்தாண்டி.

*படம் : ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு (1974), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள்: ராஜேஷ், மனோரமா, இசை : வி. குமார்.*



அடிசிற் கினியாளே அன்புடை யாளே
படிசொற் றவறாத பாவாய் - அடிவருடிப்
பின்தூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
என்தூங்கும் என்க ணிரா.

*நூல் : திருவள்ளுவ நாயனார் சரித்திரம் (1922), பக்கம் : 22*

வள்ளுவனின் வாசுகிபோல்
வசிஷ்டனுக்கு அருந்ததிபோல்
தொல்லுலகில் புகழ்விளங்க
தோகையர்க்குத் துணைபுரிக.

பின்னுறங்கி முன்விழித்துப்
பிள்ளைநலம் தனைக்காத்துக்
கொண்டவனின் மனம்அறிந்து
தொண்டுசெய்யும் மனம்தருக.

*படம் : ராதா (1973), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : பி. சுசீலா குழுவினர், இசை : சங்கர் - கணேஷ்.*



ஐயிரண்டு திங்களன்னை வயிறே சிறைச்சாலை
அணிபருவம் ஏழுக்கும் ஆசையே சிறைச்சாலை
வெய்யில்தரும் பகலுக்கு இரவே சிறைச்சாலை
விதிமுடிந்தால் இங்கே பிடிமண் சிறைச்சாலை

*படம் : மணிமேகலை (1959)*

அம்மாடி கல்யாணம்
ஆண்களுக்கோர் சிறைச்சாலை
பெண்டாட்டி பிள்ளைகள்
உண்டாகும் தொழிற்சாலை.

*படம் : சொல்லத்தான் நினைக்கிறேன், (1973), பாடலாசிரியர் : வாலி. பாடியவர்கள் : எஸ்.பி. பாலசுப்ரமணியம், எல்.ஆர். ஈஸ்வரி, இசை : எம். எஸ். விஸ்வநாதன்.*



செய்யும் தொழிலே தெய்வம் - அந்தத்
திறமைதான் நமது செல்வம்
கையும் காலுந்தான் உதவி - கொண்ட
கடமைதான் நமக்குப் பதவி.

*படம் : ஆளுக்கொரு வீடு (1960), பாடலாசிரியர் : பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம்.*

செய்யும் தொழிலே தெய்வமாக
நிலை நிறுத்தி உடல் வருத்தி
பஞ்சுக்குள் நூலை யெடுத்து
பட்டாடை தொடுத்து - தன்
மானத்தைக் காத்திருக்க
மண்ணுக்குள் வெட்டி முடித்து
பொன்கட்டி எடுத்து நம்
தேவைக்குச் சேர்த்திருக்க
வாழவைக்கும் கை - அது ஏழை மக்கள் கை!

*படம் : அன்னமிட்ட கை (1972), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்: டி.எம். சௌந்தரராஜன், இசை : கே.வி. மகாதேவன்.*



வில்லது வளைந்த தென்றும்
வேஷம துறங்கிற் றென்றும்,
வல்லியம் பதுங்கிற் றென்றும்,
வளர்கடா பிந்திற் றென்றும்,

புல்லர்தம் சொல்லுக் கஞ்சிப்
பொறுத்தனர் பெரியோர் என்றும்
நல்லதென் றிருக்க வேண்டா
நஞ்செனக் கருத லாமே.

*நூல் : விவேக சிந்தாமணி, பக்கம் : 69, 70, பாடல் : 1100*

வேங்கை பதுங்குவதும் வேழம்பின் வாங்குவதும்
பாங்காய் பகையுறவும் பாம்புசாய்ந் தாடுவதும்
நல்லோர் பெரியோர்கள் நயந்து வணங்குவதும்
மெல்ல விடச்சிரிப்பும் விழிமகிழும் மின்னொளியும்
மிக்கான வில்வளைவும் வேழம் உறங்குவதும்
உக்கிர தளஞ்சமரில் ஒன்னார்க் கொதுங்குவதும்
இத்தகையாம் ஈரைந்தும் எளிதாய் நினைக்கவொண்ணா.

*நூல் : மனுநீதி காதல் (1901), நூலாசிரியர் : தெய்வச் சிலையா பிள்ளை, பக்கம் : 32*

பதுங்கிய புலியும் வளைகின்ற வில்லும்
எதிரியைத் தாக்கும் குறிபார்த்து

*படம் : பதிலுக்குப் பதில் (1972), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், கௌசல்யா, இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.*



ராஜா மகள் ராணி – புது
ரோஜா மலர் மேனி – மிக
பேஷான ஒரு மாமி
வரப்போறாள் பாரு நீ

*பாடலாசிரியர் : உடுமலை நாராயணகவி, பாடியவர் : கே.ஆர். ராமசாமி இசை : சி.ஆர். சுப்பராமன், விஸ்வநாதன் ராமமூர்த்தி*



நான் ரோமாபுரி ராணி!
புது – ரோஜா மலர் மேனி!
நீ – வட்டமிடும் தேனி
என் – பக்கத்தில் வா நீ!

*படம் : சவாலுக்குச் சவால் (1972), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : எல்.ஆர். ஈஸ்வரி, இசை : சங்கர் கணேஷ்.*



உள்ளம் என்பது ஆமை - அதில்
உண்மை என்பது ஊமை
சொல்லில் வருவது பாதி - நெஞ்சில்
தூங்கிக் கிடப்பது மீதி.

*படம் : பார்த்தால் பசிதீரும் (1962), பாடலாசிரியர் : கண்ணதாசன், பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : விஸ்வநாதன் ராமமூர்த்தி.*

பாவம் ஓரிடம் பழிகள் ஓரிடம்
பலபேர் வாழ்க்கையில் நடக்கும்
உண்மை என்பது ஊமையாகவே
கொஞ்ச காலம்தான் இருக்கும்.

*படம் : இதய வீணை (1972), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன்,இசை : சங்கர் - கணேஷ்.*



தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை. *(திருக்குறள்)*

தாய்வழி வந்த நாணமும் மானமும்
தன்வழி கொண்டு நடப்பவளாம்
கோவிலில் இல்லை கும்பிடும் தெய்வம்
கொண்டவன் என்றே நினைப்பவளாம்.

*படம் : இதய வீணை (1972), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை: சங்கர் – கணேஷ்.*



***'வேலைக்காரி' திரைப்படத்தில் இடம் பெற்றுள்ள உரையாடல்.***

"கத்தியைத் தீட்டாதே
புத்தியைத் தீட்டு"

– பேரறிஞர் அண்ணா

கத்தியை நீ தீட்டி வைத்தால் காரியத்தில் வெற்றி இல்லை
புத்தியை நீ தீட்டி வைத்தால் - புகழ்சேரும் அட்டி இல்லை

*படம் : கந்தன் கருணை (1971), பாடலாசிரியர்: வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : எஸ்.வி. வெங்கட்ராமன்.*



பாடினான் ஒரு தமிழ்ப்பாட்டு
பரவசமடைந்தேன் நானதைக் கேட்டு.

*நூலாசிரியர் : கு.சா. கிருஷ்ணமூர்த்தி.*

பாடினாள் ஒரு பாட்டு
பால் நிலாவினில் நேற்று.
ஓடினேன் அதைக் கேட்டு
தேடினேன் வலை போட்டு.

*படம் : ஒரு தாய் மக்கள் (1971), பாடலாசிரியர் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், P.B. ஸ்ரீனிவாஸ்.*



திரை மறைவில் எத்தனையோ நடக்குது - அதைத்
தெரிஞ்சும் உலகம் வாயை மூடிக்கிடக்குது.
அரை குறைகள் வம்பளக்கத் துடிக்குது - அதனால்
ஆபத்துலே மாட்டிக்கிட்டு முழிக்குது.

*படம் : சாரங்கதரா (1958), பாடலாசிரியர் :அ.மருதகாசி, பாடியவர்கள் : எஸ்.சி. கிருஷ்ணன், ஏ.பி. கோமளா, இசை : ஜி. ராமநாதன்.*



மாடிவீட்டு மெத்தையிலே
எத்தனையோ நடக்குது
மானங்கெட்ட காரியத்தை
காசுபணம் மறைக்குது
ஏழைபடும் பாட்டுக்கெல்லாம்
காலம் ஒன்று இருக்குது
ஏச்சுப் பொழைக்கும் கூட்டத்தையே
கேள்வி கேட்கத் துடிக்குது!

*படம் : வைராக்கியம் (1970), பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், எல்.ஆர். ஈஸ்வரி, இசை : எஸ்.எம்.எஸ்.*



உங்களுக்கு வரப்போ தலகாணி
வாய்க்காலோ பஞ்சு மெத்தே - நாங்க
வாச்சுகிட்டோ எங்க கிட்டே
காட்டுவீங்க கொஞ்சும் வித்தே.

*படம் : காத்தவராயன் (1958), பாடல் : தஞ்சை ராமையாதாஸ், பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : ஜி. ராமநாதன்.*

வானம்தான் கூரைபோல
வையம் எங்கள் வீடாகும்
மானம்தான் ஆடைபோல
மக்கள் எங்கள் உறவாகும்.

*படம் : வைராக்கியம் (1970), பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.*



பாளையிலே பனஞ்சாறே - பனி
பதனி கூட்டிச் சேரே
தேனெடுத்ததிலே சேர்த்துவிடுவோம்
மாமதுவே சுகமாமே - மெய்
மறந்து பாடலாமே.

*படம் : கச்ச தேவயாணி (1941), பாடல் : பாபநாசம் ராஜகோபாலய்யர், இசை : வித்வான் வி.எஸ். பார்த்தசாரதி அய்யங்கார்.*

மதுவையெடுத்துக் கொஞ்சம் ஊற்று! அந்த
மயக்கத்திலே வரும் பாட்டு - மலர்
இதழைத் திறந்து கொஞ்சம் காட்டு! அந்த
இனிய சிரிப்பில் சுவை கூட்டு.

*படம் : வைராக்கியம் (1970) பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், எஸ்.பி. பாலசுப்பிரமணியம், இசை : எஸ்.எம்.எஸ்.*

எங்கே நீயோ நானும் அங்கே உன்னோடு
அதைத்தானே கொண்டு வந்தேன் என்னோடு
என் கண்ணோடு

*படம் : நெஞ்சிருக்கும் வரை (1967), பாடல் : கண்ணதாசன்,*

நீ எங்கே என் நினைவுகள் அங்கே
நீயொருநாள் வரும் வரையில்
நானிருப்பேன் நதிக்கரையில்

*படம் : மன்னிப்பு (1969), பாடல் : வாலி.*



மனம் கனிவான அந்தக் கன்னியைக் கண்டால்
கல்லும் கனியாகும்
முதல் முதலாக அவள் கைகள் விழுந்தால்
முள்ளும் மலராகும்.

*பாடல் : கண்ணதாசன், பாடியவர்கள் : டி.எம். எஸ், பி. சுசீலா.*

கள்ளில் உண்டாகும் போதை - இவள்
சொல்லில் உண்டாவதேனோ?

தொட்டால் உண்டாகும் இன்பம் - கண்கள்
பட்டால் உண்டாவதேனோ?
இவள் காலடி நிழல் படும்நேரம்
மலர் போலே முள்ளும் மாறும்.

*படம் : ஐந்து லட்சம் (1969), பாடல் : வாலி, பாடியவர் : டி.எம்.எஸ், இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.*



வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

***காற்றுத் தானும் இடை புகாவாறு சேரும் சேர்க்கையானது காதலைக் கொண்டுள்ள இருவர்க்கும் இன்பத்தைச் செய்யும்.***

*திருக்குறள் – 1008*

மெட்டியின் ஓசை கேட்காமல் வா
மெல்லிய கைவளை குலுங்காமல் வா!
தென்றலும் இடையில் நுழையாமல் வா!
ஒன்றுடன் ஒன்று பிரியாமல் வா.

*படம் : கன்னிப் பெண் (1969), பாடல் : வாலி, பாடியவர்கள் டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



ஆடைகட்டி வந்த நிலவோ - கண்ணில்
மேடைகட்டி ஆடும் எழிலோ - இவள்
ஆடைகட்டி வந்த நிலவோ!

*படம் : அமுதவல்லி (1959), பாடல் : பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம்*

கையசையக் காலசைய
கொடிபோல் நடைபயின்றாள்
கண் இரண்டில் மேடை கட்டி
நடம் புரிந்தாள் நகை புரிந்தாள்.

*படம் : எதிரொலி (1970), பாடல் : வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : கே.வி. மகாதேவன்.*



கண்ணன் பிறந்தான் எங்கள் கண்ணன் பிறந்தான் இந்தக்
காற்றதை யெட்டுத் திசையிலும் கூறிடும்
திண்ண முடையான் மணி வண்ணமுடையான் - உயர்
தேவர் தலைவன் புவிமிசைத் தோன்றினன்

பண்ணை யிசைப்பீர் - நெஞ்சிற் பண்ணை யொழிப்பீர் - இந்தப்
பாரினிலே துயர் நீங்கிடும் என்றிதை
எண்ணிடைக் கொள்வீர் - நன்கு கண்ணை விழிப்பீர் - இனி
ஏதுங் குறைவில்லை; வேதம் துணையுண்டு – (கண்ணன்)

*நூல் : பாரதியார் பாடல்கள் (1922), பகுதி : தெய்வப் பாடல், பாடல் : 48 (கண்ணன் பிறப்பு), பக்கம் : 131.*

கண்ணன் பிறந்தான் எங்கள்
கண்ணன் பிறந்தான் - புதுக்
கவிதைகள் பிறந்ததம்மா
மன்னன் பிறந்தான் - எங்கள்
மன்னன் பிறந்தான் - மனக்
கவலைகள் மறைந்ததம்மா.

*படம் : பெற்றால்தான் பிள்ளையா (1966), பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசையமைப்பாளர் : எம்.எஸ். விஸ்வநாதன்.*



*சதி :* கண்கள் சிவந்திருக்கக் காரணம் ஏதம்மா
கனிவாய் வெளுத்த தேதம்மா, கனநீதமா
கண்டேனே பேதம் உண்டுசொல் வாதம்
திண்டு மிண்டாக விண்டுசொல் லாதே (கண்கள்)

வள்ளியம்மை : கங்கையில் மூழ்கினதால் கண்சிவப் பாகுமே
கனிவாய் வெளுப்பதாகுமே மெய்யாகுமே
காணுவாய் வெய்யோய் தோணியே வெய்யல்
பூணுவ தாலே பாணியே மிகுந்த (கண்கள்)

*நூல் : மனமோகன வள்ளியம்மை பரதம் (1922) ; பக்கம் : 245; நூலாசிரியர் : முத்துலாபுரம் மதுரபாலகவி, வி.பி.எம். ராமசிங்கம் என்.ஆர்.*

இந்தக் கோவை இதழ்
வெளுத்திருக்கும் காரணம் என்ன?
உன் – பால் விழிகள் சிவந்திருக்கும்
காரியம் என்ன?

*படம் : தாலி பாக்கியம் (1966), பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : கே.வி. மகாதேவன்.*



வாழையடியிற்சுனை மூழ்கிப் புதுகணிந்து
மருவேர்சவ்வாது முல்லை மல்லிகை தனைச்சூடி

யேழையேன் மனத்துயர் தாழவோதியவிழ
யிருகண்கள் சிவப்பேற அதரமும் வெளுப்பெய்த
மதன்ரதி திருவிழா வதில்கரங்குவித்திட
மணிபணியிடையுடை துணையிலவெனயனை.

*நூல் : கௌரிவிலாசம் (1926), பக்கம் : 7, நூலாசிரியர் : மதுரகவி தியாகராசன்.*

பூவிழி சிவக்க செவ்விதழ் வெளுக்க
நூலிடை இளைக்க நாடகம் நடக்க
மாளிகை வெளியில் ஜானகி நின்றாள்
மாமணி மன்னன் ராமனைக் கண்டாள்.

*படம் : தேன்மழை (1966), பாடல் : வாலி, பாடியவர் : பி. சுசீலா இசையமைப்பாளர் : டி.கே. ராமமூர்த்தி.*



மெல்ல நட மெல்ல நட மேனி என்னாகும்
முல்லை மலர் பாதம் நோகும் - உந்தன்
சின்ன இடை வளைந்தாடும்
வண்ணச் சிங்காரம் குலைந்து விடும்.

*படம் : புதிய பறவை (1964), பாடல் : கண்ணதாசன்.*

மெல்லப் போ! மெல்லப் போ!
மெல்லிடை யாளே மெல்லப்போ!
சொல்லிப் போ! சொல்லிப் போ!
சொல்வதைக் கண்ணால் சொல்லிப் போ!
மல்லிகையே!

*படம் : காவல்காரன் (1967), பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



வாயிருந்தால் இந்த
வயதுவந்த புளியமரம்
சொல்லாதோ எந்தன்
துரைசொன்ன உறுதிமொழி

*நூல் : வாய்மொழி இலக்கியம் (1961), பக்கம் : 17, பாடல் : 12 பகுதி : பிரிவாற்றாமை.*

காற்றுக்குக் கண் கிடையாது!
நடப்பதெல்லாம் பார்ப்பதற்கு
கட்டிலுக்கு வாயுமில்லை!
கண்டதெல்லாம் சொல்வதற்கு!

*படம் : தங்கத்தம்பி (1967), பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : கே.வி. மகாதேவன்.*



நாக்குலே மூக்குலே, நத்துப் பிலாக்குலே
நல்லது கெட்டது, பேச்சுப் பிராக்குலே
உட்டா லகரி கும்தல கும்மா
தாத்தா கிடுகிடு, போட்டுக்க தாளம் - ரப்பு
பல் - வேலா வேலாயுதம் - உங்க
வீட்டுக்கு வருது காயிதம்.

*படம் : கூண்டுக்கிளி (1954), பாடல் : தஞ்சை ராமையாதாஸ், பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன் – வி.என். சுந்தரம் குழுவினர், இசையமைப்பாளர் : கே.வி. மகாதேவன்.*



நாக்குலே மூக்குலே நத்துப் புல்லாக்குலே
பேச்சுப் புராக்குலெ செவுத்து ஓரத்திலெ
இண்டுலெ இடுக்குலெ தாத்தாக் கிறுகிறு
டீள்ளா சீத்தா போட்டுக்க தாளம்
ரப்பே அட எங்கப்போ.

*படம் : பேசும் தெய்வம் (1967), பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, பீ. லீலா - கோரஸ், இசை : கே.வி. மகாதேவன்.*



அந்தியில் வானில் சந்திரன் வந்தால்
சிந்தையில் தீயாய் கொதிக்குது - உன்னை
கண்டதும் தோன்றும் ஆனந்தவெள்ளம்
தனிமைத் தீயே அணைக்குது.

*படம் : பாசமும் நேசமும் (1964), பாடல் : கண்ணதாசன், பாடியவர் : ஏ.எம். ராஜா, பி. சுசீலா, இசையமைப்பாளர் : வேதா.*

சூரியன் போன பின் - சந்திரன் வந்த பின்
சூடாக இருக்குது தேகம் - ரொம்ப
சூடாக இருக்குது தேகம் - அவன் மோகம் - இந்த
இளசுக்கும் இளசான புதுசுக்கும் புதுசான
மனசுக்குள் வந்தது வேகம் - என்
மனசுக்குள் வந்தது வேகம் - என்னவாகும்?

*படம் : பக்த பிரகலாதா (1967), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : பி. சுசீலா, இசையமைப்பாளர் : இராஜேஸ்வரராவ்.*



மல்லிகைப்பூ வாங்கிவந்தேன்
பெண்ணுக்குச் சூட - அதை
மண்மீது போட்டுவிட்டேன்
வெய்யிலில் வாட.

*படம் : பணக்கார குடும்பம் (1964), பாடலாசிரியர் : கண்ணதாசன், பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : விஸ்வநாதன் - ராமமூர்த்தி.*

மல்லிகைப்பூ வாங்கி வந்தேன்
புன்னகையின் நினைவாக
செண்பகத்தை வாங்கி வந்தேன்
அன்பே! நான் உனக்காக!

*படம் : பால்குடம் (1969), பாடல் : வாலி, பாடியவர்கள் : எஸ்.பி. பாலசுப்ரமணியம், பி. சுசீலா, சதன், இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



நான்முகன் நாமகள் வாகனமே வா
நடைபயிலா மெல அசைந்து நீ வாராய்
பாலுடன் சேர்ந்த தண்ணீரைப் பிரித்துண்ணும்
பறவைகள் மண்ணிலே காற்றிலாட - உயர்

*படம் : பவளக்கொடி (1934), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடல் : 43, பாடியவர் : கு.ஈ. சுப்புலட்சுமி.*

பாலும் நீரும் பிரித்து உண்ணும்
அன்னப் பறவை நான் - உன்
கண்ணிரண்டில் குடியிருக்கும்
வண்ணப்பறவை நான்.

*படம் : பால் குடம் (1969), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : பி. சுசீலா.*



மனம் கனிவான அந்தக் கன்னியைக் கண்டால்
கல்லும் கனியாகும்
முதல் முதலாக அவள் கைகள் விழுந்தால்
முள்ளும் மலராகும்

*படம் : இது சத்தியம், பாடலாசிரியர் : கண்ணதாசன், பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா.*

இவள் காலடி நிழல் படும் நேரம்
மலர் போலே முள்ளும் மாறும்!

*படம் : ஐந்து லட்சம் (1969), பாடலாசிரியர் : வாலி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசையமைப்பாளர் : எஸ்.எம்.எஸ்.*



அந்தியிலே சோலைமலர் தேடித் தேனை
அருந்தவரும் பொறிவண்டை விழியி ரண்டும்
சந்திக்கும் போதெல்லாம் தோப்பில் அன்று
சயனசுகம் கண்டோமே, அந்த எண்ணம்
வந்துவந்து நெஞ்சத்தில் மோது தத்தான்
வான்நிலவோ தீச்சொரிந்து வாட்டும் இங்கே
வந்திடுவீர்; நெஞ்சத்தில் குடியி ருப்பீர்!
வாடகையே தரவேண்டாம் பறந்து வாரீர்!

*இதழ் : இலக்கியம் (1-2-1959), சுவடி : 1, ஏடு : 16 – பக்கம் : 6, இயற்றியவர் : நன்னியூர் நாவரசன்.*

ஆண் : குமரிப் பெண்ணின் உள்ளத்திலே
குடியிருக்க நான் வரவேண்டும்
குடியிருக்க நான் வருவதென்றால்
வாடகை என்ன தரவேண்டும்?

*படம் : எங்க வீட்டுப் பிள்ளை (1965), பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன் – பி. சுசீலா, இசை : விஸ்வநாதன் - ராமமூர்த்தி.*



***உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்து (கருடன்) ஆகுமோ.***
***நூல் : கழகப் பழமொழி அகரவரிசை (1952), பக்கம் : 68, பழமொழி எண் : 2076.***

கூரைகள் எல்லாம் கூட வளர்ந்தால்
கோபுரம் ஆவதில்லை!
குருவிகள் எல்லாம் உயரப் பறந்தால்
பருந்துகள் ஆவதில்லை.

*படம் : ஆசைமுகம் (1965), பாடலாசிரியர்: வாலி, பாடியவர் டி.எம். சௌந்தரராஜன், இசை : எஸ்.எம். சுப்பையா நாயுடு.*



பொன்முடிபோற் சிறந்தவளே! பிரான்சு நாட்டின்
பூந்தோட்டம் போன்றவளே! பளிங்குப் பெண்ணே!
என்னைவிட மூத்தவள்நீ! எனினும் நல்ல
இளந்தளிரைப் போன்றவள்நீ! இன்பக் கேணி!

நின்றுநின்று மயக்கிவரும் மயில்நீ! ஈர
நிலவும்நீ! நித்திரைச்சத் திரமும் நீயே!
தின்பனவும் உண்பனவும், இரவில் தொட்டுத்
திறக்கின்ற புத்தகத்தின் தொகுப்பும் நீயே!

*நூல் : தேன்மழை (1965), நூலாசிரியர் : சுரதா, பகுதி : காவியக்கடிதங்கள், பக்கம் : 181.*

புத்தம் புதிய புத்தகமே - உன்னைப்
புரட்டிப் பார்க்கும் புலவன் நான்
பொதிகை வளர்ந்த செந்தமிழே - உன்னைப்
பாட்டில் வடிக்கும் கவிஞன் நான்.
பள்ளியறை என்னும் பள்ளியிலே இன்று
புதிதாய் வந்த மாணவி நான்
ஏட்டைப் புரட்டிப் பாட்டைப் படிக்கும்
வீட்டுப் புலவன் நாயகி நான்.

*படம் : பணம் படைத்தவன் (1965), பாடல் : வாலி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா*



***பல்லவி***

நானோர் பரதேசி - கால்கள்
நடக்க முடியவில்லை ஊர்காசி

ஏனோ எனையேசிப் பழிப்பார்
யாவருமே பலபல பேசி

*படம் : திருநீலகண்டர் (1939), பாடல் : பாபநாசம் சிவன், பாடியவர் : சிறுகளத்தூர் சாமா.*

காசிக்குப் போகும் சன்யாசி - உன்
குடும்பம் என்னாகும் நீ யோசி!
கங்கைக்குப் போகும் பரதேசி - நீ
நேற்று வரையிலும் சுகவாசி

*படம் : சந்திரோதயம் (1966), பாடல் : வாலி, பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசையமைப்பு : எம்.எஸ். விஸ்வநாதன்.*



## ஆலங்குடி சோமு

ஒருமுறைதான் வரும், கதை பல கூறும்
உல்லாச புதுமைகள் காட்டும் - இளமை
ஒய்யார வண்ணங்கள் பாடும் (ஒரு)

*படம் : மங்கையர்திலகம் (1955), பாடல் : கண்ணதாசன், பாடியவர்: ஜிக்கி, இசை : எஸ். தட்சிணாமூர்த்தி.*



ஒரு முறைதான் இந்த இளமை வரும்
மங்கை உறவினில்தான் இது முழுமை பெறும்

*படம் : வரவேற்பு (1972), பாடல் : ஆலங்குடி சோமு, பாடியவர் : எல்.ஆர். ஈஸ்வரி, இசை : சங்கர் - கணேஷ்.*



கல்லென் றுரைத்தாலும் உடைபடும் பலவேலை
கட்குமுலை யோகப்படும்
காட்டுமர மென்றுசொன் னாலுமது தச்சர்கைக்
கற்பனைக்கொத் துதவுமே
வல்லரும் பென்னினும் உருக்கவரு மேயெனது
மனதுபோற் கழனமலவே.

*நூல் : பஜனைக் கீர்த்தனங்கள் (1921), நூலாசிரியர் : பரம்பக்குடி பி.எஸ். சிவராமலிங்கம், பாடல் : 40, பக்கம் : 51.*

மாலை சாய்ந்து போனால் சிலையாகலாம்
மரம் சாய்ந்து போனால் விலையாகலாம்
மலர் சாய்ந்து போனால் சரமாகலாம் - இந்த
மனம் சாய்ந்து போனால் என்ன செய்யலாம்?

நடை மாறிப் போனால் கலையாகலாம்
விடை மாறிப் போனால் சரியாகலாம்
கடல் மாறிப் போனால் நிலமாகலாம் - காதல்
தடம் மாறிப் போனால் என்ன செய்யல்லாம்?

*படம் : கார்த்திகைத் தீபம் (1965), பாடல் : ஆலங்குடி சோமு, பாடியவர்: டி.எம். சௌந்தரராஜன், இசை : ஆர். சுதர்சனம்.*



மிரட்டிக்கொண் டிருந்த காளை
மாட்டினை விரைந்து நான்போய்

விரட்டிக்கொண் டிருந்தேன்; வந்தாள்.
விழிகளால் பிடித்தேன்! காதல்
திருட்டுக்குத் தேதி தந்தாள்;
சேல்விழி பாதி தந்தாள்;
இருட்டுக்குச் சேலை தந்தாள்;
இளமைக்கு வேலை தந்தாள்!

*நூல் : தேன்மழை (1965), நூலாசிரியர் : கவிஞர் சுரதா, பாடல் : இருட்டுக்குச் சேலை தந்தாள், பக்கம் : 151.*

பருவத்தின் அழகிய தோரணம்
பார்வையில் ஆயிரம் காரணம்
இருளுக்கு சேலை நான் தரலாம் – இந்த
இளமைக்கு வேலை நீ தரலாம்.

*படம் : வரவேற்பு (1972), பாடல் : ஆலங்குடி சோமு, பாடியவர் : எல்.ஆர். ஈஸ்வரி, இசையமைப்பாளர் : சங்கர் – கணேஷ்.*



ஊசியில் நின்றும் கானிடைத் திரிந்தும்
உயருறு மலைப்புழை புகுந்தும்
காசினி சுழன்றும் வானிடைப் பறந்தும்
கருத்திலாத் தவஞ்செய்தும் இளைப்பீர்
தேசிலாத் தவத்தால் பயனொன்று மில்லை
திருக்கறி மனோலய மடைய
மாசிலாக் கச்ச மங்கலத் தடைந்தே
மான்கயல் விழியடி தொழுமே.

*நூல் : கச்சமங்கலம் மீனாம்பிகை உயிர் வருக்க மாலை (1911), நூலாசிரியர் : சொ. சிங்காரவேலன் வன்னிய முண்டார் அம்பலகாரர். (கச்சமங்கலம் இயற்றமிழ்ச் சங்கத் தலைவர்)*

உடலினை வருத்தி மூச்சினையடக்கும்
தவத்தால் பயனில்லை
உயிர்களே வதைத்து ஓமங்கள் வளர்க்கும்
யாகங்கள் தேவையில்லை.

*படம் : பக்த பிரகலாதா (1967) பாடல் : ஆலங்குடி சோமு, பாடியவர்கள்: பி. சுசீலா, குழுவினர், இசையமைப்பாளர் : ராஜேஸ்வர ராவ்.*



நாய்வாலை அளவெடுத்துப் பெருக்கித் தீட்டி
நற்றமிழை எழுதஎழுத் தாணி யாமோ?

பேய்வாழும் சுடுகாட்டைப் பெருக்கித் தள்ளிப்
பெரியவிளக் கேற்றிவைத்தால் வீட தாமோ?

*நூல் : விவேக சிந்தாமணி, பாடல் : 14, பக்கம் : 10.*

நாய்வாலை நிமிர்த்தாலும் நல்ல
எழுத்தாணி ஆகாது - இந்த
நன்றி கெட்ட ஜென்மங்கள்
என்றென்றும் திருந்தாது.

*படம் : அத்தை மகள் (1969), பாடலாசிரியர் : ஆலங்குடி சோமு, பாடியவர்கள் : எல்.ஆர். ஈஸ்வரி, மாதுரி, இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமிங்கில்லை - சுரந்தமுதங்
கற்றா தரல்போற் கரவா தளிப்பரேல்
உற்றா ருலகத் தவர்.

*நூல் : நல்வழி, நூலாசிரியர் : ஔவையார், பாடல் : 29, பக்கம் : 23.*

மரம் பழுத்தால் பறவை யெல்லாம்
தேடி வரும் - இந்த
மனம் திறந்தால் உறவு வெள்ளம்
ஓடி வரும்.

*படம் : தெய்வீக உறவு (1968), பாடலாசிரியர் : ஆலங்குடி சோமு, பாடியவர் : பி. சுசீலா, இசையமைப்பாளர் : கே.வி. மகாதேவன்.*



## கவிஞர் பூவை. செங்குட்டுவன்

### கவலையைத் தீர்க்கும் கலை!

கவலையைத் தீர்ப்பது நாட்டியக் கலையே!
கணிகையர் கண்களே மதன்விடும் வலையே!
நவரசங்களிலும் சிருங்காரமே தலையே!
நளின நடையழகிற்(கு) ஈடெங்கும் இல்லையே!

*படம் : சிவகவி (1943), பாடியவர் : எம். கே. தியாகராஜ பாகவதர்.*

ஆயகலைகள் அறுபத்து நான்கினிலும்
அன்று முதல் இன்றுவரை
ஆடற்கலை சிறந்த கலையே
தூய ஒளிவீசும் தெய்வதிருச்சபையில்

பாவ ராக தாளமுடன்
தோன்றியதும் பரதக்கலையே.

*படம் : கண்காட்சி(1971), பாடல்: பூவை செங்குட்டுவன்.*



*இராகம் : கமாஸ்* *தாளம் : ஆதி*

காகந்தன்னைக் கறுப்பென்று சொல்லும்
காலில்லா முடவனைக் கண்டிக்கச் செல்லும்
ஆஸ்தான சந்தோஷிவந்து தோணினான்.
செத்தவன் பிணமென்று திறமாயறிந்து சொல்லும்
சீர்பெற்ற ஆஸ்தான சந்தோஷி வந்தான்
பாவற்காய் கசப்பென்று பாரிலறிந்து சொல்லும்
பார்புகழ் ஆஸ்தான சந்தோஷி வந்தான்.
நெல்லிலரிசியென்று நேராயறிந்து சொல்லும்
நேர்பெற்ற ஆஸ்தான சந்தோஷி வந்தான்.

*நூல் : ஜோதி நாடகம் (1874), நூலாசிரியர் : தண்டலம் தமிழ் உபாத்தியாயர் சுப்பராய முதலியார், பக்கம் : 11,12.*

சந்தேகம் இல்லை சந்தேகம் இல்லை
நமக்குச் சந்தேகம் இல்லை
காக்கா கறுப்பு - சந்தேகம் இல்லை
கடல் தண்ணி உப்பு - சந்தேகம் இல்லே
ஆண் பிள்ளைக்கு மீசை முளைக்கும் - சந்தேகம் இல்லை
அது கிடையாது பெண்பிள்ளைக்குச் சந்தேகம் இல்லை
அப்பன் கூடே பிறந்தவன் அத்தை சந்தேகம் இல்லை
அவளுக்கேதான் மீசை முளைத்தால் சித்தப்பன் சந்தேகம் இல்லை.

*படம் : மனோகரா (1954), பாடல் : கே.ஆர். செல்லமுத்து.*



## கலைஞர் கருணாநிதி

குடி உயரக் கோல் உயரும்
கோல் உயரக் கொடி உயரும்

*படம் : தூக்கு மேடை (1982), பாடல்: கலைஞர் மு. கருணாநிதி, பாடியவர் : மலேசியா வாசுதேவன், இசை : சங்கர் கணேஷ்.*



நீர் மேல் நடக்கலாம்
நெருப்பிலே படுக்கலாம்
நிலை தடுமாறினால்
நினைத்ததைப் பேசலாம்.

*படம் : காஞ்சித்தலைவன் (1963), பாடல் : கலைஞர் மு. கருணாநிதி, பாடியவர்கள் : ஏ.எல். ராகவன், எல்.ஆர். ஈஸ்வரி, இசையமைப்பாளர் : கே.வி. மகாதேவன்*



எதையும் தாங்கும் இதயம் வேண்டும்
பகையும் பழியும் பாம்பெனத் தீண்டும் - உலகில்
எதையும் தாங்கும் இதயம் வேண்டும்
சிறையா வதையா இன்னும் – (எதையும்)

*படம் : நாம் (1953), பாடல் : கலைஞர் மு. கருணாநிதி, பாடியவர் : சிதம்பரம் ஜெயராமன், இசை : சிதம்பரம் ஜெயராமன்.*



உலகம் சுத்துது எதனாலே? நம்ம
உடம்பு சுத்துது அதனாலே.
கலகம் வருவது எதனாலே?
கலயம் பொங்குது அதனாலே.
சொர்க்கம் தெரியுது எதனாலே?
மயக்கம் வருகுது அதனாலே.

*படம் : காஞ்சித் தலைவன் (1963), பாடல் : மு. கருணாநிதி, எம்.எல்.ஏ.*



வாலிபம் என்பது கலைகின்ற வேடம் - அதில்
வந்தது வரட்டும் என்பவன் முழுமூடம்
வருமுன் காப்பவன்தான் அறிவாளி
வந்தபின் தவிப்பவன்தான் ஏமாளி.

*படம் : பூம்புகார் (1964), பாடலாசிரியர் : மு. கருணாநிதி.*

வாலிப விருந்து வழங்குவேன் அருந்து
ஆயிரம் சாகசம் இருக்குது கைவசம்
வலிய வருகுது பறவை
வளர்க்கப் போகுது உறவை
நிலவு எரிக்கு நெருப்பாய்
நீயும் தழுவி அணைப்பாய்.

*படம் : பூமாலை (1965), பாடல் : மு. கருணாநிதி எம்.எல்.ஏ.,*

ஒண்ணா ரண்டா குருட்டுப் பழக்கம்
எல்லாம் ஒழியணும் - சொல்ற
ஒவ்வொண்ணுக்கும் கேள்வி போட்டு
பதிலெ தெரியணும் - தகுந்த
பதிலெ தெரியணும்.

*படம் : என் மகள் (1954), பாடல் : பாவலர் வேலாயுதசாமி, பாடியவர்: கே.எஸ். ராஜம், இசையமைப்பாளர் : ஜெ.என். பாண்டுரங்கம்.*



மழையில்லாச் சீமையிலே
மானம்பார்த்த பூமியிலே
மகராசா குடும்பம் மட்டும் வாழுது - நம்ப
மனுசரோடே வயிறெல்லாம் வாடுது.
மண்ணுலே பொளைக்க ஒரு வழியில்லே - அந்த
மணியகாரன் தொல்லை நமக்கு ஒழியல்லே.

*படம் : ஆனந்த ஆஸ்ரமம் (1939), பாடல் : டி.பி. வேலாயுதசாமி பாவலர்.*

வெற்றியை நாளை சரித்திரம் சொல்லும்
இப்படை தோற்கின் எப்படை வெல்லும்?
நீதிக்கு இது ஒரு போராட்டம்- இதை
நிச்சயம் உலகம் பாராட்டும்!

*படம் : உலகம் சுற்றும் வாலிபன், பாடல் : புலவர் வேதா (1973), பாடியவர் : சீர்காழி கோவிந்தராசன், இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



வா மச்சான் வா வண்ணாரப்பேட்டை
ஊத்திக்கிட்டேன் கேளேண்டா
என்னோட பாட்ட... ஆ... ஆ... ஆ...
வா பாளையம் வா பாளையம் வா பாளையம் (வா)

சிலுக்கோட கையாலே வாங்கிக்குடி - கண்ணு
ஜிவ்வுண்ணு ஏறிக்கும் தாங்கிப்புடி
சாராயம் சம்சாரம் சந்தோஷம்
ரோசாப்பு ரவிக்கைகாரி நீதாண்டி சிலுக்கு
ராசாவுக்கு உன்னைக் கண்டால்
ஏதோ போல இருக்கு!

*படம் : வண்டிச் சக்கரம் (1980), பாடல் : புலமைப்பித்தன், பாடியவர்கள் : பாலசுப்ரமணியம், வினு சக்ரவர்த்தி, இசை :சங்கர் — கணேஷ்.*



செய்யும் தொழிலே தெய்வம் - அந்தத்
திறமைதான் நமது செல்வம்
கையும் காலுந்தான் உதவி - கொண்ட
கடமைதான் நமக்குப் பதவி.

*பாடலாசிரியர் : பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், படம் : ஆளுக்கொரு வீடு (1960).*

நாளை நடப்பதை யாருமே அறியார்
வருவதை எதிர்த்து நிற்பதே நம் கடமை

*படம் : அம்மா (1952), பாடலாசிரியர் : சிதம்பரம் வரதராசன், இசையமைப்பாளர் : வி. தட்சணாமூர்த்தி.*



இல்லாதாரை படைத்தான் என்றொருவன்
இருந்தால் அழியட்டுமே
இல்லார்கள் உள்ளாரென்று - முத்தம்மா
ஏனிந்த வேற்றுமைகள்?

*படம் : பராசக்தி (1952), பாடல் : கு.மு. அண்ணல் தங்கோ, பாடியவர் : சி.எஸ். ஜெயராமன்.*

## முத்துலிங்கம்

*ராகம் : ஆனந்தபைரவி* *தாளம் : சாப்பு*

மாறாம லிருநிலத்தில் அறம்வளர்க்குங் கையே
மனைபார்த்தால் வளம்பெருகும் பிறர்வளர்க்குங் கையே
ஆறாத சனங்கள்பசி யாற்றுமிந்தக் கையே
அனங்கனையும் வணங்கிநித்தம் யேத்துமிந்தக் கையே
சீராகு நிலத்தோர்பசி தீர்க்குமிந்தக் கையே
சிவனடியார் நாளுமாசீர்வதிக்குங் கையே
அரும்பசியால் வருவோர்களை அழைக்குமிந்தக் கையே
தருமநெறி தவறாது தயைபுரியும் கையே

*நூல் : மார்க்கண்டேயர் நாடகம் (1926), நூலாசிரியர் : கும்பகோணம் நரசிம்ம அய்யர், பக்கம் : 39.*

இது நாட்டைக் காக்கும் கை - உன்
வீட்டைக் காக்கும் கை! இந்தக் கை
நாட்டின் நம்பிக்கை! எதிர்காலத் தாயகத்தின் வாழ்க்கை!
அன்புக்கை! இது ஆக்கும் கை - இது அழிக்கும் கையல்ல!
.....................................
.....................................
ஈகை காட்டும் கை - மக்கள் சேவை ஆற்றும் கை - முள்
காட்டைச் சாய்த்து தோட்டம் போட்டுப் பேரெடுக்கும் - கை
உண்மைக் கை! கவி தீட்டும்கை - கறை படிந்த கையல்ல
பெண்கள் தம் குலம் காக்கும் கை - இது கெடுக்கும் கையல்ல.

*படம் : இன்றுபோல் என்றும் வாழ்க, பாடலாசிரியர் : முத்துலிங்கம், பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசை : எம்.எஸ். விஸ்வநாதன்.*



பாழும் ஆற்றில் நீ வீழ்ந்த பின்னால்
நீந்துவதால் பயனேது?
சீறும் புயலும் மழையும்சேர்ந்தால்
சின்னக் குடை தாங்காது.

*படம் : தேவதாஸ் (1953), பாடல் : கே.டி. சந்தானம், பாடியவர் : கண்டசாலா – வெங்கடேஸ்வரராவ், இசையமைப்பாளர் : சி.ஆர். சுப்பராமன்*



பெண் : காயப் போகும் மேடையைச்
சாய வைக்கும் மான் இது

ஆண் :புயல் வீசி அதில் வேகம்
குடை தாங்குமா?

*படம் : சின்ன வீடு (1985), பாடல் : முத்துலிங்கம், பாடியவர்கள் : எஸ்.பி. பாலசுப்ரமணியம், ஜானகி, எஸ்.பி. சைலஜா, கோபாலகிருஷ்ணன், இசையமைப்பாளர் : இளையராஜா.*



*ராகம் : பைரவி*

*தாளம் : ரூபகம்*

சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா செல்வக் களஞ்சியமே
என்னைக் கலி தீர்த்தே உலகில் ஏற்றம் புரிய வந்தாய்!

*நூல் : பாரதியார் பாடல்கள் (1917), பாடல் : 8, பகுதி : கண்ணன் பாட்டு, பக்கம் : 268.*

சின்னஞ்சிறு கிளியே சித்திரப் பூ விழியே
அன்னை மனம் ஏங்கும் தந்தை மனம் தூங்கும்
நாடகம் ஏனடா? நியாயத்தைக் கேளடா?

*படம் : முந்தானை முடிச்சு (1983), பாடலாசிரியர் : முத்துலிங்கம், பாடியவர்கள் : எஸ்.பி. பாலசுப்ரமணியம், எஸ். ஜானகி, இசை : இளையராஜா.*



வசந்த காலம் வருமோ? நிலை மாறுமோ?
வைகை பெருகி வருமோ? குறை தீருமோ?
வீணை இருந்தும் பயனேது? வந்து
மீட்டும் வரையில் இசையேது?
குயில் கூவுமோ மழை நாளிலே
கயல் நீந்துமோ சுடும் நீரிலே.

*படம் : மறக்க முடியுமா (1966), பாடல் : சுரதா, பாடியவர் : பி. சுசீலா, இசையமைப்பாளர் : ராமமூர்த்தி.*

சுடுநீரில் விழுந்து துடிக்கின்ற மீன்போல
தோகை நெஞ்சினைச் சோகம் கொஞ்சுதம்மா
குயில்கூவ வசந்தங்கள் உருவாகுமோ
வெயில் தீண்டும் பூவில் பனி நீங்குமோ?

*படம் : புதிய வார்ப்புகள், பாடல் : முத்துலிங்கம், பாடியவர் : ஜென்சி, இசையமைப்பாளர் : இளையராஜா.*



கல்யாணம் செய்யவே
சிங்காரப் பந்தலும்
கச்சேரி சதுராட்டம்
ஊர்வலமும் வேணுமா? - இவை
இல்லாமல் எவரேனும்
கல்யாணம் பண்ணினால்
இன்பசுகம் பிள்ளைகுட்டி
இல்லாமல் போகுமோ?

*படம் : நான் சொல்லும் ரகசியம் (1959), பாடலாசிரியர் : மருதகாசி.*

மேளமெதுக்கு தாளமெதுக்கு
உற்றார் உறவினர் சம்மதமெதுக்கு
எண்ணிப் பார்த்தா ஆணும் பெண்ணும்
மனது கலந்த மணமே மணமென

அப்படிச் சொன்னார் எங்கப்பா
சொன்னது செய்வார் கந்தப்பா.

*படம் : மறுமலர்ச்சி பாடல், பாடலாசிரியர் : எம்.எஸ். சுப்பிரமணியம்.*



இனமினமென்று சொல்லி ஈனருக்குப் பெண்ணமுதை
ஈவது நலமல்ல ஐயாவே - மிகு
தனங்கனங் கல்வியுள்ள சந்ததிக்கீவது
தகுதியென் றெண்ணுகிறேன் ஐயாவே.

*நூல் : பிரம்ஹசமாஜ நாடகம் (1871), நூலாசிரியர் : சைதாபுரம் காசி விசுவநாத முதலியார், பக்கம் : 86.*

தாடி வளர்த்த பாழுங்கிழத்
தாத்தாவும் நீரே
தாரமாய் எனைக் கொண்டால்
கண்டபேர் சிரிப்பாரே.

*படம் : ஹரிஹர மாயா (1940).*



கோலைப் பிடித்து நடக்கும் கிழவனைக்
கொண்டு வந்துமண மாப்பிள்ளையாய்ச்
சேலை உடுத்தத் தெரியாச் சிறுமிக்குத்
திருமணம் செய்வதும் தீதல்லவோ?

தஞ்சை மறுமலர்ச்சி மன்றம் வெளியிட்ட பொங்கல் மலர் (1943). இயற்றியவர் : சாரண பாஸ்கரன், பக்கம் : 2.



ஓட்டுக் கேட்டு வருவாங்கண்ணே
மூட்டை அடிச்ச கூட்டமண்ணே
நோட்டைக்காட்டி ஓட்டுக் கேப்பாங்கண்ணே
நாட்டைக் கெடுத்த கூட்டமண்ணே!
கங்கையும் காவிரி பாய்ந்து செழிக்கும்நல்
இந்திய நாட்டினிலே
திங்கிற சோத்துக்கு டிங்கி அடிக்குது
ஏழைங்க வாழ்க்கையிலே.

*பாடலாசிரியர் : பாவலர் வரதராசன், படம் : அகல் விளக்கு (1979).*

ஜென்ம பூமிக்கே நன்மை தேடுவோம். ஜெய
பேரிகை முழங்க தாயகம் விளங்க
செந்தமிழ்க் கொடியை நாட்டுவோம்.
ஜாதி பேதம் இனி இல்லை யாவரும் சமமே

கள்ளெனும் அரக்கனை ஓட்டுவோம் நாமே
கைத்தொழில் மேல் ஓங்கி
வாழ்க வாழ்கப் பணியாற்றுவோம்.
பால்ய விவாஹத்தைப் போக்க

பெண்கள் உரிமைதனை உண்டாக்க
ஏழை என்னும் தாழ்வு நீக்க
யாவரும் கூடி வந்து
ஜே ஜே ஜே என வாழ்த்துவோமே.

படம் : *திவான் பகதூர் (1943), பாடலாசிரியர் : வேல்சாமிகவி.*



படுமோசமே குல நாசமே
படுத்திடுமே பாழ்சமூகமே
கொடுமைமிகவே கூடிய அதைக்
கோருவதேனோ குவலயத்தோரே
வறுமையதால் வாடுமாந்தரின்
அரும்செல்விகள் அநியாயமாய்
நரைமூப்புள நாதனைமணம்
உறவேசெய்யு முறையேயுள
வரதட்சணையே வாங்கிடும்தீய
வழக்கமகற்றி வழிபடுவீரே.

படம் : *ஜெயக்கொடி (1939), பாடல் : சி. முருகேசன், பாடியவர் : கே. கோகிலா.*



இல்லாதாரைப் படைத்தான் என்றொருவன்
இருந்தால் அழியட்டுமே
இல்லார்கள் உள்ளாரென்று - முத்தம்மா
ஏனிந்த வேற்றுமைகள்?

படம் : *பராசக்தி (1952), பாடலாசிரியர் : கு.மு. அண்ணல்தங்கோ.*



## ராஜாஜி

கள்ளுக்கடைகளை மூடிவிடநம்
காந்திஜி எண்ணத்தில் கொண்டுவிட
தெள்ளறிவுள்ளவர் ராஜாஜி மிக
துரிதமாய் சட்டடமியற்றி விட்டார்
காந்தியின் சக்தியைக் காணுங்கடி ராஜ
கோபாலர் புத்தியைக் காணுங்கடி
சாந்தத்தின் சால்புடன் சாருங்கடி உயர்
சத்தியம் ஓங்குது நித்தியமாய்.

*படம் : விமோசனம், பாடலாசிரியர் : எல். கிருஷ்ணசாமி பாரதியார்.*



மதுபானம் இரத்தவருணமாயிருந்து பாத்திரத்தில் பளபளப் பாய்த் தோன்றும்போது, நீ அதைப் பாராதே; அது மெதுவாய் இறங்கும்.

உன் கண்கள் பரஸ்திரீகளை நோக்கும்; உன் உள்ளம் தாறுமாறானவைகளைப் பேசும்.

நீ நடுக்கடலிலே சயனித்திருக்கிறவனைப் போலும், பாய்மரத் தட்டிலே படுத்திருக்கிறவனைப் போலும் இருப்பாய்.

என்னை அடித்தார்கள், எனக்கு நோகவில்லை, என்னை அறைந்தார்கள், எனக்கு சுரணையில்லை, நான் அதைப் பின்னும் தொடர்ந்து தேட எப்பொழுது விழிப்பேன் என்பார்.

*நூல் : நீதிமொழிகள் (1934), பக்கம் : 53,54, வெளியீடு : பிரித்தானியா சர்வதேச வேதாகமச் சங்கத்து சென்னை உதவிச் சங்கம்.*

**ஜாடை காட்டி ஓடும்போது**
**சதங்கை ஒலிக்கப் பார்த்தேன் - மதன்**
**சரங்கள் தொடுக்க வேர்த்தேன்.**

*படம் : தன அமராவதி, பாடல் : கவி குஞ்சரம், பாடியவர் : எஸ்.எம். குமரேசன், இசையமைப்பாளர் : கே.வி. மகாதேவன்.*



அடி - ராஜா வருவா ரென்று - நான்
ரோஜாப்பூ வாங்கி வைத்தேன்
ராஜாவைக் காணாமலே - ஏ தங்கமே
ரோஜாப்பூ வாடிப் போச்சே.

அடி - மந்திரி வருவா ரென்று - நான்
மல்லிகை வாங்கி வந்தேன்

மந்திரியைக் காணாமலே – ஏ தங்கமே
மல்லிகைப்பூ வாடிப்போச்சே.

*நூல் : கொலம்பியா அண்டு ஓடியான் கிராமபோன் பாடல் (1934).*

ராசாவுக்காகவே ரோசாப்பு கொண்டு வந்தோம்
நேசமாகத் தருவோமின்னா நேரங்காலம் சரியில்லே.
மன்னவனைத் தேடி மல்லிகைப்பூ கொண்டு வந்தோம்
மாலையிட்டுப் பார்ப்போமின்னா மார்க்கமொண்ணுந்
தெரியல்லே.

*படம் : காவேரி (1955), பாடியவர்கள் : என்.எஸ். கிருஷ்ணன், டி.ஏ.மதுரம், பி.ஜி. கிருஷ்ணவேணி, எஸ்.ஜே. காந்தா, பி.ஏ. கோமளா, ஏ. ரத்னமாலா மற்றும் குழுவினர், இசை : ஜி. ராமநாதன்.*



செய்வன திருந்தச் செய் — ஆத்திசூடி, ஔவையார்.

செய்யும் வேலையைத் திருந்தச் செய்மனமே
மெய்யாக தினமே
சேரும் நற்சுக வாழ்வின் சீதனமே (செய்)

*நூல் : மாணவர் கீதமஞ்சரி (1926), நூலாசிரியர் : சங்கரலிங்கக் கவிராயர், பாடல் : 13, பக்கம் : 14.*

## வேல்சாமி கவி

மதமெனும் பேதம் வீண் அபவாதம்
சமத்துவ ஞானம் ஒன்றே ப்ரமாதம்

*பாடலாசிரியர் : எஸ். வேல்சாமிகவி, படம் : பக்த கௌரி (1941).*

நான்முகன் படைப்பில் யாவரும் சமம்
நலமென நினைமனமே
நரனெனும் பிறவியும் உயர்வில்லை (நான்)

*படம் : பக்தகௌரி (1941), பாடலாசிரியர் : வேல்சாமி கவி,பாடியவர்: எஸ்.டி. சுப்பையா, இசை : டி.எம். இப்ராகீம்.*



*ராகம் : ராகமாலிகை* — *தாளம் : ஆதி*

இல்லாமை என்னும் பிணி
இல்லாமல் கல்வி நலம்

எல்லாம் அடைந்திடவே
அன்பு கொள்ளுவோம் - இனி
பண்பான வாழ்வுதந்து இன்பமடைவோம்.

*படம் : ஆயிரம் தலைவாங்கிய அபூர்வ சிந்தாமணி, பாடலாசிரியர் : வேல்சாமி கவி.*



எல்லாருக்கும் நல்லின்பம்
எல்லார்க்கும் செல்வங்கள்
எல்லாம் விளைந்திடவே
செய்து மகிழ்வோம் - நாட்டில்
தொல்லை எதுவுமின்றி
என்றும் மகிழ்வோம்.

*படம் : 1000 தலைவாங்கிய அபூர்வ சிந்தாமணி (1947), பாடலாசிரியர்: வேல்சாமி கவி, பாடியவர் : பி.எஸ். கோவிந்தன்.*



ஜாதி சமயபேதம் மதவாதிகள் வாதம்
இதற்காக எத்தனைவேதம் புரியாத மனவிரோதம்

*படம் : ஸ்ரீ ஆண்டாள் (1948), பாடலாசிரியர் : வேல்சாமி கவி.(பி.எஸ். கோவிந்தன், வி.ஆர். ஜீவரத்னம் நடித்தது)*

என்னே உலகம் இருண்டதோர் கழகம்
மன்னுயிர் வேறாய் மதித்திடும் லோபிகள்

*படம் : கம்பர் (1938), பாடலாசிரியர் : டி.கே. சுந்தர வாத்தியார், பாடியவர் : எஸ்.வி. சுப்பையா பாகவதர்.*



மேதினி வாழ்வது எதனாலே?
மேழி பிடிப்பவன் உழைப்பாலே.

*டம் : தாமரைக்குளம் (1959), பாடலாசிரியர் : முகவை இராஜமாணிக்கம்.*



நல்லவர் மனதை நடுங்கச் செய்தேனோ
நலிந்தவர் வருந்தத் துன்பம் செய்தேனோ
கல்லையும் நெல்லையும் கலந்து விற்றேனோ
கற்றவர் தம்மைக் கடிந்து சொன்னேனோ

களவு செய்வோருக்கு உளவு சொன்னேனோ
கன்றுக்கு ஊட்டாமல் கட்டி வைத்தேனோ
உழவர்கள் விளைத்த பயிர் அழித்தேனோ
உண்ணும் அமுதநீர்க் குளத்தைத் தூர்த்தேனோ
ஏழைகள் வயிறை எரியச் செய்தேனோ
ஆலயக் கதவை அடைத்து வைத்தேனோ.

படம் : *தாமரைக் குளம் (1959), பாடல் : முகவை இராஜமாணிக்கம்.*

இந்தவாழ்வு இன்பமே போல
இருந்துபின்னர் துன்பமே
தந்திடுமென்ப தனுக்குச்சாட்சி
ஜனன மரணமே கண்காட்சி

நூல் : *பெற்றான் சாம்பனார் சரித்திரக் கீர்த்தனம் (1915), நூலாசிரியர் : ரஞ்சித மோகனகவி மாயவரம் தியாகராஜ தேசிகர், பாடல் : 18, பக்கம் : 24.*



தண்ணீர் விட்டோ வளர்த்தோம்
சர்வேசா! இப்பயிரைக்
கண்ணீராற் காத்தோம் . . . . . — *பாரதியார்*

வேந்தனுக் கபாயம் வந்தால்
விளையுமுன் அறியப் பண்ணல்
போந்தவவ் வபாயம் தன்னைப்
புத்தியி னாலே நீக்கல்
ஏந்தலோர் மோகத் தாலே
எண்ணமற் றிருந்தா னேனும்
ஆந்தக உறுதி சொல்லல்
அமைச்சர்கள் நீதி யாமே.

நூல் : *பஞ்சதந்திரக் கதை பாடல் திரட்டு (1914), நூலாசிரியர் : வீரமார்த்தாண்டதேவர், பாடல் : 30, பக்கம் : 184.*



வண்ண் மயிலோன் வளமார் பினாங்குநகர்த்
தண்ணிமலை யான்பெயரைச் சாற்றினர்க்குக் கண்ணியமாய்
நாற்கவியும் நாற்பொருளும் நாற்றிசையி னாற்புகழும்
மேற்சிறப்பி யாவுமுறு மே.

நூல் : *தண்ணீர்மலை முருகவேள் பஞ்சரத்தினப் பாமாலை (1932), நூலாசிரியர் : சுவாமி அருணகிரிநாதர்.*

காய்ந்தறியாப் புற்றரையும் கண்கவரும் சோலைகளும்
பூந்தடமும் நல்வனப்பும் பூவையரும் - மாய்ந்தகன்ற
பெண்ணலமும் செல்வாக்கும் பேறும் விளைமாண்பும்
எண்ணுமலாய் நாட்டின் எழில்.

*நூல் : ஈப்போ, தண்ணீர்மலை வடிவேலர் மும்மணிக் கோவை (1924), நூலாசிரியர் : யாழ்ப்பாணம் வண்ணைநகர் நெ.வெ. செல்லையா (ஈப்போ திருவள்ளுவர் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்)*

### (பஃறொடை வெண்பா)

ஆசை சிறிதுமில்லா தார்நிறைந்து வாழுமிந்த
ஆசிரமந் தன்னை அடைந்த எனதுதோள்
ஆஹா துடிக்கின்ற தாச்சரியம் ஆச்சரியம்
ஆச்சரியம் இங்கே அதன்பலனெவ் வாறுவரும்
ஆனாலு மென்ன அதிர்ஷ்டமெங் கெங்குமுண்டு
ஆரே அறிவா ரதை.

*நூல் : சகுந்தலை அல்லது காணாமற் போன கணையாழி (1922), பக்கம் : 143, நூலாசிரியர் : திவான்பஹதூர் ச. பவனாந்தம் பிள்ளை* I.S.O. Fr. H.S. (London) & M.R.A.S. (London)



மங்கியதோர் நிலவினிலே கனவிலிது கண்டேன்
வயதுபதி னாறிருக்கும் இளவயது மங்கை
பொங்கிவரும் பெருநிலவு போன்றவொளி முகமும்
துங்கமணி மின்போலும் வடிவத்தாள் வந்து
தூங்காதே யெழுந்தென்னைப் பாரென்று சொன்னாள்.

*நூல் : பாரதியார் பாடல்கள், பாடல் : 20, பகுதி : பல்வகைப் பாடல்கள் அழகுத் தெய்வம்.*

தூங்குமஞ் சணந்தானே சொகுசுடன் தாங்கிய மெத்தையே நானே
தூஷண மாயுன்னை யேசிய துண்டோசொல் மெத்தையே?
பாங்கான அரசர்கள் தூங்கவும் அழகான மெத்தையே - நானே
படுத்தாலிண் டம்முள்போ லிடித்திட லாகுமோ மெத்தையே?

*நூல் : வாணாவுர நாடகம், பக்கம் : 77.*



மதியே! தண்ணொளி மதியே! வானதி
காட்டும் வெள்ளையங் கமலமே! இளஞ்சிறார்
வேட்டு நாடொறும் விளையாடு மாமிளர்
குளிர்வெண் டிங்காள்! குமுதக் கிழவா!

சீதக் கலையோய்! காதற் கருவியே!
இரவிபா லொளிபெற் றிரவொளி செய்வோய்!
உன்போல் யாரோ யுலகினில்
மன்பே ரருள்புரி வள்ள லாவரோ?

*நூல் : தனிப்பாசுரத் தொகை 1899, நூலாசிரியர் : பரிதிமாற் கலைஞர்.*

சதகோடி மதிகளைப் பழித்தநல் வதனமும்
சங்கடந் தீர்க்கும் இங்கித நயனமும்
கொவ்வை யிதழும் மரகத வர்ணமும்
கோகனகக் கரமும் கோமள வடிவமும்
வர்ணிக்க முடியாது வாகா யென்றாலே
சொல்லுவார் புலவர்கள் சொகுஸாகப் பின்னாலே.

*நூல் : சீதா கல்யாண நாடகம் (1915), நூலாசிரியர் : டி. பக்தவத்ஸலம் பி.ஏ., எம்.பி.பி.ஐ., பக்கம் : 72.*



## ஒன்று இல்லாமையாற் பயன்படாதவை

கோவிலில் லாதவூர் நாசியில் லாதமுகம்
கொழுநன்இல் லாத மடவார்
குணமதில் லாவித்தை மணமதில் லாதமலர்
குஞ்சரம் இலாத சேனை

காவலில் லாதபயிர் பாலரில் லாதமனை
கதிர்மதி யிலாத வானம்
கவிஞரில் லாதசபை சுதிலய மிலாதபண்
காவலர் இலாத தேசம்

ஈவதில் லாததனம் இயமம்இல் லாதசெபம்
இசைலவணம் இல்லாத ஊண்
இச்சையில் லாதபெண் போகநலம் இவைதம்மின்
ஏதுபலன் உண்டு கண்டாய்

ஆவியனை யாட்கிடம் தந்தவா கற்பதரு
ஆகும்என தருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுர தேவனே.

*அம்பலவாணக் கவிராயர்அறப்பளீசுர சதகம் (10)*



தெள்ளமிர்த தாரையென மதுரங் கதித்தபைந்
தேன்மடை திறந்த தெனவே
செப்புமுத் தமிழினொடு நாற்கவிதை நாற்பொருள்
தெரிந்துரைசெய் திறமை யுடனே.

விள்ளரிய காவியத் துட்பொருள் அலங்கார
விரிவிலக் கணவி கற்பம்
வேறுமுள தொன்னூல் வழக்கம்உல கத்தியல்பு
மிக்கப்ர பந்த வண்மை

உள்ளவெல் லாமறிந் தலையடங் குங்கடலை
ஒத்ததிக சபை கண்டபோ
தோங்கலை யொலிக்கின்ற கடல்போற்ப்ர சங்கமே
துரைப்பவன் கவிஞ னாகும்.

அள்ளிவிட முண்டகனி வாயனே நேயனே
அமலனே அருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுர தேவனே.

*அம்பலவாணக் கவிராயர் அறப்பளீசுர சதகம் (75)*



மலரே! மலரே! மணக்காதே - என்னை
மாலையிட்டவர் வரும்வரைக்கும்
நிலவே! நிலவே! காயாதே - என்
நினைவு கொண்டவர் வரும் வரைக்கும்

*நூல் : வெண்ணிலா (1961), பக்கம் : 27, தலைப்பு : மனமே பொறுத்திரு, நூலாசிரியர் : முத்துலிங்கம்.*

முகிலாட்டம் கூந்தலடி கூந்தல் - ஒளி
முத்தாட்டம் பற்களடி பற்கள் - இவள்
துகிலாட்டம் வானமடி வானம் - தமிழ்ச்
சொல்லாட்டம் இனிப்பதடி தேனும்.
வேலாட்டம் விழிகளடி விழிகள் - இரு
வில்லாட்டம் புருவமடி புருவம் - அடி
கோலாட்டம் ஒடிவதடி இடையும் - இவள்
குரலாட்டம் ஊதுமடி குழலும்.

*நூல் : கனவுகள் (1966), நூலாசிரியர் : இரா. அரங்கநாதன், பாடல் : 8, பக்கம் : 26.*

பாழ்வீடு வீடல்ல, மனையாளிருப்பதே வீடு. மனையாளில்லாத வீடு காட்டைப் போல் இருக்கிறதென்பது என் அபிப்பிராயம்.

*நூல் : பாரத நீதி (1910), சாந்தி பர்வம், பக்கம் : 35.*

மாசு மறுவில்லாத சீதையில்லா இடம்
வனம்போல் காணுதையா

*படம் : லவ - குச (1934), பாடலாசிரியர் : காயகசிகாமணி எஸ்.முத்தையா பாகவதர்.*



வீர சுதந்திரம் வேண்டிநின் றார்பின்னர்
வேறொன்று கொள்வாரோ? என்றும்
ஆரமு துண்ணுதற் காசைகொண் டார்கள்ளில்
அறிவைச் செலுத்துவாரோ?

*நூல் : பாரதிபாடல்கள் (1922), தேசிய கீதப்பாடல் : 26.*

வீரர்கள் வாழ்வினை வேண்டிநின்றார் பின்னர்
வேறொன்று கொள்வாரோ?
ஆரமுது உண்பதற்கு ஆசைகொண்டார் கள்ளில்
அறிவைச் செலுத்துவாரோ?

*படம் : சத்திய சீலன் (1936), பாடலாசிரியர் : கவி குஞ்சரம், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*

வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து - பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து.



*நூல் : தனிப்பாடல் திரட்டு (1923), பாடலாசிரியர் : ஔவையார், பக்கம் : 127, பாடல் : 70.*

தேனும் பாலும் ஓடும் பொன்னி
சோழ நாட்டிலே

மீனும் முத்தும் கிடைப்பது தென்
பாண்டி நாட்டிலே

ஆனைத் தந்தம் அகிலும் தேக்கும்
சேர நாட்டிலே

ஆன்றோர்கள் பிறந்திட்டது
தொண்டை நாட்டிலே

*படம் : தாமரைக் குளம் (1959), பாடல் : முகவை இராசமாணிக்கம்.*

தண்ணீரில் நீந்துகின்ற
மீனழுத கண்ணீரைத்
தண்ணீரும் அறியவில்லை.

*படம் : ஒண்ணும் தெரியாத பொண்ணு (1979), பாடலாசிரியர் : ஜுபிடர் சின்னதுரை, பாடியவர்கள் : ஜேசுதாஸ், பி. சுசீலா.*

தண்ணீரில் மீனழுதால் கண்ணீரைக் கண்டது யார்?
தனியாக நான் அழுதால் என்னோடு வருவது யார்?

*படம் : வடிவங்கள் (1981), பாடலாசிரியர்: பூவை செங்குட்டுவன், இசையமைப்பாளர் : சந்திரபோஸ்.*



தறிபட்ட சந்தனக் கட்டை பழுதாயினுஞ்
சார்மணம் பழு தாகுமா?
தக்கபால் சுவறிடக் காய்ச்சினு மதுகொண்டு
சார மதுரங் குறையுமோ?

நிறைபட்ட கதிர்மணி யழுக்கடைந் தாலுமதி
னீள்குண மழுங்கி விடுமோ?
நெருப்பிடை யுருக்கினு மடிக்கினுந் தங்கத்தி
னிறையு மாற்றுங் குறையுமோ?

*நூல் : அறப்பளீசுர சதகம், நூலாசிரியர் : அம்பலவாணக் கவிராயர், பாடல் : 23.*

நெருப்பிலிட்ட தங்கம் கருத்து விடாது
நிலவுக்கு திரைபோட நினைப்பது கூடாது

*படம் : எல்லோரும் வாழ வேண்டும் (1962), பாடல் : வில்லிபுத்தன், பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசை : ராஜன் நாகேந்திரன்.*



ஏழெட் டென்றிங்குப் பிறந்து நம்மை
இடர்ப் படுத்தித் துன்பம் ஏற்படுத்தி
வாழற் கியலாத வகை செய்யாது
வளர்க்க ஒன்றிரண்டு பிள்ளை யென்றால்
பிள்ளைப் பேறு நல்ல பேறு - அது
பெறுதற் கெல்லார்க்கும் இயன்ற பேறு.

*நூல் : இன்பத் திராவிடம் (1949), நூலாசிரியர் : நாரா. நாச்சியப்பன், பக்கம் : 18.*

கணக்காக ஒண்ணு ரெண்டு
கச்சிதமாகப் பெத்து
படுக்கைதனைச் சுத்திவைக்க வேணும் மச்சானே! பின்னால்
அடுக்காகச் சொத்து சுகம் சேரும் மச்சானே!

*படம் : ரிக்ஷாக்காரன் (1971), பாடலாசிரியர் : அவினாசிமணி, பாடியவர் : டி.எம். சௌந்தரராஜன், இசையமைப்பாளர் : எம்.எஸ். விஸ்வநாதன்.*



அன்பில் விளைந்த அமுதமே
அன்னமே என் கண்ணகி (அன்)

*படம் : கண்ணகி (1942), பாடலாசிரியர் : உடுமலை நாராயணகவி. (பி.யூ. சின்னப்பா, பி. கண்ணாம்பா நடித்தது)*

*ராகம் : ராகமாலிகை* *தாளம் : ஆதி*

அன்பிலே மலர்ந்த அமுதமே எனதாருயிர் ஜீவிதமே.

*படம் : சகட யோகம் (1946), பாடலாசிரியர் : பலவங்குடி சாமா, பாடல்: 12, பாடியவர் : கொத்தமங்கலம் சீனு.*



*ராகம் : தன்பாசி* *தாளம் : ஆதி*

பல்லவி

இது வசந்த காலம் பெண்ணே
ஜெகதீசன் சர்வேசன் தியாகேசன் மனமகிழ் (இது)

அனுபல்லவி

மதனனும் மதியமும் மலர்களும் விளங்கும் (இது)

சரணம்

வண்டினம் ஸ்ருதிகூட மாங்குயில் இசை பாட
கண்டு மயில்கள் ஆட களித்து நாம் கொண்டாட (இது)

*படம் : சுந்தரமூர்த்தி நாயனார் (1937), பாடல் : மாயவரம் கே. தியாகராஜ தேசிகர், பாடியவர் : வி.என். சுந்தரம், இசை : கே. சிவ வடிவேல்பிள்ளை குழுவினர்.*



ராகம் : கமாஸ் தாளம் : ரூபகம்

பல்லவி

வசந்த காலமிது நலமே
மனதில் பொங்குது குதூகலமே (வசந்த)

அனுபல்லவி

இசையும் ஸுகந்தமலர் மணமே
இனிமை சேர்மந்த மாருதமே
பசுமை காக்ஷிமிகும் வனமே
பால்போல் நீர் நிறைநதியே சுகமே (வசந்த)

சரணம்

மயில்களாட குயில்கள்பாட பூம்
வண்டுச்ருதி போட
மாநிலத்துள ஜீவர்கள் ஜோடியாய்
மகிழ்வு கொண்டாட (வசந்த)

மயங்கிய அந்திமாலை நேரம்
வானில் பறவைகள் ஆரவாரம்
மதிவொளி நிலவோ அபாரம்
மறவாதிதனை நினைவு கூறும் (வசந்த)

*படம் : தேவகன்யா (1943), பாடலாசிரியர் : எஸ்.ஜி. செல்லப்பா அய்யர், இசையமைப்பாளர் : பலவான்குடி வி. சாமா அய்யர்.*



ஆண் ஒண்ணு நல்ல பொண் ஒண்ணு
அதுக்குமேலே ஆசைப்பட்டா

போனாப் போவுது கொசிறு ஒண்ணு
மூணுலே பிரேக்கை இழுத்துப் போட்டா
மோசம் இல்லை வண்டிக்கு
முட்டாள்தனமா விட்டாக்கா
கொண்டு விட்டிடும் சந்திக்கு.

*படம் : புனிதவதி (1963), பாடலாசிரியர் : சுரபி, பாடியவர் : சீர்காழி கோவிந்தராஜன், இசையமைப்பாளர் : ஹுசைன் ரெட்டி.*



பேராசை இல்லாமே பொண்ணு வாழணும்
அன்பாலே நெஞ்சங்கள் ஒண்ணு சேரணும்
ஒண்ணும் ஒண்ணும் சேந்தா மூணு ஆகணும்
ரெண்டு மூணு ஆனதோட பூட்டுப் போடணும்.

*படம் : உத்தமி (1985), பாடலாசிரியர் : மு. மேத்தா.*



*இராகம் : கரகரப்ரியா* *தாளம் : ஆதி*

எந்தனிடது தோளும் கண்ணும் துடிப்பதென்ன
இன்பம் வருவதென்று சொல் சொல் சொல் கிளியே.

*படம் : சகுந்தலை (1940), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.எஸ். சுப்புலட்சுமி.*

வலக்கண் அடிக்கடி வலபுஜம் துடிக்க
கோரிய கனி இன்று நினைத்திடுவாள்
இது காலமெல்லாம் கண்ட என் கனவும்
இனிமேல் நிலைக்கவும் செய்திடுவாள்.

*படம் : ஸ்ரீ கிருஷ்ணா அர்ஜுன யுத்தம், பாடல் : தஞ்சை ராமையா தாஸ், பாடியவர்கள் : டி.எம். சௌந்திரராஜன், பி. சுசீலா, இசை : பெண்டியால நாகேஸ்வரராவ்.*



மாசிலா தொழுகும் மனைவியோ டிரண்டு
மக்களோ டினிய வாழ்வுற வுன்னின்
நம்மிரு வலிமையும் நன்கா ராய்ந்தே
ஒருபுதல் வனைவிட் டோடுவாய் வாழியே!

*நூல் : மத்யம் - வ்யாயோகம் அல்லது ஹிடிப்பியின் தந்திரம் (1920), (தமிழ் மொழிபெயர்ப்பு), பக்கம் : 10, மொழிபெயர்த்தவர் : ந. சுப்ரமணிய அய்யர். (சென்னை, திருவல்லிக்கேணி, வல்லப அக்ரஹாரம் கார்பொரேஷன் மாடல் ஸ்கூல் ஹெட்மாஸ்டர்).*

நல்ல பிள்ளை ஒண்ணு ரெண்டு பெத்திடுங்க
பெத்த பின்னே அதைக் கொஞ்சம்
ஒத்தி வையுங்க.

*படம் : புதிய தீர்ப்பு, பாடல் : வல்லபன், பாடியவர்கள் : மலேசியா வாசுதேவன், சித்ரா, இசை : இளையராஜா.*



பூவோ பூவு... மணம்வீசும் புதிசான பூவு!
பொம்பளெ தலையில் வச்சா புருஷன் வாடை பிடிக்கும் பூ
கட்டி வெச்ச மல்லிகை முல்லை மொட்டு - யேங்
கைமுள நீளம் ஒண்ணரைத் துட்டு.
கூத்துப்பாக்கும் பொம்பளை வக்கிற குண்டு மல்லிகைப்பூ - கடல்
காத்து வாங்கும் பொம்பளை வக்கிற கனகாம்பரம்பூ
மாடிமேலே இருக்கும் பெண்கள் தலையிலே வச்சா - கீழே
வாசமடிக்கும் மந்தாரப்பூ வேணுமா?
பூ...பூவோ பூவு....

*படம் : வனசுந்தரி (1951), பாடல் : உடுமலை நாராயணகவி, (பி.யூ. சின்னப்பா, டி.ஆர். ராஜகுமாரி நடித்தது).*

போனா வராது இது பொழுதுபோனா கிடைக்காது
பூமாலை என்னைப்போரே தொடுக்க யாரும் முடியாது.
பாட்டி கிழவி தலையில் வச்சா பழைய வயசு திரும்பிடுங்க
பழுத்துப்போன தாத்தாவுக்கும் பலத்தைக் கொடுத்து
மயக்கிடுங்க.

குத்தாலத்துலே வச்சுகிட்டா இது கும்பகோணத்துலே
குமாய்க்கும்
பெத்தாபுரத்தில் வச்சுகிட்டா இது பேராளத்துலே ஜமாய்க்கும்.

*படம் : வாழ்க்கை ஒப்பந்தம் (1959), பாடல் : தஞ்சை ராமையாதாஸ், பாடியவர் : ஜிக்கி (கிருஷ்ணவேணி), இசை : கண்டசாலா.*



சிப்பி பிளந்தது சிப்பி பிளந்தது
செங்கனித் துண்டாக!
அதில் முத்து விளைந்தது முத்து விளைந்தது
மல்லிகைப் பந்தாக!

*படம் : தேர்த் திருவிழா (1968), பாடலாசிரியர் : மாயவனாதன், பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன் – பி. சுசீலா, இசை கே.வி. மகாதேவன்*

முத்து சிப்பி திறந்தது
விண்ணைப் பார்த்து
மழை முத்து வந்து விழுந்தது
வண்ணம் பூத்து.

*படம் : தீபம், பாடல் : புலமைப்பித்தன், பாடியவர்கள் டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசை : இளையராஜா.*

கடலில் குளித்தொரு முத்தெடுத்தேன்
கைநழுவ விடுவாயோ? கருணை புரிவாயோ?

*படம் : மீரா (1945), பாடலாசிரியர் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.எஸ். சுப்புலட்சுமி.*

அலையும் கடலில் ஒரு முத்தை எடுத்தான் – அதை
அடுத்தவர் சுகங்காணப் பறிகொடுத்தான்.

*படம் : எல்லோரும் வாழ வேண்டும் (1962), பாடல் : வில்லிபுத்தன், பாடியவர் : சிதம்பரம் ஜெயராமன், இசை : ராஜன் நாகேந்திரன்.*



உன் கண்ணில் நீர் வழிந்தால் என்னெஞ்சில்
உதிரங் கொட்டுதடி
என் கண்ணிற் பாவையன்றோ - கண்ணம்மா
என்னுயிர் நின்னதன்றோ?

*நூல் : பாரதியார் பாடல்கள் (1922), நூலாசிரியர் : சுப்பிரமணிய பாரதியார் பகுதி : கண்ணன் பாட்டு – 8, கண்ணம்மா என் குழந்தை,*

உன் கண்ணில் நீர் வந்தால்
எந்தன் கண்ணில் ரத்தம் பாயும்
உன்னாவி எந்தன் ஆவி
ரெண்டும் ஒன்றாகும்.

*படம் : நான் சிவப்பு மனிதன், பாடலாசிரியர் : புலமைப்பித்தன், பாடியவர் : எஸ்.பி. பாலசுப்ரமணியம், இசை : இளையராஜா.*



ஓர் மனைவி சகல சுப லக்ஷணங்களும் வாய்ந்தவளாய் இருப்பின் அவளே புண்ணிய பொக்கிஷம், பொறுமைக்கு இருப்பிடம், ஞானக் களஞ்சியம், நற்குணபாத்திரம், கற்பலங் காரி, கனவுபகாரி, அற்புத சுந்தரி, அறிவிலே மந்திரி, விற்பவிதரணி, விநயசம்பூரணி, வாடாத புஷ்பம், மங்காத தீபம், ஆடாத மாமயில், அலையாத மாங்குயில், ஓடாத புள்ளிமான், ஊராத பைங்கிளி, மாற்றிலாத்தங்கம், மாசிலா மாணிக்கம், கோதிலாக் கரும்பு, குறைவிலாச் சந்திரன் எனப்படுவள். இவ்வித திவ்ய, குணமுடையாளைக் காத்திருந்தாலும் கலிதீரும் - பார்த்திருந்தாலும் பசி தீருமன்றோ?

*நூல் : ஜெய தீபிகா (1922), நூலாசிரியர் : ஊ.கு. நல்லையாபிள்ளை, பக்கம் : 136, பகுதி : இல்வாழ்க்கைப் படலம்.*

பங்கஜ வதனம் மலர்ந்தால் போதும்
பசியும் உடனே தீரும்

*படம் : ஆரவல்லி (1957), பாடலாசிரியர் : வில்லிபுத்தன், பாடியவர்கள்: ஜக்கி, டி.வி. ரத்னம், இசையமைப்பாளர் : ஜி. ராமநாதன்.*



வண்டுமொய்த் தனைய கூந்தல்
மதனபண் டார வல்லி!
கெண்டையோ டொத்த கண்ணாள்
கிளிமொழி வாயி னூறல்

கண்டுசர்க் கரையோ தேனோ
கனியொடு கலந்த பாகோ?
அண்டர்மா முனிவர்க் கெல்லாம்
அமுதமென் றளிக்க லாமே!

*நூல் : விவேகசிந்தாமணி, பாடல் : 10.*

வண்டு மொய்க்காத கூந்தல்!
வளையாத முத்துப் பல்லி!
கெண்டைமீன் போன்ற கண்ணாள்!
கிளிமொழி பேசும் வாயாள்!
ஊர்வசியே இவள்தானே!
ரம்பைதானே! மேனகைதானே!
உயிரோவிய மனமோகினி
எனதாருயிர் மனையாள் இவள்....

*படம் : இன்ஸ்பெக்டர் (1953), பாடல் : கு.மா. பாலசுப்ரமணியம், பாடியவர் : ஏ.எம். ராஜா, இசையமைப்பு : ஜி. ராமநாதன்.*



ஸ்ரீ கணபதியே நமோ தீனரைக்காரும்
ஆகம முறையே பற்றி ஆதரி எமை என்றுமே
அகிலம் போற்றும் அருண கிரியாரின்
அன்பு நிறைந்த இன்பக் கதையாட
தெய்வத் திருப்புகழும் திகட்டா திருக்குமே
தித்திக்கும் தேனே போலே பக்தியளிக்குமே.
உய்யும் வகையெனவே உலகோர் புகழ்ந்திட
ஊட்டிடு மனதையே உளமே உறுதிபட (ஸ்ரீ)

*படம் : திருப்புகழ் - அருணகிரிநாதர் (1937)*

*ஸ்ரீ கந்தலீலா*

ஸ்ரீதர மருகனே சிவகுருநாதா
சரவண நீதா திருவருள் தா
தேவ மருதவரை திகழ்வடி வேலா
திரிபுர தகன சங்கர னருள்பாலா
கோவைபுரி பிரிமியர் சினிடோனே
குவடுறு சுடரெனப் பொலிகருள்வோனே
கரந்தொழும் சிரம்படும் பதங்கொளும் (ஸ்ரீதர)

*படம் : ஸ்ரீ கந்தலீலா (1938), பாடலாசிரியர் : எல். நஞ்சப்ப செட்டியார்*
Produced by PREMIER CINETONE, COIMBATORE.

திருவருள் நீ புரிவா யிது ததியே
ஸ்ரீ ஜெய பாரதியே ஜெகமி (திருவருள்)

சருவ லோக தயாபரி நீயே
சமத்துவ வாழ்வினைத் தந்தருள் வாயே
மருவிய உயிர் நிலையாகிய தாயே
மதுரிதம் சேர் தமிழ் மொழியே
உயர்வென மதித்து தினம் பிடித்து கடைத்தேறவே (திருவருள்)

*படம் : பாலாமணி (1937), பாடலாசிரியர் : பாரதிதாசன், பாடல் : 2.*



தாய்வள நாடே இனிதாய் விடைதருவாய்!
போய்வருவேன் என்றும் புகழ்தழைத்திடுவாய்!
வாய்கமழும் தமிழை வளரச் செய்வாயே!
மதுவை அகற்றி மக்கள் மானம்கப்பாயே!
தீயகுண பேதத்தைத் திருத்திடுவாயே!
தேசமே உனக்கு தேசம் காண்பாயே!

*படம் : கம்பர் (1938), பாடலாசிரியர் : டி.கே. சுந்தர வாத்தியார். (எஸ்.வி. சுப்பையா பாகவதர், சி.எஸ். ஸ்வர்ணாம்பாள் நடித்தது).*



வலியவன் எளியவனாவான் - பின்பு
எளியவன் வலியவனாவான்
ராஜனும் - தாசனாவான், அந்த
தாசனும் ராஜனாவான்.

*படம் : மிருச்சகடிகா அல்லது வஸந்தசேனா (1936), பாடலாசிரியர் : ஆதிமூலம் வாத்தியார்*

*ராகம் : பீம்ப்ளாஸ்* *தாளம் : ஆதி*

அரசினை ஆண்டவன் ஆண்டியும் ஆவான்
அடிமையும் அரசாள்வான்
ஒருவழி நில்லாது துறவு மற்றெல்லாம்
உதவாக்கரை யன்றோ.

*படம் : சகடயோகம் (1946), பாடல் : எஸ்.ஜி. செல்லப்பா அய்யர், பாடியவர் : வித்வான் சீனிவாசன்.*



சந்திராதித்தருந் தேருந் தரணியும் வானும்
தத்தம் கதிமாறிப் பிண்டிடினும்
எந்தன் மொழிய தொருக்காலும் பொய்யா
திசைந்தேநீ நம்புவாய் - சத்தியமே.

*நூல் : பதினெட்டாம்பேர் நாடகாலங்காரம்.*

சூரியன் உதயம் திசைமா றினுமே
துயருறாது மனமே
ஏரிநீர் கரை கடந்திடி லென்ன
இமய மலையது அசைந்திடி லென்ன?
உண்டோ ஒருகுறை உலகமி தழியினும்
உளமே மகிழ்ந்திருப்போம்.

*படம் : தேவகன்யா (1943), பாடலாசிரியர் : எஸ்.ஜி. செல்லப்பா ஐயர். (சி. ஹொன்னப்ப பாகவதர், வி.ஆர். ஜீவரத்னம் நடித்தது)*

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனுஞ் சொல் (குறள்)

*உரை :— கல்வியறிவு உடையவனாக்கிய தன் தந்தைக்கு, மகன் செய்யக்கூடிய மறு உதவி, தன் அறிவும் ஒழுக்கமும் கண்டார் "இவன் தந்தை இவனைப் பெறுதற்கு என்ன தவம் செய்தானோ?" என்று புகழ்ந்துரைக்கும் சொல்லைப் பெறச் செய்வதாம். தெள்ளுரை :— பண்டித வித்துவான் ச. சாம்பசிவன் புலவர் ச. சாம்பசிவனார்.*

***இராகம் : யமுனா கல்யாணி*** ***தாளம் : ஆதி***

பல்லவி

வாலிபர் இவர் கானம் மனதை உருக்குதே
வடிவும் குரலும் ஒன்றாய் வாய்ந்திருக்குதே (வா)

*சரணம்*

இவரைப் பெற்றவர் என் தவம் செய்தனரோ
இவர் தேவாம்சம் கொண்டு இங்கு வந்தனரோ

*படம் : லவ - குச (1934), பாடல் : காயக சிகாமணி எல். முத்தையா பாகவதர், பாடியவர் : மாஸ்டர் நாராயணன்.*



*பத்மினி பிக்சர்ஸ் முதல் தேதி*

அகம்குளிர ஆனந்தம் பிறக்கும் தேதி
முகம்மலர வரும் தேதி முதல் தேதி
சம்பளம் பெறப்போகும் இன்பத்தில் தொழிலாளி
தன்னை மறக்கின்ற முதல் தேதி
தன் பணம் போகுதென்னும் எண்ணத்தில் முதலாளி
சஞ்சலப் படுகின்ற முதல் தேதி.

*படம் : முதல் தேதி (1955), பாடலாசிரியர் : கே.டி. சந்தானம்.*



*வத்யா பிலிம்ஸ் மங்கையர் திலகம்*

உண்மை
அன்பு என்றும் அணைந்திடா
தீபமாய் விளங்கும் - இந்த உலகிலே
அன்பின் அழகிய சின்னமாய்
அவதாரஞ் செய்தாள் மங்கையர் திலகம்!

*படம் : மங்கையர் திலகம் (1955), பாடலாசிரியர் : ஏ. மருதகாசி.*

கண்ணின் கடைப்பார்வை
காதலியர் காட்டிவிட்டால்
மண்ணில் குமரர்க்கு
மாமலையும் ஓர்கடுகாம்.

*நூல் : சஞ்சீவி பர்வதத்தின் சாரல், நூலாசிரியர் : பாரதிதாசன்.*

மங்கை என் பார்வையில் மலையசையும் - பகை
வாளும் ஈட்டியும் என்ன செய்யும்?

*படம் : மஹாலட்சுமி, பாடல் : பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம்.*



விளங்கும் தூய ஸர்ஜன ஸங்கம்
விடுத்தே கூடாதே துஷ்டர் ப்ரஸங்கம்
விளக்கில் விழும் பழமென்று மயங்கும்
விட்டிலாகாதே சஞ்சலமெங்கும்

*படம் : அசோக்குமார் (1941), பாடல் : பாபநாசம் சிவன், பாடியவர் : எம்.கே. தியாகராஜ பாகவதர்.*

விளக்கைப் பழமென
எண்ணியே வீழ்ந்திடும்

விட்டிலது போலே ஏமாந்திடாதே
காதலை நம்பாதே நெஞ்சே.

படம் : இதய கீதம் (1950), பாடலாசிரியர் : கம்பதாசன் இசை : எஸ்.வி. வெங்கட்ராமன்.

உனைக்காணும் போதினிலே என்னு ளத்தில்
ஊறிவரும் உணர்ச்சியினை எழுது தற்கு
நினைத்தாலும் வார்த்தைகிடைத் திடுவ தில்லை.

நூல் : பாரதிதாசன் கவிதைகள் (1938), பாடல் தலைப்பு : புரட்சிக் கவி, நூலாசிரியர் : பாரதிதாசன்.

## இல்வாழ்வினிலே

அவன் :–

கனியே கன்னல் தமிழே! அமுதே!
பனி தூங்கும் மலரே! நிலவே!

அவள் :

கனிவான மொழியால் எனையே
கவர்ந்தீரே காந்தச் சிலையே!

அவன் :

உனைக் காணும் போது நெஞ்சில்
ஊறிடும் உணர்ச்சி தனையே
எழுதவோர் எழுத்து மில்லையே!

படம் : பராசக்தி (1952), பாடலாசிரியர் : கலைஞர் மு. கருணாநிதி, பாடியவர்கள் : உசேன் - டி.எஸ். பகவதி, இசை : ஆர். சுதர்சனம்.



புதியதோர் உலகம் செய்வோம் - கெட்ட
போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்

நூல் : பாரதிதாசன் கவிதைகள் (1938), நூலாசிரியர் : பாரதிதாசன், பகுதி: புதிய உலகம், பாடல் : 58.

புதியதோர் பாதை வகுப்போம் - நாம் கெட்ட
போரிடும் பாதையைச் சாய்ப்போம் நாம்...

படம் : நாம் (1953), பாடலாசிரியர் : கலைஞர் மு. கருணாநிதி, பாடியவர்கள் : சி.எஸ். செல்லமுத்து, ஏ.எம். ராஜா, நாகூர் எம். அனீபா, எம்.எல். வசந்தகுமாரி, ஜிக்கி, ஏ.பி. கோமளா, டி.ஆர். கெஜலட்சுமி, இசையமைப்பாளர் : சிதம்பரம் எஸ். ஜெயராமன்.



சோலையிலோர் நாள் எனையே
தொட்டிழுத்து முத்தமிட்டான்
துடுக்குத் தனத்தை என் சொல்வேன்

மாலைப் பொழுதில் இந்த மாயம்புரிந்த செம்மல்
வாய்விட்டுச் சிரித்துப் பின்
போய்விட்டானேடி தோழி!

*நூல் : பாரதிதாசன் கவிதைகள் : (1938), பாடல் : 17, தலைப்பு : தலைவி காதல், நூலாசிரியர் : பாரதிதாசன்.*

## ஓடையிலே ஒரு நாள்...

ஓடையிலே ஒருநாள் எந்தன்
இதழ்பறித்து முத்தமிட்டான்
இன்பசுகம் என் சொல்வேன்
வாடைக் குளிரில் இந்தத்
தேகம் அணைத்த செல்வன்
வருகிறேன் என்று சொல்லிப்
போய்விட்டானடி தோழி!

*படம் : ரங்கோன் ராதா (1956) பாடலாசிரியர் : கலைஞர் மு. கருணாநிதி, இசையமைப்பாளர் : டி.ஆர். பாப்பா.*



**வெண்ணிலவைப் பூமியின் மேலே புன்னகையாலே**
**கண்ணெதிரில் காணுகின்றேன் பிரேமையினாலே.**

*படம் : உத்தம புருஷன் (1958), பாடலாசிரியர் : மருதகாசி, பாடியவர்கள் : டி.எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, இசையமைப்பாளர்: ஜி. ராமநாதன்.*



பூஜைக்கு வந்த மலரே வா!
பூமிக்கு வந்த நிலவே வா!

*படம் : பூஜைக்கு வந்த மலதே, பாடலாசிரியர் : கண்ணதாசன்.*

பூமிக்கு வந்த நிலவோ - நீ
பூஜைக்கு வந்த தவமோ
சேமிக்க வந்த பொருளோ - நான்
சேவிக்க வந்த அழகோ.

*படம் : யாகசாலை (1980), பாடலாசிரியர் : கோவி. மணிசேகரன், பாடியவர் : சுரேந்தர், இசையமைப்பாளர் : விஜயரமணி.*



*ராகம் : செஞ்சுருட்டி* *தாளம் : திஸ்ர ஏகதாளம்*

நாலு வயித்தியரும் இனிமேல்
நம்புதற் கில்லை யென்றார்.
பாலத்துச் சோசியனும் - கிரகம்
படுத்து மென்று விட்டார்.

*நூல் : பாரதியார் கவிதைகள் (1917), பகுதி : கண்ணன் பாட்டு, பாடல் : 10*

ஜோசியனை நான் கேட்டுப் பார்த்தேன்.
தோஷமென்கிறான்
சுக்கிரன் மேட்டை சூரியன் பார்த்தது
மோசமென்கிறான்
வைத்தியனை நான் கேட்டுப் பார்த்தேன்
வாதமென்கிறான் - மன்மதன்
வாலிபக் கோளாறு என்றே
பாணம் போடுறான்.

*படம் : மணிமேகலை (1959), பாடலாசிரியர் : தஞ்சை ராமய்யாதாஸ், பாடியவர்கள் : ராஜகோபாலன், டி.வி. ரத்தினம், இசை : ஜி. ராமநாதன்.*



